


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Wednesday, 24th September 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

MR. SPEAKER : நேற்று கேள்வி நேரத்தின்போது ஒரு புதிய முறையை அனுசரித்தோம். ஆனால் பல அங்கத்தினர்களும் தலைவர்களும் இந்த முறை வேண்டாம்’ பழைய முறையே போதும் என்று சொன்னார்கள். ஆகவே பழைய முறையிலேயே தொடர்ந்து போகலாம் என்று நம்புகிறேன்.

(Sri K. Ramachandran stood up in his place.) Probably the hon. Member wants to know what the old ‘ Murai ’ is.

பழைய முறை என்னவென்றால் கேள்விபோட்டவர்களுக்கு தொடர்பாக இரண்டு அல்லது மூன்று உப கேள்விக்கு சந்தர்ப்பம் கொடுப்பது. பின்னால் மற்ற அங்கத்தினர்களுக்கு சந்தர்ப்பம் கொடுப்பது. நாலைந்து உப கேள்விக்கு மேல் கேட்பதற்கு சந்தர்ப்பம் கொடுப்பதில்லை. இதுதான் பழைய முறை.

### *Periyar and Vaigai waters*

* 17 *S.N.Q.*—SRI R. CHIDAMBARA BHARATHI : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the extent of lands anticipated to be irrigated under the Periyar Scheme;

(*b*) the extent of lands actually irrigated over and above limit;

(*c*) whether the Periyar lands are being irrigated only by the Periyar water flowing through Parani;

(*d*) whether the waters of Vaigai are also utilised; if so why; and

(*e*) whether there is any fixed level for the waters in the Vaigai river as there is in the case of Periyar? Where and how the water-level is taken?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The Periyar Project was designed to irrigate an extent of 143,000 acres.

(*b*) The area irrigated is within the above limit and has not exceeded it at any time.

(*c*) & (*d*) They are mostly irrigated with Periyar waters, as Vaigai waters are not depended upon for Periyar lands. But occasionally Vaigai waters are also being used as some of the old ayacut under Vaigai are included in the Periyar ayacut and this is entitled to Vaigai supply with reference to a judgment of the High Court.

(e) At present, there are no arrangements for assessing the flows in Vaigai, and after Vaigai reservoir comes to function, arrangements will be made for assessing the flows.

*Vaigai waters*

* 18 *S.N.Q.*—Sri R. CHIDAMBARA BHARATHI : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) the nature of assurance given to the ayacutdars of the Vaigai river at the time of the construction of the Vaigai Dam; and

(b) the steps taken to implement the assurance?

The Hon. Sri P. KAKKAN : (a) An assurance was given to the ryots that the scheme would be so worked that no portion of the Vaigai flows impounded in the reservoir would be allowed for areas other than those under the Old Vaigai channels and tanks served by them.

(b) Implementation can be done when the project is thrown open for operation.

* 19 *S.N.Q.*—Sri R. CHIDAMBARA BHARATHI : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Government have any proposal to constitute a Committee to formulate a scheme in the Vaigai ayacut lands in Madurai and Ramanathapuram districts using the Vaigai waters?

The Hon. Sri P. KAKKAN : No, Sir.

Sri R. CHIDAMBARA BHARATHI : ஸர், வைகை ஏரியிலிருந்து பேரணைக்கு தண்ணீர் கொண்டு போவதற்கு முன்பாக ராமனாதபுரம் சமஸ்தான முதல் மந்திரியாக முத்திருளப்பிள்ளை அவர்கள் இருந்த காலத்தில் இந்த வைகை அணை கட்ட முடியாது என்று இரண்டு இன்ஜினியர்கள் தெரிவித்ததின் பின்னால் மூன்றாவது இன்சினியர் முயற்சி எடுத்து இந்த பெரியாறு பிராஜக்டைக் கட்டும்போது இதிலிருந்து 90 ஆயிரம் ஏக்கர்களுக்கு மேல் பாசனத்திற்கு தண்ணீர் கொடுப்பதில்லை என்று அப்போதிருந்த சர்க்கார் ஹைகோர்ட்டில் உறுதி கூறியிருக்கிறதா, அப்படி உறுதி கூறியிருக்கும்பொழுது இப்போது லட்சத்தி நாற்பதினாயிரம் ஏக்கர்களுக்கு பாசனத்திற்கு தண்ணீர் கொடுக்கப்படுகிறது. இவ்விதம் முன்னால் கூறியிருந்ததை மாற்றியிருப்பது இப்போதுள்ள சர்க்காரினுடைய கொள்கை விரோதமானதில்லையா என்று அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் கேட்கும் கேள்வியில் அனேகம் கேள்விகள் அடங்கியிருக்கின்றன. இதற்கு எல்லாம் தனித்தனியாக கேள்வி போடும்படி கேட்டுக்கொள்கிறேன்.

Sri R. CHIDAMBARA BHARATHI : ஸார், இபோது கனம் மந்திரி அவர்கள் சொல்லியதிலிருந்து தண்ணீரை இதுவரை அளவு எடுக்கவில்லை என்று தெரிகிறது. அப்படியானால் அவ்விதம் அளவு எடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா ? அப்படியானால் அவ்விதம் அளவு எடுக்கின்ற காலம் வரையினும், வைகை பாசனத்திலிருந்து தண்ணீர் கிடைக்காததினால் விவசாயிகள் அடைந்திருக்கும் நஷ்டத்திற்கு நஷ்ட ஈடு கொடுக்க சர்க்கார் முன் வருமா ?

24th September 1958]

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்களுடைய கேள்வியில் முதல் பகுதிக்கு நான் முதலில் பதில் சொன்னேன். அதாவது வைகை அணைத்திட்டம் முடிந்த பிறகு தான் தண்ணீர் அளவை எடுக்க முடியும். அதற்காக ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற முடிவுக்கு அரசாங்கம் வந்திருக்கிறது. ஆனால் நஷ்ட ஈடு கொடுக்க முடியுமா என்ற கேள்விக்கு முடியாது என்றுதான் சொல்லமுடியும். தண்ணீர் அதிகமில்லாமலிருக்கும்போது கஷ்டமில்லாமல் தண்ணீர் கிடைப்பதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யப்படும்.

SRI V. SANKARAN : ஸார், பெரியாறு திட்டம் ஆரம்பிப்பதற்கு முன் வைகையிலிருந்து நேராக பாசனம் பெறும் இடங்களும் அதில் சேர்க்கப்பட்டன. இந்த நிலங்களுக்கு எல்லாம் தண்ணீர் குறையாமல் கொடுக்க முடியுமா ? இதற்கு தகுந்தபடி சர்க்கார் அளவு செய்திருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN: நான் ஏற்கனவே பதிலில் சொன்னேன். மழை காலத்தில் வீணாகப்போகும் தண்ணீரை மேலும் அவசியத்திற்கு தகுந்தபடி கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்படும்.

SRI R. SHANMUGA RAJESWARA SETHUPATHI : ஸார், இந்த வைகைத் திட்டம் எவ்வளவு காலத்தில் முடிவு அடையும் ?

THE HON. SRI P. KAKKAN : ஒன்றிரண்டு மாதங்களில் முடிவடையும் என்று எதிர் பார்க்கலாம்.

SRI K. RAMACHANDRAN : பெரியாறு அணையினால் தண்ணீர் கொடுக்கப்படும் வைகை ஆயக்கட்டு நிலங்கள் எத்தனை ஏக்கர் ? வைகை பிராஜக்ட் மூலம் தண்ணீர் கொடுக்கப்படும் ஆயக்கட்டு நிலங்கள் எத்தனை ஏக்கர் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : ஏற்கனவே பெரியார் அணை மூலம் லட்சத்தி நாற்பத்திமூவாயிரம் ஏக்கர் நிலங்களுக்கு பாசன வசதி கொடுக்கப்படும் என்றிருக்கிறது.

(Sri K. Ramachandran was standing in his place.)

MR. SPEAKER : If the hon. Member is not satisfied with the answer, he may put a separate question.

SRI R. SHANMUGA RAJESWARA SETHUPATHI : இந்த திட்டம் அமுலுக்கு வந்த பிறகு அளவு எடுக்கலாம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அதற்காக இப்போதே நடவடிக்கை எடுப்பார்களா ? இப்போதே நடவடிக்கை எடுத்தால் இதை அமுலுக்கு கொண்டு வருகிற சமயத்தில் இதைப்பற்றி முடிவு எடுப்பதற்கு சௌகரியமாக இருக்கும் என்று நினைக்கிறேன். ஆதலால் இப்போதே அதற்கான நடவடிக்கை எடுப்பதற்கு அங்குள்ள இஞ்சினியர்களுக்கு உத்தரவு கொடுக்க சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்போதே ஏற்பாடு செய்துகொண்டு தான் இருக்கிறோம்.

SRI S. RAMAKRISHNA THEVAR : கனம் சபா நாயகர் அவர்களே, இப்போது வைகை அணைக்கட்டு மூலமாக தனியாக 20 ஆயிரம் ஏக்கர்களுக்கு இந்தத் தண்ணீரை உபயோகப்படுத்தப் போவதாக சொன்னார்கள். ஆனால் இப்போது பரமக்குடி, ராமநாதபுரம், திருவாடனை தாலூகாக்களில் நாலைந்து மாதங்கள் தண்ணீர் இல்லாமல் இருக்கிறது. ஆகவே. . .

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் அவர்கள் ஒரு சிறிய பிரசங்கம் செய்யக்கூடாது, கேள்வி ரூபமாக கேட்க வேண்டும்.

[24th September 1958

SRI S. RAMAKRISHNA THEVAR: ஆகவே இவ்விதம் தண்ணீர் இல்லாமல் இருக்கும்போது அவர்களுக்கு உடனடியாக ஏன் தண்ணீர் கொடுக்கவில்லை ?

THE HON. SRI P. KAKKAN: கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுவதிலிருந்து நான் தெரிந்து கொள்வதென்னவென்றால் வீணாகப் போகும் தண்ணீரைத் தடுத்து நிறுத்தி அவர்களுக்கு வேண்டியபோது கொடுத்து உதவி செய்வார்களா என்று கேட்கிறார்கள் என்று நினைக்கிறேன். அது பற்றி பரிசீலனை செய்யப்படும்.

SRI R. CHIDAMBARA BHARATHI: ஸார் பெரியாறு கட்டுவதற்கு முன்னால் வைகை பாசனத்தின் மூலம் 11 ஆயிரம் ஏக்கர்களுக்கு தண்ணீர்த் கொடுக்கப்போவதாக ஒரு உறுதி சொன்னார்கள். இப்போது அந்த உறுதி ஏன் அனுசரிக்கப்படவில்லை ?

THE HON. SRI P. KAKKAN: மழை பெய்வதை பொறுத்துத்தான் தண்ணீர் கிடைக்கும்.

*Transport Department*

*20 *S.N.Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI: Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether any recruitment was made since the appointment of the Committee constituted for recruitment of staff in the Transport Department; and

(*b*) whether any recruitment was made for the Nagercoil Transport Department and if not, why?

THE HON. SRI V. RAMAIAH: (*a*) Yes, Sir.

(*b*) The answer to the first part of the question is in the affirmative. The second part does not arise.

SRI T. S. RAMASWAMY PILLAI: May I know the authority which recruited them after the Government notification?

THE HON. SRI V. RAMAIAH: In Kanyakumari district?

SRI T. S. RAMASWAMY PILLAI: Here.

THE HON. SRI V. RAMAIAH: In Madras one batch of recruitment was done by the Honorary Director. The other was through the approval of the Director done by the Deputy Director.

9 10 a.m.

SRI T. S. RAMASWAMY PILLAI: Sir, this Committee was appointed by the Government and a notification was issued, when charges of nepotism and favouritism were made on the floor of this House. So, may I know why, even after the appointment of this Committee, the Director of Transport has disobeyed the order of the Government by recruiting them?

THE HON. SRI V. RAMAIAH: There is no question of disobeying the order of the Government. The Committee was constituted and discussion is going on on the terms of reference. As it is not finalised, to meet some emergency needs, a few appointments had been made.

24th September 1958]

**Sri A. V. P. ASAITHAMBI** : இந்த போக்குவரத்து இலாகாவிற்கு ஆட்களை வேலைக்கு எடுக்கும்போது எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச் மூலமாக எடுக்கிறார்களா ? அல்லது வேறு எந்த முறையில் எடுக்கிறார்கள் ? எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச் மூலமாக எடுக்கவில்லையென்று சொன்னால், இந்த ஸ்தாபனத்தை வைத்திருப்பது அர்த்தமில்லாதது என்பதை சர்க்கார் அறியுமா ?

**The Hon. Sri V. RAMAIAH** : இந்த இலாகாவிற்கு வேண்டிய ஆட்களை நியமனம் செய்யும்போது எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச் மூலமாக வரக் கூடிய அபேட்சகர்களும் பரிசீலனை செய்யப்படுகிறார்கள்.

Sri T. T. DANIEL : May I know from the Hon. Minister, whether any drivers have been selected recently by the Director in the Kanyakumari district and if so, are they selected through the Employment Exchange?

The Hon. Sri V. RAMAIAH : My information is that in the Kanyakumari district six drivers and six conductors were selected through the Employment Exchange. That was not reported to the Committee because to meet an immediate requirement, they were appointed.

Sri T. S. RAMASWAMY PILLAI : Sir, in view of the Government Order and in view of the recruitment made contravening that order, will the Government please review the whole appointment?

The Hon. Sri V. RAMAIAH : A few persons were appointed which were later approved by the Government. I do not think in future there will be any room for direct recruitment without referring it to the Committee.

*Community Development and National Extension Service Blocks in North Arcot district*

* 21 *S.N.Q.*—Sri S. M. ANNAMALAI : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether the Hon. the Minister for Electricity went through the records of the offices of the Community Development and National Extension Service Blocks in the North Arcot district during 1st July 1958;

(*b*) the names of the offices visited by him;

(*c*) whether he has submitted any report to the Chief Minister in this regard; and

(*d*) whether any false records were seized?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) No.

(*b*) Does not arise.

(*c*) Does not arise.

(*d*) Does not arise.

**Sri S. M. ANNAMALAI** : சென்ற ஜூலை மாதத்தில் மின்சார அமைச்சர் அவர்கள் சமுதாய நலத் திட்ட அலுவலகங்களைப் பார்வையிட்டபோது சில தஸ்தாவேஜுகளைப் பார்வையிட்டார். அப்போது அவர் கிராம சர்வே சரிவர எடுக்கப்படவில்லை என்பதைக் கண்டு கொண்டார். இப்போது இல்லை என்று சொல்வதன் அர்த்தம் என்ன என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஜூலை மாதத்தில்தான் போகவில்லை என்று மந்திரி அவர்கள் சொல்லுகிருர்கள். அதைத் தான் நான் சொன்னேன்.

*Channel from Sathanur Dam*

* 459 *Q.*—SRI K. VINAYAGAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) how much of water is allowed in the channel leading to Thirukoilur from Sathanur Dam for irrigation purposes;

(*b*) whether betterment tax is collected from the ryots of lands abutting the Thirukoilur channel; and if so, at what rate; and

(*c*) whether the channel is wide and deep enough to take more water?

THE HON. SRI P. KAKKAN : (*a*) There is no channel leading to Thirukoilur (South Arcot district) from Sathanur Dam.

(*b*) & (*c*) Does not arise.

SRI K. VINAYAKAM : சாத்தனூர் டாமிலிருந்து திருக்கோயிலூருக்கும், அதன் பக்கத்திலுள்ள நிலங்களுக்கும் தண்ணீர் கொடுப்பதற்கு அரசாங்கத்திடம் திட்டமேயில்லையா ?

THE HON. SRI P. KAKKAN : தண்ணீர் உண்டு. அதற்கு ஒரு கால்வாய் வெட்டவில்லை என்றுதான் சொன்னேன். சாத்தனூருக்கு 4½ மைலுக்கு அப்பால் ஒரு அணை கட்டப்படப்போகிறது. அதிலிருந்து தண்ணீர் கொடுக்கப்படும்.

SRI M. KANDASAMI PADAYACHI : சாத்தனூர் அணைக்கட்டுத் திட்டத்தினல் பழைய ஆயக்கட்டு நிலங்களுக்குப் பாதகம் ஏதும் ஏற்படாமல் இருக்க ஒரு திட்டத்தை வகுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : எற்கெனவே இருந்த பழைய ஆயக்கட்டு நிலங்களுக்கு பாதகமில்லாமல் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது.

SRI K. R. NALLASIVAM : திருக்கோயிலூரிலுள்ள பாசன நிலங்களுக்கு அபிவிருத்தி வரி வசூலிக்கப்படாவிட்டாலும், அபிவிருத்தி வரியை நிர்ணயிக்க அதிகாரிகள் போடப்பட்டிருந்தார்களே, அவர்கள் குறைந்த பட்ச வரியாகவும், அதிக பட்ச வரியாகவும் எவ்வளவு விதிக்க முடியும் என்று தெரிவித்திருக்கிருர்கள் ?

THE HON. SRI P. KAKKAN : அபிவிருத்தி வரி உண்டு. ஆனல் எவ்வளவு என்பதற்கு தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI A. GOVINDASAMY : சாத்தனூர் திட்டம் அமுலுக்கு வந்ததினல் திருக்கோயிலூர் வட்டம், மணலூர்பேட்டை குறுவட்டத்திலே 4,000 ஏக்கர் பாசன வசதி அடையும் என்று தெரிவிக்கப்பட்டது. இப்போது மணலூர்பேட்டையில் எவ்வளவு ஏக்கர் பாசனத்திற்கு வந்திருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் குறைத்துச் சொல்லுகிருர். நாலாயிரத்து இருநூறு ஏக்கர் பாசனத்திற்கு வரும்.

"The project was thrown open for irrigation on 10th November 1957 and so far 3,200 acres have received supply."

24th September 1958]

### *State lottery*

* 462 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether it is a fact that he has given a statement to the press that there is a proposal to start a State lottery to raise funds for the Second Five-Year Plan?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that neighbouring States like Orissa are conducting State lotteries and will the Government also start a State lottery to finance the Second Five-Year Plan?

THE HON. SRI C. SUBRAMANIAM : For that the hon. Member need not put that statement into my mouth. I do not think we intend following the neighbouring State in this respect.

### *Agricultural Engineering Colleges*

* 471 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்தில் எங்கேனும் விவசாய இன்சினீரிங் கல்லூரி இருக்கிறதா ?

(ஆ) இல்லையானால், இதை உடனடியாக ஏற்படுத்த உத்தேசமுண்டா ?

(இ) இப்போதுள்ள கல்லூரிகளிலாவது விவசாய இன்சினீரிங் வகுப்பு ஆரம்பிக்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*), (*b*) & (*c*) No.

SRI A. VEDARATHNAM : விவசாய என்ஜினீயரிங் இப்போது இருக்கிற உணவு பற்றாக்குறையைப் போக்க அவசியம் அல்லவா ? எனவே, நம்முடைய என்ஜினீயரிங் காலேஜில் ஒரு விவசாயப் பகுதியையோ அல்லது கோவையில் இருக்கிற விவசாயக் கல்லூரியில் விவசாய என்ஜினீயரிங் பகுதியையோ ஆரம்பிக்கும் உத்தேசம்உண்டா ? அப்படியானால் எப்போது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : என்ஜினீயரிங் காலேஜில் ஒரு விவசாயப் பகுதியை ஏற்படுத்துவது பற்றி பரிசீலனை செய்யப்பட்டது. இந்தப் பரிசீலனையின் காரணமாக, ஒரு தனிப்பகுதி ஆரம்பிக்கவேண்டிய அவசியமில்லை, வேண்டிய அளவு என்ஜினீயர்கள் பாஸ் செய்த பிறகு விவசாய முறையில் பயிற்சி கொடுக்கமுடியும், ஆகவே, தனிப்பகுதி ஒன்று தேவையில்லையென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

SRI S. LAZAR : இப்போது நமது மாகாணத்தில் போதிய விவசாய என்ஜினீயர்கள் இருக்கிறார்களா ? இவர்கள் வேறு இடங்களுக்கு அனுப்பப்பட்டு தயாரிக்கப்படுகிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது வேண்டிய அளவிற்கு பி.எ. பாஸ் செய்தவர்கள் இந்த விவசாய முறையில் பயிற்சி கொடுக்கப்பட்டு விவசாய என்ஜினீயர்களாக பணியாற்றி வருகிறார்கள். இப்போது போதிய அளவிற்கு இருக்கிறார்களா என்பதற்கு ஒரு தனிக் கேள்வி போட்டால் சொல்ல முடியும்.

[24th September 1958

*Drinking water-supply in Theni firka*

* 472 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலூகா, தேனீ தொகுதியில், ஸ்ரீரங்கபுரம், பாலகிருஷ்ணபுரம், அம்பாசமுத்திரம் ஆகிய ஊர்களுக்கு குடி தண்ணீர் பம்பு வைக்க கோரிக்கை ஏதேனும் வந்ததுண்டா ? அப்படியானல் அது எப்பொழுது நிறைவேற்றப்படும்.?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir. Estimates for the construction of overhead tanks in the villages are under technical scrutiny.

SRI N. R. THIAGARAJAN : ஸார், சென்ற 18 மாதங்களாக, 3 திட்டங்கள் மாத்திரமல்லாமல், 30 திட்டங்கள் கலெக்டர் ஆபீஸில் கவனிக்கப்படாமல் இருக்கின்றன. அவைகளைச் சீக்கிரமாக அனுப்பும்படி கலெக்டருக்கு எழுதி உடனடியாக நடவடிக்கை எடுக்க முடியுமா ? தமிழகத்தில் மொத்தம் 27 லட்சம் ரூபாயில், மதுரை ஜில்லாவிற்கு 53 ஆயிரம் ரூபாய் தான் செலவழிக்கப்பட்டிருக்கிறது. இனியாவது சீக்கிரமாகச் செய்ய வேண்டுமென்று உத்திரவு போடுவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஏற்கெனவேயே கலெக்டர் இதைப்பற்றி வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிருர். ஸ்ரீரங்கபுரத்திற்கு 28,000 ரூபாய்க்கு டெக்னிகல் ஸேங்ஷன் அனுப்பப்பட்டிருக்கிறது. பாலகிருஷ்ணபுரத்திற்கு அஸிஸ்டெண்ட் என்ஜினீயரை எஸ்டிமேட் போடச் சொல்லியிருக்கிருேம். அம்பாசமுத்திரத்திற்கு 23,000 ரூபாய்க்கு எஸ்டிமேட் போடப்பட்டு எடுத்துக்கொள்ள பிரயத்தனப்படுகிறது.

*Dam across Vaipparu in Sattur taluk*

* 473 Q.—SRI N. R. THIAGARAJAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether there is any proposal to construct a dam across Vaipparu in Sattur, Ramanathapuram district?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

SRI N. R. THIAGARAJAN : தமிழகத்திலே ஒரு பெரிய நதியாகிய வைப்பாறு சமுத்திரத்தில் போகிறது. இந்த ஆற்றின் மீது அணை கட்டுவதைப்பற்றி பரிசீலனை செய்து திட்டத்தை நிறைவேற்றுவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : இந்த வைப்பாற்றின் குறுக்கே அணை கட்டுவதைப்பற்றி பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. கண்மாய், குளங்கள் மூலமாக எவ்வளவு தண்ணீர் கொடுக்கமுடியும் என்று பார்த்திருக்கிருர்கள். அப்படிப் பார்த்ததில், 1941–44-லிலும், 1951–52-லும் தண்ணீர் வந்ததைப் பார்த்தபோது மிகவும் குறைவாக இருந்ததால் திட்டத்தை எடுத்துக்கொள்ளவில்லை. கண்மாய், குளங்கள் மூலமாகத் தண்ணீர் கொடுப்பதற்கு 3 லட்சம் ரூபாய்க்கு ஒரு திட்டம் தயார் செய்யப்பட்டது. அதனுல் 150 ஏக்கருக்குத்தான் தண்ணீர் பாயலாம் என்று முடிவு செய்திருக்கிருர்கள். அதுவும் செலவு அதிகப்படியாக ஆவதினுல் பரிசீலனை செய்து கைவிடப்பட்டது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

*Darangadhara Chemical Works*

9-20 a.m.

* 474 Q.—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(a) whether any representation has been made for the supply of electricity to the Darangadhara Chemical Works that is to be established in the Tirunelveli district; and

(b) the details of the action taken thereon?

24th September 1958]

THE HON. SRI V. RAMAIAH : (a) Yes, Sir.

(b) The Madras State Electricity Board has agreed to give, subject to the usual staggering, etc., restrictions, H.T. supply to the works up to a maximum demand of 32,000 K.W. after the commencement of operation of the Periyar Power Station and also after the construction of the 110 K.V. line from Periyar to Arumuganeri.

SRI M. S. SELVARAJAN : உத்தேச மின்இணைப்பு திட்டத்தின் செலவு என்ன ? என்னென்ன நிபந்தனைகளுக்குட்பட்டு இது அனுமதிக்கப் பட்டிருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : இதற்குத் தனிக் கேள்வி போட வேண்டும்.

SRI S. NAGARAJA MONIGAR : "தாரங்கதரா" என்பது என்ன என்று விளங்கவில்லை.

THE HON. SRI V. RAMAIAH : அது கம்பெனியின் பெயர்.

*Velanganni-Vedaranyam Road*

* 475 Q.—SRI A. VEDARATHNAM : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வேளாங்கண்ணி–வேதாரண்யம் ரஸ்தா கப்பி போடும் திட்டம் எந்த நிலையில் இருக்கிறது ?

(ஆ) இந்த ரஸ்தாவில் உள்ள கள்ளிமேடு கிராமத்தில் அடைப் பாற்றுக்குப் பாலம் கட்டும் வேலை துவக்கியாகிவிட்டதா ? இல்லையானல், எப்போது ஆரம்பமாகும் ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (a) The detailed estimate for the work has been sanctioned and the work will be taken up for execution during the current year.

(b) No, Sir. The detailed estimate for the work has been finalised. As soon as it is sanctioned by the competent authority, steps will be taken to execute the work expeditiously.

SRI A. VEDARATHNAM : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்த ரஸ்தாவுக்கு "டாப் பிரையாரிட்டி" கொடுக்கப்பட்டிருந்தும், இப்பொழுது இரண்டு ஆண்டுகள் ஆகியும் ஒரு வேலையும் நடக்காமல் இருப்பதற்குக் காரணம் என்ன ? இப்படியே காலத்தைக் கடத்தி இந்தத் திட்டத்தை கைவிட்டுவிடவேண்டுமென்ற உத்தேசம் அரசாங்கத்துக்கு உண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் 1957–58-ல் இந்த வேலையை "கிராண்ட்ஸ் வொர்க்ஸ்"-ன் கீழ் எடுக்கும்படியாகத் திட்டம் இருக்கிறது. முதலில் போட்ட எஸ்டிமேட்படி 11·6 லட்சம் செலவாகும். ஆனல் ஒதுக்கியிருக்கும் தொகை ரூ. 3·1 லட்சம். ஆனல், இப்பொழுது திரும்பவும் ரிவைஸ் செய்து ரூ. 5·3 லட்சம் ஆக கணக்கிடப் டிருக்கின்றது. இதை என்ன முறையில் செய்யலாம் என்பதைப்பற்றி தலைமை எஞ்சினியர் நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறார்கள்.

[24th September 1958

*Strike Notice by Teachers*

* 476 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு ஜில்லா, திருப்பத்தூர் இராமகிருஷ்ண உயர் நிலைப்பள்ளி ஆசிரியர்கள் 1958–ஆம் பிப்ரவரிமீ 10உயில் வேலை நிறுத்த நோட்டீஸ் மேனேஜ்மெண்டாருக்கு அனுப்பியுள்ளார்களா ?

(ஆ) அப்படியானால், அவர்களின் கோரிக்கை என்ன ?

(இ) அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) The teachers requested that they might be paid their arrear salary from 1st December 1957 and enhanced dearness allowance from 1st November 1956 and that their salary might be paid regularly every month.

(*c*) The teachers have since been paid the arrears of salary from December 1957 to February 1958 and arrears of dearness allowance at enhanced rate from November 1956 to February 1958.

SRI V. K. KOTHANDARAMAN : தனியார் நடத்தும் பாடசாலைகளிலே அடிக்கடி இது போன்று மாதக்கணக்கிலே சம்பளம் கொடுக்கப்படாதது மட்டும் அல்ல, குறைந்த சம்பளத்தைக் கொடுத்து அதிகச் சம்பளத்திற்கு ரசீது வாங்கிக்கொள்ளும் நிலைமை இருக்கிறது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

MR. SPEAKER : இந்தப் பள்ளிக்கூடத்திலேயா ?

SRI V. K. KOTHANDARAMAN : ஆகையால் இந்த உபாத்தியாயர்களுக்கு நேரடியாகச் சம்பளம் கொடுப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பல புகார்கள் வந்தன. குறைந்த சம்பளத்தைக் கொடுத்து அதிகச் சம்பளத்திற்கு ரசீது வாங்குவதாக உபாத்தியாயர்களே புகார் செய்யவில்லை. கனம் அங்கத்தினருக்கு புகார் எப்படி வந்ததோ எனக்குத் தெரியாது.

*Filaria*

* 477 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state the steps taken to control Filaria?

THE HON. SRI M. A. MANICKAVELU : A paper [a] is placed on the table of the House.

SRI N. K. PALANISAMI : கும்பகோணம், காஞ்சீபுரம் போன்ற பிரதேசங்களில் சர்க்கார் எடுத்த நடவடிக்கையின் காரணமாகவும், மறுபடியும் மறுபடியும் இந்த வியாதி வருவதன் காரணமாகவும் விசேஷ நடவடிக்கை எடுக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : விசேஷ நடவடிக்கைதான் எடுக்கப்பட்டு வருகிறது. (சிரிப்பு.) முன்னே "கன்டிரோல் ஸ்கீம்" என்று இருந்தது. இப்பொழுது "எரோடிகேஷன் ஸ்கீம்" என்ற பெயரில், அதாவது அதை ஒழித்துக் கட்டிவிடவேண்டுமென்ற வகையில் 4 யூனிட்டுகள் வேலை செய்துகொண்டு வருகின்றன. ஐந்தாவது யூனிட்டை ஆரம்பிக்கப் போகிறோம். ஆறு யூனிட்டுகள் வைத்து நடத்தி இதைத் தீர்த்துக் கட்டிவிடுவது என்று உத்தேசித்திருக்கிறோம்.

---

[a] Printed as Appendix I on pages 662–663 infra.

24th September 1958]

SRI T. SAMPATH : Sir, is the Hon. Minister aware of the consequences which followed after the introduction of this anti-filarial scheme in Kumbakonam and after the spraying of insecticide called ' Diadrin ', namely, prevalence of typhoid in epidemic form and other diseases like dysentery, diarrhœa and jaundice? May I know also what steps the Government propose to take to avoid recurrence of these diseases?

THE HON. SRI M. A. MANICKAVELU : The spray which was used for killing the mosquito larvæ, also killed other insects which lived upon the mosquitoes. So, in such places, the flies increased in number. But now, other methods are being adopted by which, I think, that state of affairs will not recur.

SRI M. JAGANNATHAN : Sir, from the statement placed on the table of the House, I find that one post of Research Officer for each of the two controlling units at Vellore and Chidambaram has been sanctioned. But they are kept vacant. May I know the steps that the Government have taken so far to get qualified Research Officers to fill up these vacant posts?

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, there is dearth of qualified and trained Health Officers. We are, however, trying to find out suitable officers for being posted to those units.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : அரசாங்கம் பரிசீலனை செய்ததற்குப் பிறகு அதிகமாக கேஸ்கள் ஏற்பட்டிருப்பதாக கனம் அங்கத்தினர் சொன்னார். பரிசீலனைக்கு முன்னால் இருந்தது எவ்வளவு ? பரிசீலனைக்குப் பிறகு இருந்தது எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU : புள்ளி விவரங்கள் இல்லை, ஆனால் பரிசீலனைக்குப் பிற்பாடு நோய் குறைவாகத்தான் இருக்கிறதே தவிர, அதிகமாய் இல்லை.

## *Highways Department*

* 478 Q.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) how many Junior Engineers and Supervisors were promoted as Assistant Engineers in the Highways Department in 1957–58; and

(b) how many of them are Harijans?

THE HON. SRI P. KAKKAN : (a) Nineteen Junior Engineers and 8 Supervisors.

(b) None.

SRI M. JAGANNATHAN : அர்ஜுனன் என்ற ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த ஜுனியர் எஞ்ஜினியர். . .

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I deprecate reference to individual grievance being made on the floor of the House and I would request the hon. Member not to make any reference to any individual grievance on the floor of the House. No doubt recruitments are made on the basis of communities. With reference to

Harijans even with regard to promotions, if the hon. Member thinks that the community should play a part, it is wrong and I think that it should not be encouraged.

MR. SPEAKER : I want to make the position clear. All these days we have been observing the rule that reference to individual grievance should not be made on the floor of this House. So, the hon. Member would be well advised not to persist in such questions. He may ask some other question.

SRI M. JAGANNATHAN : இந்த நெடுஞ்சாலை இலாக்காவிலே ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கு, போதிய தகுதியிருந்தும், பதவி உயர்வு கொடுக்காமல் இருந்தது உண்மையா ?

THE HON. SRI P. KAKKAN : உண்மை என்று சொல்ல முடியாது. இருந்தாலும் கனம் அங்கத்தினர் கேட்பதினால் சொல்லுகிறேன். இந்த இலாக்காவிலே ஒரே ஒரு ஹரிஜன் இருந்தார். இதைக் காட்டிலும் அதிகச் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்ததால் அவர் எடுத்துக்கொள்ளப்படவில்லை.

*Supply of electricity*

* 479 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the number of—

(i) agricultural;

(ii) industrial;

(iii) domestic; and

(iv) street lighting

services that were connected up under the Pykara Electricity System during the second half-year of 1957–58; and

(*b*) the number of villages to which electricity was extended under the same system for that period?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) 2,217 agricultural, 107 industrial, 3,605 domestic, and 16 street lighting services were connected up in the Pykara Electricity System during the second half of 1957–58; and

(*b*) One hundred and seventy-three villages were electrified in the system during the half-year.

SRI M. JAGANNATHAN : இன்னும் அதிகமான அளவுக்கு விளக்கு வசதிக்காகவும் விவசாயத்திற்காகவும் மின்சாரம் தேவைப் படுகிற காரணத்தினால், இன்னும் அநேகம் கிராமங்களுக்கு மின்சாரத்தை விஸ்தரிக்க சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : அதிகமாக விஸ்தரிப்பு நடந்து கொண்டிருக்கிறது என்பது கனம் அங்கத்தினருக்குத் தெரியும். எல்லா அங்கத்தினர்களுக்கும் தெரியும். இன்னும் அதிகப்படுத்தவேண்டும் என்று நாம் ஆசைப்படும்பொழுது, விரும்புகிற அளவுக்கு சாமான்கள் (மெட்டீரியல்ஸ்) கிடைக்கவில்லை. நம்முடைய மாகாணத்தைப் பொறுத்த வரையில் மற்றவர்கள் கண்டு பெருமைப்படக்கூடிய அளவுக்கு விஸ்தரித்திருக்கிறோம்.

24th September 1958]

SRI S. LAZAR: திட்டப்படி எத்தனை கிராமங்களுக்கு மின்சார வசதி அளிக்கப்பட்டிருக்க வேண்டும்? அது பூர்த்தியாகிவிட்டதா?

THE HON. SRI V. RAMAIAH : இந்தக் குறிப்பிட்ட லிஸ்டத்தைப் பற்றிச் சொல்ல முடியாது. பொதுவாக, போட்டிருக்கும் திட்டங்களுக்கு அதிகமாகவே விஸ்தரிப்பு நடந்துகொண்டு வருகிறது.

SRI J. MATHA GOWDER : மரத்தை நட்டவனுக்கு பழம் கிடைக்காமல் இருப்பது போல, நீலகிரி ஜில்லாவிலே மின்சார உற்பத்தி செய்தும் அந்த ஜில்லாவின் தேவையைப் பூர்த்தி செய்யாமல் இதர ஜில்லாக்களுக்கு மின்சார வசதி அளிக்கப்பட்டு வருகிறது. ஆகவே முதலில் நீலகிரி ஜில்லாவுக்குக் கொடுத்துவிட்டு, பிறகு மற்ற ஜில்லாக்களுக்குக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI V. RAMAIAH : இந்த மின்சார விஸ்தரிப்பைப் பொறுத்தவரையில் நீலகிரி ஜில்லாவிலே பல கோடி ரூபாய் செலவழித்து வருகிறோம். அந்த ஜில்லாவிலுள்ள தேவையையும் மனதில் கொண்டு, கனம் அங்கத்தினருடைய ஆசையைப் பூர்த்தி செய்யக்கூடிய வகையில் தான் இன்றைக்கு விஸ்தரிப்பு நடந்துகொண்டு வருகிறது.

*Madurai Municipality*

* 480 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Local Administration be pleased to state whether there is any proposal to upgrade the Madurai Municipality into a Corporation? 9-30 a.m.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : No, Sir.

SRI A. A. RASHEED : In view of the importance of Madurai as the capital of Pandya Nad, will the Government reconsider their decision?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : At present we are not treating it as Pandya Nad, and we are not treating Madurai as the caiptal of Pandya Nad. We will give it due consideration.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : மதுரை முனிசிபாலிடியை கார்ப்பரேஷன் ஆக்குவதற்கு என்ன தகுதி இருக்க வேண்டுமோ அந்தத் தகுதி இல்லை என்று சர்க்கார் நினைக்கிறதா? ஏன் அதைக் கார்ப்பரேஷன் ஆக்குவதற்கு முன் வரவில்லை?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : பொருளாதார நிலை தகுதியில்லை என்றுதான் அரசாங்கம் கருதுகின்றது.

SRI K. VINAYAKAM : Sir, what are the standards or tests which a municipality has got to fulfil before it becomes entitled to conversion into a corporation?

MR. SPEAKER : The hon. Member may put a separate question.

SRI V. K. KOTHANDARAMAN : ஒரு கார்பரேஷன் ஏற்படுத்த வேண்டுமென்றால் எவ்வளவு ஜனத்தொகை? (சிரிப்பு.)

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் ஆங்கிலத்தில் கேட்டதை தாங்கள் தமிழில் கேட்கிறீர்கள். (சிரிப்பு.)

[24th September 1958

*Andhra Mahila Sabha*

* 481 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) how much grant has been given this year to the Andhra Mahila Sabha and for what purpose ; and

(*b*) whether similar grant is given to Kerala Samaj or Karnatak Association in Madras?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) A grant of Rs. 1 lakh has been sanctioned to the Andhra Mahila Sabha towards the construction of an operation theatre in a surgical ward in Andhra Mahila Sabha Nursing Home, Madras.

(*b*) No, Sir.

SRI K. VINAYAKAM : Sir, will the Hon. Minister be pleased to enlighten this House whether similar concessions are given by the Andhra State for any institutions sponsored by the Madras State or Tamilians in Andhra State?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, it is not an Andhra institution. It is a Madras institution serving all people. If any person is prepared to start an institution like this, certainly he will get the help of the Madras Government.

SRI A. A. RASHEED : Sir, is it a fact that only Andhra and Telugu students are preferred for admission to nursing and other courses run by this Andhra Mahila Sabha?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not think, Sir, it is correct. All students are admitted.

*Ceiling on landholdings*

* 482 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state when will the Government be bringing in legislation fixing ceilings on landholdings?

THE HON. SRI M. A. MANICKAVELU : The matter is being considered.

SRI N. K. PALANISAMI : அதிக உணவு உற்பத்திக்கும், தொழில் அபிவிருத்திக்கும், நிலஉடமைக்கு அதிகபட்ச உச்ச வரம்பும், குறைந்தபட்ச உச்சவரம்பும் கட்டவேண்டுமென்ற திட்ட கமிஷன் சிபார்சை அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருக்கிறார்களா ? அப்படியானால், இது வரையில் என்ன ஆரம்ப நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

MR. SPEAKER : The answer is that the matter is under consideration.

THE HON. SRI M. A. MANICKAVELU : A draft Bill has been prepared and sent to the Government of India. The Government of India have suggested certain amendments. They are now being considered.

24th September 1958]

SRI A. GOVINDASAMY : அதிக நிலம் வாங்கக்கூடாது என்று ஒரு சட்டம் வரப்போவதாக கனம் அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். அந்த சட்டம் வருவதன் மூலம் நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டப்பட்டு அதிக நிலம் வாங்குவது தடுத்து நிறுத்தப்படுமா ? அந்த சட்டத்தை உடனடியாகக் கொண்டுவர முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Future "ஸீலிங் " பற்றிதான் நான் சொன்னேன். அந்த " பில் " இப்பொழுது பரிசீலனையில் இருக் கிறது.

SRI T. KARIA GOUNDER : சென்னை மகாணத்தில் உள்ள ஜனத்தொகை எவ்வளவு ? நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டினால், தலை ஒன்றுக்கு எவ்வளவு ஏகர் வரும் என்பதை அரசாங்கம் தெரிவிக்க முன்வருமா ?

MR. SPEAKER : The hon. Member may put a separate question.

SRI S. LAZAR : நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவதற்கும், உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கும் நேரடியான சம்பந்தங்கள் யாவை ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதுபற்றி பலபேர்கள் பலவிதமாக கருதுகிறார்கள். அதில் எது சரியானது, எந்தக் கோணத் தோடு பார்ப்பது சரி என்பதையெல்லாம் ஆராயவேண்டியிருக்கிறது. அதனால் கொஞ்சம் இது விஷயத்தில் தாமதம் ஆகிறது.

SRI N. R. THIAGARAJAN : நிலத்திற்கு மட்டும் உச்சவரம்பு கட்ட வேண்டும் என்று கூக்குரல் பலமாக இருக்கிறதே. மற்ற சொத்து சுதந்திரம் இவைகளுக்கும் உச்ச வரம்பு கட்டப்படுமா ? அழகு, அறிவு, ஆற்றல் இவற்றிற்கு எல்லாம் உச்சவரம்பு கட்டப்படுமா ?

MR. SPEAKER : The question is out of order.

*Kallaru Scheme*

* 483 *Q.*—SRI K. RAMACHANDRAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether there is any scheme by name Kallaru Scheme pending execution with the Government;

(*b*) if so, the detaills of the scheme with its estimated cost; and

(*c*) when the scheme will be taken up?

THE HON. SRI P. KAKKAN : (*a*) There is such a scheme but it is not pending execution.

(*b*) & (*c*) Do not arise.

SRI K. RAMACHANDRAN : சென்ற சட்டசபைக் கூட்டத் தொடரில் முன்பு இருந்த மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் இந்த திட்டம் பரிசீலிக்கப்பட்டு எடுத்துக்கொள்ளப்படும் என்று ஒரு " ஸ்டேட்மெண்டு " கொடுத்திருக்கிறார்கள் பட்ஜெட் விவாதத்தின்போது. அது எப்பொழுது வரும் ?

MR. SPEAKER : The hon. Member is not right in referring to what a previous Minister said.

THE HON. SRI P. KAKKAN : அங்கத்தினர் அவர்கள் சொன்னதுபோல ஏற்கெனவே இருந்த கனம் மந்திரி அவர்கள் இந்தத் திட்டத்தை பரிசீலனை செய்வதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். பிற்பாடு, நாம் மத்திய சர்க்காரிடம், நம்முடைய சர்க்காரையும் கேரள சர்க்காரையும்

[24th September 1958

சேர்ந்த என்ஜினியர்கள் போய் பரிசீலனை செய்யவேண்டுமென்று சொல்லியிருந்தோம். அவர்கள் அதை ஒத்துக்கொள்ளவில்லை. மறுபடியும் பிளானிங் கமிஷனுக்கு எழுதி, செண்டிரல் வாடர் பவர் கமிஷன் மதராஸ், திருவாங்கூர் சர்க்கார்களின் ஒத்துழைப்பின் பேரில் பரிசீலனை செய்வதாக சொல்லியிருக்கிறார்கள்.

DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN : மேற்கு பெரியாறு என்ற இடத்தில் இன்னும் அதிகமாக தண்ணீர் தேக்கிக்கொண்டு வர முடியும் என்று சொல்லப்படுகிறது. கல்லார் ஒரு தனித் திட்டம். இனி மேல் அது பரிசீலிக்கப்படும் என்றால், மேல் பெரியாறு என்ற இடத்தில் அதிக தண்ணீர் தேக்கலாம். அதை திருப்பிக்கொடுக்க கேரள சர்க்கார் முன்வந்திருக்கிறார்களா ? அதுபற்றி பேச்சு வார்த்தைகள் நடக்கின்றனவா ?

MR. SPEAKER : This supplementary does not arise out of the main question. The hon. Member may put a separate question.

SRI K. RAMACHANDRAN : இந்தத் திட்டத்தின் மூலம் பயனடையக் கூடிய பகுதிகள் யாவை என்பதைச் சொல்லமுடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : எந்தப் பகுதி என்று சொல்ல முடியாது. இருந்தாலும், மதுரை ஜில்லா மேற்குப் பகுதியாக இருக்கலாம்.

MR. SPEAKER : ஸ்ரீமதி சௌந்திரம் ராமச்சந்திரன் கேட்ட கேள்விக்கு கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்லுவதாயிருந்தால், எனக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லை.

*New bus routes in North Arcot district*

* 484 *Q*.—SRI P. S. SANTHANAM : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the number of applications received for the opening of new bus routes in the North Arcot district in 1957–58 ;

(*b*) of these, how many are new applicants and how many are bus operators with the existing bus permits ; and

(*c*) of these how many are Harijans?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) 229.

(*b*) (i) 115 and (ii) 114.

(*c*) 1 (new entrant).

SRI P. S. SANTHANAM : " மார்க் லிஸ்டத்தை " நீக்கிவிட்டு, ஏழை ஹரிஜனங்களுக்கு பஸ் ரூட்கள் வழங்குவதற்கு சர்க்கார் முன்வருமா ?

SRI P. U. SHANMUGAM : புதிய பஸ் பர்மிட் கேட்கக்கூடியவர்களுக்கு 15 மைல்களுக்கு உள்பட்ட ரூட்கள்தான் கொடுக்கப்படும் என்று சர்க்கார் உத்தரவு இருக்கிறது. அதை 25 மைல் என்று திருத்துவதற்கு சர்க்கார் முன்வருமா ?

MR. SPEAKER : How does this supplementary arise out of the main question? The main question is ' How many are new applicants, and of these how many are Harijans? ' The supplementary question is out of order.

SRI T. SAMPATH : Sir, will the Government consider the feasibility of the system of auctioning routes, just as we were doing in the case of tolls in former days, so that the Government may get more revenue and at the same time avoid unhealthy litigation?

THE HON. SRI V. RAMAIAH : The suggestion is welcome. But it does not arise out of this question.

*Village roads in Lalgudi taluk*

* 485 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the length of new village roads formed in Peruvalappur and Kariamanickam firkas in the Lalgudi taluk, Tiruchirappalli district, in 1957–58; and

(*b*) the length of these roads actually metalled so far?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Three miles.

(*b*) One mile and four furlongs.

SRI S. LAZAR : எத்தனை மைல் நீளத்திற்குப் போடுவதாக இருந்தது ? ஏன் மீதி இடங்களுக்கும் போடப்படவில்லை.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : மூன்று மைல், இப்பொழுது ஒரு மைல் 4 பர்லாங் அளவிற்கு வேலை முடிந்திருக்கிறது. மற்ற பகுதிகளில் வேலை நடக்கிறது.

SRI S. LAZAR : நான் கேட்டிருக்கக்கூடிய கேள்வியிலே இரண்டு பிர்க்காக்களைப் பொறுத்துக் கேட்டிருக்கிறேன். இரண்டு பிர்க்காக்களிலும் 3 மைல்தான் போடுவதாக இருந்ததா ? அல்லது வேறு காரணங் களுக்காக அது விடப்பட்டதா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : வேறு காரணங்களுக்காக விடப்பட்டதாகத் தெரியவில்லை. 3 மைல்தான் இங்கு குறிப்பிட்டிருக்கிறது.

*Use of Tamil in Legislature*

* 486 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

சட்ட சபைகளின் நிகழ்ச்சிகளிலே என்னென்ன நடவடிக்கைகள் தமிழில் நடைபெறுவதற்காகத் திட்டங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Agenda, Questions List, etc., of the Assembly are issued in both English and Tamil. The Members now usually speak in Tamil and their speeches are reported and published verbatim in the Official Debates. Thus so far as this House is concerned ; the business is in practice, being transacted in Tamil.

9-40 a.m.

SRI P. G. MANICKAM : ஸார், உப கேள்விகளுக்குத் தமிழில் பதில் அளிக்கப்படுவது போல, மூல கேள்விகளுக்கும் பதில் தமிழில் கொடுக்க சர்க்கார் கவனம் செலுத்துமா ?

[24th September 1958

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, we are following a programme which we have laid down, taking into account the administrative convenience. We have to get the required number of typewriters and typists if this programme has got to be implemented. That is why there is some delay in this matter.

SRI K. VINAYAKAM : Whereas the official language has been declared to be English and Tamil, will the Hon. Minister assure such of those members as are used to speak only in English that their rights will not be abrogated to any extent?

THE HON. SRI C. SUBRAMANIAM : The rights of persons, who are not conversant in Tamil and who can speak only in English, will be protected.

SRI T. VELUCHAMI : கனம் மந்திரியவர்கள் என்ன சொன்னுர்கள் என்பதைத் தமிழில் சொல்லுவார்களா ? எனக்கு விளங்கவில்லே. (சிரிப்பு).

SRI A. V. P. ASAITHAMBI : தலேவர் அவர்களே, சாத்தியமான இலாகாக்களில் தமிழைப் பயன் படுத்துவதாக அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள். இந்த "ஸ்ரீ" என்பதை, "திரு" என்றும், "ஸ்ரீமதி" என்பதை, "திரு" என்றும் (சிரிப்பு)—மன்னிக்கவும், "திருமதி" என்றும், திருத்தி எழுதும்படி. . . .

MR. SPEAKER : I am sorry. The hon. Member may put a separate question.

*Medical Officers*

* 487 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

அரசாங்க மருத்துவ (டாக்டர்கள்) அதிகாரிகளில்—

(1) பிற்பட்டவர்கள்,

(2) ஹரிஜனங்கள் எத்தனே பேர் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (1) & (2) The number of Medical Officers belonging to Backward Classes and Scheduled Castes in the Madras Medical Services on 1st April 1957 was 103 and 10 respectively.

SRI M. C. MUTHUKUMARASWAMY : ஹரிஜன டாக்டர்கள் அதிகமாக வருவதற்கு அரசாங்கத்தார் என்னென்ன நடவடிக்கைகள் எடுத்து இருக்கிருர்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மெடிகல் காலேஜ் களில் படித்து, பாஸ் பண்ணிஞல், டாக்டர்கள் ஆகலாம். (சிரிப்பு).

*Harijan Welfare Schools*

* 488 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the number of Harijan Welfare Schools in the State at the beginning of the current year;

24th September 1958]

(b) how many such schools were closed in 1957–58; and

(c) the reasons for closing them?

THE HON. SRI P. KANNAN : (a) 839 schools.

(b) Nil.

(c) Does not arise.

SRI M. JAGANNATHAN : தலைவர் அவர்களே, சென்னை மாநிலத்திலே, ஹரிஜன க்ஷேமநல பாடசாலைகள் இனிமேல் திறக்கப் படமாட்டாது என்ற கொள்கையை முடிவு செய்திருக்கிறார்கள். அதனால் ஹரிஜன மக்கள் பாதிக்கப்படும் நிலையில் இருக்கிறார்கள். ஆகவே இனி மேலும், ஹரிஜன க்ஷேமநல பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : சர்க்கார் முடிவு ஹரிஜன மாணவர்களைப் பாதிப்பதற்காக இல்லை. ஹரிஜன மாணவர்களும், ஜாதி ஹிந்துப் பிள்ளைமாணவர்களும் சேர்ந்துப் படிப்பதனால், தீண்டாமையை ஒழிக்க முடியும் என்ற காரணத்திற்காகத்தான், புதிதாக ஹரிஜன வெல்பேர் டிபார்ட்மெண்டாரால் ஸ்கூல்கள் திறப்பதில்லை என்ற முடிவு செய்திருக்கிறது.

SRI R. SRINIVASA IYER : அமைச்சர் அவர்கள் சொன்ன பதிலிலிருந்து தீண்டாமையை விலக்க ஹரிஜன மாணவர்கள் ஜாதி ஹிந்துக்களோடு படிக்க வேண்டும் என்றதால், ஹரிஜன் பள்ளிக்கூடங் களுக்குப் பதிலாக, பொதுப் பள்ளிக்கூடங்கள் நியமிக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அப்படி இப்பொழுது ஒன்றும் இல்லை.

SRI M. P. PERIASAMI : இந்த ஹரிஜன லேபர் பாடசாலை நிறுவுவதில் ஜாதி ஹிந்துப் பிள்ளைகளும், ஹரிஜனப் பிள்ளைகளும் ஒன்றாகச் சேர்ந்து படித்து வருவதால், தீண்டாமை போகும் என்பது போல், ஹரிஜனச் சேரியில், ஜாதி ஹிந்துப் பிள்ளைகளும் வர சர்க்கார் அனுமதி கொடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுதுகூட அப்படித்தான் நடக்கிறது சில பாடசாலைகள்.

SRI M. JAGANNATHAN : இப்பொழுது இருக்கும் பொதுப் பாட சாலைகளில் ஹரிஜனக் குழந்தைகள் தீண்டாமை காரணமாக சேர்க்கப் படுவதில்லை. குறிப்பாக எங்கள் ஜில்லாவைச் சொல்ல முடியும். ஒன்று தீண்டாமையை ஒழிக்க சர்க்கார் முன் வரவேண்டும், அல்லது ஹரிஜன மாணவர்கள் வர வசதி செய்து கொடுக்கவேண்டும், க்ஷேமநல, பாடசாலைகள் அதிகமாகத் திறக்க வேண்டும். இரண்டில் ஒன்றைச் செய்ய உறுதியாகச் சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அப்படி எந்த இடத்தில் இருக்கிறது என்று, குறிப்பாகச் சொன்னால், கவனிக்கப்படும்.

*Nagapattinam fishermen*

*489 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Local Administration be pleased to state the various facilities provided for the fishermen living near Nagapattinam sea coast?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : A statement [a] is placed on the table of the House.

[a] Printed as Appendix II on pages 664–665 infra.

[24th September 1958

SRI N. K. PALANISAMI : நாகப்பட்டிணத்தில், அக்காரப் பேட்டை முதலிய 8 குப்பங்கள் இருக்கின்றன. அக்காரப் பேட்டைக்கு ஒரு பாப்லோ போட் கொடுக்கப்பட்டிருக்கிறது. மாதம் ரூபாய் 500 வருமானம் என்றும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனாலும், 8 குப்பத்திற்கும், ஒரு போட்டுதான். ஆகவே, குப்பத்திற்கு இரண்டு வீதம் கொடுக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஸ்டேட் முழுதுமே 42 போட்டுகள்தான் இருக்கின்றன. ஒவ்வொரு குப்பத்திற்கும் ஒன்று என்று கொடுத்துவிட்டால், மற்ற இடங்களின் கதி என்னுகும் ?

SRI A. VEDARATHNAM : நாகையில் விசைப் படகுகளை நடத்த பயிற்சி நடப்பதாகக் காண்கிறேம். அப்படி எத்தனை மாணவர்கள், பயிற்சி பெறுகிறார்கள், அவர்களுக்குப் பயிற்சிக்குக் கட்டணம் ஏதாவது உண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அவர்களில் இந்த வருடம் பத்துப் பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மீனவர் சமுதாயத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

*Home Science and Citizenship Training Centre*

* 490 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்தில் எந்தெந்த இடங்களில் ஹோம் ஸைன்ஸ், குடிமைப் பயிற்சி நிலையங்கள் நடைபெறுகின்றன ?

(ஆ) இவை ஒவ்வொன்றுக்கும் ஆண்டுதோறும் ஆகும் நடைமுறைச் செலவு எவ்வளவு, நிரந்தரச் செலவு எவ்வளவு ?

(இ) இதில் எவ்வளவு பேருக்குப் பயிற்சி அளிக்கப்படுகின்றது ?

(ஈ) எந்த ஜில்லாக்களிலிருந்து இந்த பயிற்சியாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றார்கள் ?

(உ) இவர்களின் தகுதி என்ன ?

(ஊ) அவர்களைத் தேர்ந்தெடுப்பவர்கள் யார் ?

(எ) இந்தச் செலவில் மத்திய சர்க்கார் பங்கு எவ்வளவு ?

(ஏ) இந்தப் பயிற்சி ஸ்தாபனங்களை அதிகரிக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) to (*h*) A statement [a] is laid on the table of the House.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஹோம் ஸைன்ஸில் என்ன வேலைகள் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன என்பதை அமைச்சர் அவர்கள் விளக்குவார்களா ?

MR. SPEAKER : தனிக் கேள்வி போடுங்கள். கேள்வி நேரத்தில் இதற்கெல்லாம் பதில் சொல்ல முடியுமா ?

*Maternity Home at Vedasandur*

* 491 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether a Maternity Home was constructed and finished on 1st April 1956 at Vedasandur, Madurai district ; and

(*b*) whether any doctor was posted for the Maternity Home?

THE HON SRI M. A. MANICKAVELU : (*a*) A Maternity Ward with four beds was constructed.

---

[a] Printed as Appendix III on page 666 infra.

24th September 1958]

(*b*) No, Sir. The Maternity Assistant attached to the Local Fund Dispensary is attending to cases under the supervision of the Medical Officer.

**SRI N. K. PALANISAMI** : இந்த ஆஸ்பத்திரி கட்டினது 1956-ல், 1958-ம் வருஷக் கடைசி வரை டாக்டர் போடவில்லை என்பது வாஸ்தவமா? அதற்குக் காரணம் என்ன ?

**THE HON. SRI M. A. MANICKAVELU** : இந்த ஆஸ்பத்திரி பஞ்சாயத்து போர்டு திட்டம். இதற்கு வேண்டிய வகை அவர்கள் செய்ய வில்லை. ஜில்லா போர்டும் அதற்கு வேண்டிய பணம் இல்லையென்று கையை விரித்து விட்டார்கள்.

**DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN** : இந்த டிஸ்பென்சரியில் இருக்கும் மருத்துவப் பெண் வெளியில் சென்று உதவி செய்ய வேண்டியிருப்பதால், இந்த மெடர்னிடி ஹோமுக்குத் தனியாக ஒரு மெடர்னிடி அஸிஸ்டென்ட் நியமிக்க சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU** : அது பஞ்சாயத்து ஜில்லா போர்டு ஆகியவற்றின் பொறுப்பு. ஜில்லா போர்டே பணம் இல்லை என்று கையைவிரித்துவிட்டது. சர்க்கார் ஆஸ்பத்திரிகளுக்கே அம்மாதிரியான வசதி செய்து கொடுக்கக் கஷ்டமாக இருக்கிறது.

*Untouchability*

* 492 *Q*.—**SRI V. K. KOTHANDARAMAN** : Will the Hon. the Minister for Public Works be pleased to state the number of cases of caste repression (cases in connection with temple entry and the like) launched in 1957–58 in the State districtwar; under the following Acts :—

(1) Temple Entry Authorization Act, 1948 (Madras Act XII of 1948);

(2) Untouchability (Offences) Act, 1955 (Central Act); and

(3) Civil Disabilities (Removal) Act, 1951 (Madras Act XIV of 1951)?

**THE HON. SRI P. KAKKAN** : A statement[a] is placed on the table of the House.

**SRI V. K. KOTHANDARAMAN** : ஸார், பாண்டிய நாட்டுப் பண்புக்கு உரிய முறையிலே, மதுரை மாவட்டத்தில் அதிகமான 23 தீண்டாமைக் கேசுகள் இருப்பதற்குக் காரணம், ஸ்ரீமான் தியாகராஜன் தினந்தோறும் எடுக்கும் தீவிர நடவடிக்கைதான் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? (சிரிப்பு).

**MR. SPEAKER** : இம்மாதிரிக் கேள்வி போடுவது நல்லதல்ல. I think the Hon. Minister need not answer the question. If, however, he wants to answer, I have no objection.

**THE HON. SRI P. KAKKAN** : பாண்டிய நாட்டில் அதிகமான கேசுகள் இருப்பது அங்கே தீண்டாமையை ஒழிக்க அவர்கள் பாடு படுகிருர்கள் என்பதைத்தான் எடுத்துக் காட்டுகிறது.

**SRI N. R. THIAGARAJAN** : பாண்டிய நாட்டில் தீண்டாமை சம்பந்தமான வழக்குகள் அதிகமாக இருப்பதற்குக் காரணம், கனம் அமைச்சர் அவர்கள் சொன்னது போல், அங்கே நாங்கள் தீவிரமாக அந்தப்

a Printed as Appendix IV on page 667 infra.

பணியில் முன்னணியில் இருப்பதுதான். மீனுட்சி கோயிலில், ஹரிஜன பிரவேசங்கூட, அமைச்சர் அவர்களின் தலைமையின்கீழ்தான் நடைபெற்றது என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா ?

MR. SPEAKER : அவர்களுக்குத் தெரியும் என்றுதான் சொல்லுகிருர்கள். (சிரிப்பு.)

*Pearl fishing and sea-fishing at Tuticorin*

* 493 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Local Administration be pleased to state whether there are enough steam launches at Tuticorin for pearl fishing and sea-fishing and if so, how many?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : There is only one vessel "Goherkhaleeli" stationed at Tuticorin. She is mainly intended for pearl and chank fishing work. She is also utilised for fishing operations whenever she is not required for pearl or chank fishing.

9–50 a.m.

SRI V. K. KOTHANDARAMAN : இப்பொழுது தூத்துக்குடியில் முத்துக் குளிப்பு நடக்கிறது. அப்படி முத்து எடுக்கக்கூடிய மீனவர்களுக்குப் போதுமான அளவில் ஸ்டீம் லாஞ்சுகள் இல்லை என்று கூறுகிருர்கள். அவர்களுக்கு கொடுத்து வருவதாகவும் சொல்லப்படுகிறது. ஆகவே அவர்களுக்கு அதிகப்படியாக போட்டுகள் வேண்டியதாக இருப்பதால் அப்படிக் கொடுப்பதை அதிகப்படுத்துவதற்குச் சர்க்கார் முயற்சி எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : முத்துக் குளிப்பு வேலைகளுக்கு இப்போது போட்டுகள் அளிக்கப்பட்டு வருகின்றன. மேலும் இன்னும் அதிகப்படியான போட்டுகள் அவசியம் எனத்தோன்றுகிறது. இன்னும் அதிகப்படியாக வேண்டும் என்று கேட்டால் கவனிக்கப்படும்.

*Music*

* **494** *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கல்லூரிகளில் சங்கீதக்கலை போதிக்கிருர்களா ?

(ஆ) வாத்திய சங்கீதமும் போதிக்கிருர்களா ?

(இ) அப்படியானுல், என்னென்ன வாத்தியங்களில் ?

(ஈ) சங்கீதப் பயிற்சி பெற்றவர்களுக்கு வழங்கப்படும் பட்டங்கள் என்னென்ன ?

(உ) அரசாங்கம் இக்கல்லூரிகளுக்கு உதவிவரும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes.

(*b*) Yes.

(*c*) Instrumental music is taught in veena, violin and piano.

(*d*) In cases where music is studied as an integral part of the University courses of studies no separate degree or certificate in Music is issued. Candidates who are successful in the examination for the course in the Central College of Karnataka Music are awarded the title "Sangeetha Vidwan" of the College.

24th September 1958]

(*e*) In the case of the Queen Mary's College, Madras, where facilities for teaching Music are available, the entire expenditure is borne by Government as it is a Government College. In the case of aided colleges no separate grant for Music department alone is paid. The grant for the Music department is included in the teaching grant assessed for and paid to the College as a whole. The Central College of Karnataka Music is maintained by Government with an annual grant of rupees not exceeding Rs. 25,000 from the Sangeet Natak Akadami, New Delhi.

SRI A. VEDARATHNAM : 'இசைக் கருவிகள் பல இப்பொழுது மறைந்துகொண்டு வருகின்றன. அவைகள் எல்லாம் மறைந்து போகாமல் காக்க அந்த இசைக் கருவிகளைப்பற்றி சர்ச்சை செய்து அவைகள் மறைந்து போகாமல் இருப்பதற்கு அவைகளைக் கல்லூரிகளில் கற்றுக்கொடுக்க அரசாங்கம் முன்வருவார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : எந்தக் கருவியில் மக்கள் ஆசை கொண்டு பயின்று வருகிறார்களோ அதில்தான் பயிற்சி கொடுக்க முடியும். யாரையும் பலவந்தப்படுத்தி அதைக் கற்றுக்கொள்ளவேண்டும் என்று சொல்ல முடியாது. ஆகவே மறைந்து போகக்கூடிய கருவிகளில் பயிற்சி பெறவேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாது. அதனால் அவைகளில் பயிற்சி பெற ஏற்பாடு செய்ய முடியாது.

SRI V. K. KRISHNAMURTHY : விபுலாநந்தர் யாழ் கருவியை கல்லூரிகளில் கற்றுக்கொடுக்க முயற்சி எடுத்துக்கொள்வார்களா என்பதை அறிய விரும்புகிறேன். தமிழிசைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : யாழைப்பற்றி தனியாகக் கேள்வி போடவேண்டும். தமிழ் இசைக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுத்து முன்னுக்குக் கொண்டு வரவேண்டுமோ அந்த அளவுக்கு முயற்சி எடுத்துக்கொண்டு வரப்படுகிறது.

SRI K. ANBAZHAGAN : கர்நாடக சங்கீத கல்லூரியின் பழைய பாடத்திட்டத்தின்படி பெரும்பாலும் தெலுங்கு சாகித்தியங்களையே பாடமாக சொல்லிக்கொடுக்கப்படுகிறது. உண்மையாகவே தமிழ் சாகித்யங்கள் உள்ளதால் அதைப் பயன்படுத்துமாறு செய்ய முன் வருவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லா சாகித்யங்களும் தான் சொல்லிக் கொடுக்கப்பட்டு வருகிறது. அதனால் தெலுங்கு சாகித்யங்களுக்கு விலக்கு அளிக்கப்பட மாட்டாது.

*Drinking water-supply scheme for Bhavani town*

*495 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லா, பவானி நகரிலே குடிதண்ணீர் சப்ளை திட்டத்தை அமுல் செய்யவேண்டுமென்று கவர்ன்மெண்டாருக்கு விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றனவா ?

(ஆ) அவ்வாறு அனுப்பப்பட்டிருப்பின் இத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர எடுக்கப்பபட்டிருக்கும் நடவடிக்கைகள் யாவை ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The Chief Engineer has submitted outline proposals for a combined water-supply scheme for Bhavani and Komarapalayam. They are under examination.

[24th September 1958

*Pablo fishing boats*

* 496 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the number of pablo type fishing boats distributed so far to the Kanyakumari district;

(*b*) the number of boats distributed to each of the places in the district; and

(*c*) the number of boats distributed to Colachel areas?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Seven.

(*b*) Colachel—4, Eyludesam—1, Chempakaramanputhenthurai—1 and Kanyakumari—1.

(*c*) Four.

* 497 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the number of pablo fishing boats distributed to Fishermen Co-operative Societies;

(*b*) the number of such boats supplied to individual fishermen; and

(*c*) how many of these pablo boats were returned from the Kanyakumari district and the reason for the same?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Forty boats.

(*b*) No boat was given to any single individual. Boats are given to Fishermen Co-operative Societies and Federations and to fishermen groups. Two boats were given to groups of four individuals each, one to a group in Madras and the other to a group in Chingleput district.

(*c*) Nil.

SRI A. GOVINDASAMY : இந்த பாப்லோ போட் வந்ததால் அங்குள்ள மீன் பிடிப்பவர்கள் பாதிக்கப்படுகிறார்கள். இந்த போட்டுகளை வைத்துக்கொண்டு மீன் பிடிப்பதனால் அந்தச் சத்தத்தைக் கேட்டு மீன்கள் கட்டுமரங்களில் பிடிக்கிறவர்களுக்கு வரவில்லை. கட்டுமரங்களிலிருந்து மீன் பிடிக்கிறவர்கள் வலையில் அவைகள் வந்து சிக்குவதில்லை. அதனால் மீன் பிடிப்பவர்கள் இப்படி போட்டுகளை உபயோகப்படுத்தக்கூடாது, அது அதிகப்படியாகச் சத்தம் போடுகிறது என்று எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள் என்பதை அரசாங்கம் அறிவார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கடல் அவ்விதமாக சுருங்கிய இடம் இல்லை. ஒரு **Boat** அங்கே வேலை செய்வதால் மற்றவர்களுக்கு மீன் அகப்படாமல் போவதற்கு அந்த இடம் அவ்வளவு குறைதந்தல்ல. சத்தத்தினால் மீன் அகப்படவில்லை என்றால் போட்டுகளில் மீன் பிடிப்பவர்களுக்கு எவ்வாறு மீன் அகப்படும் ? அவர்களுக்கு அதிகமாக மீன்கள் அகப்படுகின்றன. அதனால் சத்தத்தினால் மீன் அகப்படுவது இல்லை என்பது சரியல்ல.

24th September 1958]

Sri T. S. RAMASWAMY PILLAI : May I know the number of boats given to each co-operative society in Kanyakumari district?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : That is the very question, I answered first, before this.

Sri T. S. RAMASWAMY PILLAI : On a point of order. My question was with reference to each co-operative society. The Hon. Minister referred to each place and not co-operative society.

Mr. SPEAKER : The Hon. Minister may or may not answer. For that, the hon. Member need not raise a point of order. There is no point of order.

Sri S. LAZAR : May I know what these pablo boats are?

Mr. SPEAKER : The hon. Member, I am afraid, must learn it elsewhere. He cannot ask a question here. Anyway, if the Hon. Minister wants to answer, I have no objection.

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : சாதாரணமாக படகுகளில் விசைக் கருவிகளை வைத்துக்கொண்டு லகுவாக மீன் பிடிப்பதற்கு உபயோகப்படுத்தக்கூடிய விசை படகுகளுக்கு பாப்லோ போட் என்று பெயர். விசைக் கருவிகளை அமைத்து அதன் மூலமாக போட்டுகளை ஓட்டி நடுக்கடலில் மீன் லகுவாகப் பிடிப்பதற்கு அவைகள் உபயோகப்படுத்தப்படுகின்றன.

Sri A. GOVINDASAMY : இந்த பாப்லோ போட்டுகள் கொலாச்சல் பகுதியில் நாற்பது போட்டுகள் கொடுக்கப்பட்டதில் நான்கு போட்டுகள் கொடுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அப்படி நான்கு போட்டுகள் கொலாச்சல் பகுதிக்கு மட்டும் கொடுக்க வேண்டிய அவசியம் என்ன ?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : தனியாருக்குக் கொடுக்கப்படவில்லை. சொசைட்டிக்குக் கொடுத்து அதன் மூலமாக அங்கத்தினர்களுக்குப் பயன்படும்படியாக கொடுக்கப்பட்டிருக்கிறது. குளச்சல் பகுதி ஒரு சிறு துறைமுகப் பகுதி. அந்தக் காரணத்தால் தான் அங்கே அதிகமாக கொடுக்கப்பட்டிருக்கிறது.

*Araniar Project*

* 498 *Q*.—Sri K. VINAYAKAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Committee of officers belonging to Madras and Andhra Pradesh Governments appointed to examine the position in regard to the Araniar Project, following Pataskar's award, submitted its report;

(*b*) what are the terms of reference made to this Committee; and

(*c*) what is the delay due to in implementing Pataskar's award regarding Andhra-Madras boundary disputes?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) The Committee was appointed by the Southern Zonal Council to consider the outstanding inter-State problems arising out of the acceptance of Sri Pataskar's award on the border dispute

between Madras and Andhra Pradesh. It is mainly concerned with the question of framing rules and regulations for the sharing of the waters of the Araniar river between the States of Madras and Andhra Pradesh.

(c) Provisions to be included in the Bill have already been communicated to the Government of India and the draft of the Bill as prepared by them is awaited.

SRI K VINAYAKAM : Since this Joint Committee constituted by the Zonal Council has not finished its work and sent complete details, may I know, whether this will hamper the drafting of the Bill and its being passed by the two respective State Legislatures and finally by the Parliament? Will that stand in the way of giving effect to the Pataskar Award?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir. It will not.

*Sea erosion*

* 499 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) the proposal which the Government or Corporation of Madras have to prevent sea erosion into land at Rayapuram and Tondiarpet, Madras;

(b) the estimated cost of all proposal ; and

(c) whether any financial aid was given to the Corporation of Madras in this matter?

THE HON. SRI P. KAKKAN : (a) & (b) The Government have examined a scheme for checking sea erosion north of Madras Harbour by providing protective works for 3,500 feet from the Obelisk to the sewage outfall. The scheme comprises two parts, one for the construction of a sea wall at a cost of Rs. 17 lakhs and the other for the formation of boynes at a cost of Rs. 14 lakhs. The first part has been sanctioned and will be taken up for execution by stages. The second part has been deferred for the present.

(c) A loan of Rs. 5 lakhs has been sanctioned to the Corporation of Madras for starting the work during 1958–59.

SRI K. VINAYAKAM : கடல் அரிப்பைத் தடுப்பதற்கு இப்பொழுது சுவர் கட்டப்படும் என்று சொல்லுகிறார்கள். ஒரு பகுதியை மாத்திரம் கட்டி விட்டு மற்ற பகுதியைக் கட்டவில்லையானால் அதைக் கட்டுவதற்குள் கட்டிய பகுதி கடலால் அரித்து விடப்படும். அதனால் எல்லா இடங்களிலும் ஒரே சமயத்தில் கட்ட வேண்டாமா ? அதனால் அரிப்பைத் தடுத்து வைப்பதற்கு கார்போரேஷனுக்குக் கடன் கொடுக்க இந்த அரசாங்கம் என் மறுக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : இந்தத் திட்டத்திற்கு என்று 17 லட்சம் ரூபாய் சாங்ஷன் செய்யப்பட்டிருக்கிறது. பகுதி பகுதியாகக் கட்ட வேண்டும் என்று சொல்லி அதற்காக இப்பொழுது ஐந்து லட்சம் ரூபாய் சாங்ஷன் செய்து கார்பொரேஷனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

SRI A. A. RASHEED : Will the construction of the wall be taken up departmentally or by the Corporation?

24th September 1958]

THE HON. SRI P. KAKKAN : It will be done departmentally, Sir.

SRI A. V. P. ASAITHAMBI : தனுஷ்கோடியில் கடல் அரிப்பு நடந்து கொண்டு வருகிறது. அதைத் தடுப்பதற்கு . . .

MR. SPEAKER : This question relates to Madras Beach. The hon. Member may put a separate question.

*Vedaranyam-Nagapattinam Canal*

* 500 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state what steps the Government have taken for developing boat traffic in the Vedaranyam-Nagapattinam Canal?

THE HON. SRI P. KAKKAN : Proposals for carrying out certain improvements to the Vedaranyam Canal are under the active consideration of the Government. It is hoped that when the canal is improved, there will be a fillip to the boat traffic in the canal.

MR. SPEAKER : Question 506 also relates to the same subject and may be taken up with 500. The Hon. Minister may answer that question also if he has no objection.

* 506 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state the number of boats plying on the Vedaranyam-Nagapattinam canal at present?

THE HON. SRI P. KAKKAN : 109 (one hundred and nine) boats are now plying in the Vedaranyam-Nagapattinam Canal.

SRI A. VEDARATHNAM : இந்தக் கால்வாய் பலவிடங்களில் தூர்ந்துபோய் இப்போது படகு போக்குவரத்துக்கு முடியாத நிலைமையில் இருக்கிறதே. அதையெல்லாம் சில்ட் கிளியரன்ஸ் செய்வதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது. இதற்காகச் சாங்ஷன் செய்யப்பட்ட தொகை ரொம்ப காலமாகச் செலவிடப்படாமல் இருக்கிறதே, அதைச் செலவிட முன்வருவார்களா ? இந்தக் கால்வாயைப் பற்றி ஆலோசிப்பதற்காக அமைக்கப்பட்ட கமிட்டி என்ன முடிவு செய்திருக்கிறார்கள் ? ஏதேனும் அறிக்கை சமர்ப்பித்திருக்கிறார்களா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : தனிக் கேள்வி போடவேண்டும்.

*Arni Block area*

* 501 *Q.*—SRI B. DORAISAMI REDDIAR : Will the Hon. the Chief Minister be pleased to state the amount of loan so far disbursed in Arni Block area in North Arcot district, year-war to (i) Harijans and (ii) others?

THE HON. SRI C. SUBRAMANIAM : A statement [a] is laid on the table of the House.

---

[a] Printed as Appendix V on page 668 infra.

[24th September 1958

*Education of girls and women*

SRI A. V. P. ASAITHAMBI : சார், தமிழ் கேள்விப் பட்டியலில் 502-வது கேள்வியின் தலைப்பில் "பெண்கள், ஸ்ரீகள் கல்வி" என்று தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறதே. இந்த "ஸ்ரீகள்" யார் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பெண்களைத்தான் குறிக்கிறது. இந்த மாதிரி பல குறைகள் இருக்கலாம். போகப் போகப் போய் விடும். டைப்பிங் பிழையாக இருக்கும்.

SRI A. V. P. ASAITHAMBI : டைப்பிங் பிழை அல்ல. ஸ்திரீ கள் என்பதற்கே ஸ்ரீகள் என்று போட்டிருப்பதாகத் தெரிகிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM : I would request hon. Members to bring to the notice of persons concerned the printing and typing mistakes. These things need not be made the subject-matter of a discussion here.

(The hon. Member Sri Asaithambi again stood up in his place.)

MR. SPEAKER : The hon. Member may bring such things to my notice in my Chamber.

* 502 *Q*.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) பெண் கல்வி அபிவிருத்திக்காக மத்திய அரசாங்கம் நம் அரசாங் கத்திற்கு எவ்வளவு நிதி உதவியிருக்கிறது ?

(ஆ) அதில் எவ்வளவு தொகை இதுவரையில் பயன் படுத்தப்பட் டிருக்கிறது ?

(இ) அதன் மூலம் நிறைவேற்றப்பட்டிருக்கும் திட்டங்கள் எவை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The scheme of the Government of India for the expansion of circle and women's education is under the consideration of Government. No grants have been received so far as the proposals were not finalised. If the scheme is approved the Government of India will sanction 75 per cent of the total expenditure as their assistance.

(*b*) & (*c*) Does not arise.

SRI A. VEDARATHNAM : மத்திய அரசாங்கம் இந்தப் பெண் கள் கல்வி முன்னேற்றத்திற்காக மூன்று கோடியே 30 லட்சம் ஒதுக்கி யிருந்தும் இதுவரையில் அதைப் பயன்படுத்திக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லையே. நமது நாட்டில் பெண்கள் கல்வி பிரதானமாக இருந்தும் இந்தத் தொகையைப் பயன்படுத்திக்கொள்ளாத காரணம் என்ன ? இனி யேனும் பயன்படுத்திக் கொண்டு கல்வியின் முன்னேற்றத்திற்காக அர சாங்கம் ஏதேனும் வழிவகுத்திருக்கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதில் முக்கியமான கஷ்டம் என்ன வென்றால் இந்தியாவிலுள்ள எல்லாப் பகுதிகளுக்குமாகச் சேர்ந்து அவர் கள் ஒதுக்கிவிடுகிறார்கள். அந்த அந்தப் பிராந்தியத்தின் அமைப்புக் கேற்ப அதை மாற்றி அமைக்கவேண்டுமென்ற அனுமதியைக் கேட்டிருக்கி றோம். அதற்குப் பதில் வந்த பிறகு இதைப்பற்றி பரிசீலனை செய்து அந்தத் தொகையை உபயோகப்படுத்திக்கொள்ள நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம்.

24th September 1958]

*Elementary Education and Basic Education Courses.*

* 503 *Q.*—**Sri A. VEDARATHNAM** : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஆரம்பக் கல்வியை எட்டு (8) வருடப்படிப்பிலிருந்து எழு (7) வருடப் படிப்பாக மாற்றி அதற்குரிய (ஸெலபஸ்) பாட திட்டங்கள் தயார் செய்தாகிவிட்டதா ?

(ஆ) எப்பொழுது இப்பாடத்திட்டம் அமலுக்கு வரும் ?

(இ) இத் திட்டத்தை அனுசரித்து ஆதாரக் கல்விப் படிப்பையும் எழு (7) வருடப் படிப்பாக மாற்றும் உத்தேசம் உண்டா ?

(ஈ) அப்படியானல், எப்போதிலிருந்து ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : (*a*) Yes, Sir.

(*b*) The revised syllabus have been introduced in standards I to III of elementary schools in the current year (1958–59).

(*c*) No final decision has yet been taken regarding reorganisation of Basic Education also as a seven-year course.

(*d*) Does not arise.

**Sri A. VEDARATHNAM** : மற்ற கல்வியின் காலத்தை எழு வருஷமாகக் குறைத்துவிட்டு ஆதாரக் கல்வியை கற்பதற்கு மாத்திரம் 8 வருஷம் என்று வைத்திருப்பதாவது ஆதாரக் கல்வியைக் கற்பவர்களுக்கு கஷ்டத்தை ஏற்படுத்தாதா ? அந்தக் கஷ்டம் ஏற்படாதிருக்க என்ன செய்யப்பட்டிருக்கிறது ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அந்தக் கஷ்டத்தை நீக்குவதற்காகத்தான் ஒரு கமிட்டியை ஏற்படுத்தலாம் என்று கனம் அங்கத்தினரிடம் முன்பு சொன்னது. 'அது தேவையில்லை, ஆதாரக் கல்வியைப் பொறுத்த வரையில் எட்டு வருஷமே இருந்து வரலாம்' என்று அவர்கள் சிபார்சு செய்திருக்கிறார்கள். அது இப்போது பரிசீலனையில் இருந்து வருகிறது.

*Dispensaries in Tanjore District.*

* 504 *Q.*—**Sri M. C. MUTHUKUMARASWAMY** : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் அரசாங்கத்தாலும் ஸ்தல ஸ்தாபனங்களாலும் நடத்தப்படும் மருத்துவ நிலையங்கள் எத்தனை ?

(ஆ) அவைகளில் வேலை செய்யும் மெடிகல் ஆபீசர்கள் எத்தனை பேர்?

(இ) அவர்களில் ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்கள் எத்தனை பேர் ?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : (*a*) In Tanjore district 9 hospitals, 12 Primary Health Centres and 2 dispensaries are maintained by Government. Five hospitals and 56 dispensaries are maintained by local bodies.

(*b*) 115.

(*c*) 2.

**Sri M. C. MUTHUKUMARASWAMY** : ஸ்தல ஸ்தாபனங்களால் நடத்தப்படும் ஆஸ்பத்திரிகளில் நோயாளிகள் வந்தால் மருந்து இல்லையென்று சொல்லி, மருந்தை எழுதிக் கொடுத்து வாங்கிவரச் சொல்கிறார்கள்.

[24th September 1958

ஆகவே ஸ்தல ஸ்தாபனங்களால் நடத்தப்படும் ஆஸ்பத்திரிகளை சர்க்கார் எடுத்துக் கொள்வது என்ன ஆயிற்று ? எத்தனை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இப்போது முதலில் தாலூகா தலைநகரத்தில் இருக்கிற ஆஸ்பத்திரியை எடுத்துக்கொண்டு வருகிறோம். இன்னும் ஒரு வருஷம், இரண்டு வருஷத்தில் எல்லா தாலூகா தலைநகர ஆஸ்பத்திரிகளையும் எடுத்துக்கொண்டுவிடலாம். விலை உயர்ந்த மருந்து தேவைப்பட்டால் எழுதித்தான் கொடுப்பார்கள். அவர்களையே வாங்கி வரும்படி சொல்லச் சொல்லியிருக்கிறோம்.

### *P.W.D. staff*

* 505 *Q.*—Sri S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether any representation has been received on 28th February 1958 from Irrigation Conservancy subordinates and Telephone Gumastahs' Association ;

(*b*) the number of Irrigation Conservancy subordinates and Telephone gumasthas ;

(*c*) their minimum educational qualifications ; and

(*d*) their present scale of pay ?

The Hon. Sri P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) There are 215 posts of Irrigation Conservancy subordinates and 66 posts of Telephone gumasthas.

(*c*) *Irrigation Conservancy Subordinates*—(i) Experience as maistry in building or irrigation works for a period of not less than 5 years; or

(ii) (*a*) A pass by the lower grade in the Government Technical examination in—

(1) Surveying and Levelling; and

(2) Earthwork and Roads; and

(*b*) A completed Secondary School Leaving-Certificate issued under the authority of the Government of Madras.

*Telephone gumasthas.*—Completed Secondary School-Leaving Certificate issued under the authority of the Government of Madras.

(*d*) Irrigation Conservancy Subordinates, I Grade and Telephone Gumasthas, I Grade—Rs. 30—1—45.

Irrigation Conservancy Subordinates, II Grade and Telephone Gumasthas, II Grade—Rs. 24—1—30.

**Sri S. LAZAR :** எஸ்.எஸ்.எல்.ஸி. வரையில் படித்து அதன் பிறகு தனிப் பயிற்சி பெறவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். இவர்களுக்குச் சம்பளம் 24 ரூபாய் என்று இருப்பது சரியா ? அவர்களது சம்பளத்தை உயர்த்த வேண்டுமென்ற கோரிக்கையின் மீது சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

**The Hon. Sri P. KAKKAN :** இது பரிசீலனையில் இருந்து வருகிற தென்பதை கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

24th September 1958]

*Life-saving drugs*

* 507 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether doctors in the Government Hospitals have complained about the non-availability of life-saving drugs; and

(*b*) if so, the action taken on their complaints?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, from the Government General Hospital, Madras.

(*b*) The non-availability is due to the present import restrictions. The Government of India have been addressed for release of the foreign exchange required for the purchase of the drugs from abroad.

SRI A. A. RASHEED : What is the reply received from the Government of India regarding the representation of the Government of Madras?

THE HON. SRI M. A. MANICKAVELU : We have not yet received a reply.

*Vaigai Project*

* 508 *Q.*—SRI D. SUBRAMANIA RAJA KUMAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the total ayacut in Sivaganga taluk under the Vaigai Project scheme;

(*b*) the probable date by which water will be made available in Sivaganga taluk; and

(*c*) whether the ayacut area has been localised, and if so, the areas to be benefited?

THE HON. SRI P. KAKKAN : (*a*) About 6,936·26 acres.

(*b*) From October 1959.

(*c*) Yes.

| | | | ACRES |
|---|---|---|---|
| 1 | Arasanoor, etc., villages (Sivaganga taluk). | About | 728·87 |
| 2 | Kattanipatti, etc., villages (Sivaganga taluk). | ,, | 666·60 |
| 3 | Lessie's kal (Sivaganga taluk) | ,, | 2,305·21 |
| 4 | Shield's kal (Sivaganga taluk) .. | ,, | 3,235·58 |
| | | | 6,936·26 |

[24th September 1958

*Zamindari Estates*

10-10 a.m

* 509 Q.—SRI W. P. A. R. CHANDRASEKARAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state when the Zamindari estates will be brought under the regular administration of the Tahsildars concerned?

THE HON. SRI M. A. MANICKAVELU : The estate areas taken over under the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act, 1948, are being brought under the administrative control of the regular Taluk Tahsildars, as and when ryotwari settlement is introduced in these areas.

SRI W. P. A. R. CHANDRASEKARAN : ஜமீந்தாரி எஸ்டேட் களிலுள்ள நிலவரி அமைப்பையும், நிலவுடைமையின் அத்தாட்சி கொடுக்கும் அமைப்பையும் சீர்திருத்தியமைப்பதற்கும், பாசன வசதிகளைப் பொது மராமத்து இலாகாவின்கீழ் கொண்டு வருவதற்கும், பாரஸ்டுகளை பாரஸ்ட் டிபார்ட்மெண்டின் கீழ் கொண்டுவருவதற்கும் சர்க்கார் எடுத்திருக்கும் நடவடிக்கைகள் என்ன என்று கனம் மந்திரி அவர்கள் அறிவிப்பாரா?

THE HON. SRI M. A. MANICKAVELU : கேள்வி ஒருவிதமாக இருக்கிறது ; உப கேள்வி வேறு விதமாக இருக்கிறது. இதிலே நான் சொன்னேன் ரயத்துவாரி செட்டில்மெண்ட் எல்லாம் அமுலுக்கு வந்தால், அப்பொழுது தாலூகா தாசில்தார்கள் இதை நிர்வகிப்பார் என்று. செட்டில்மெண்ட் எல்லாம் அநேகமாக இரண்டு, மூன்று வருஷங்களில் முடிந்துவிடும். அப்பொழுது சாதாரண ரயத்துவாரி ஏரியாவிலே எப்படி இருக்கிறதோ அதேமாதிரி இங்கேயும் வந்துவிடும்.

*Chittar-Pattanamkal Scheme*

* 510 Q.—SRI M. WILLIAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the investigation of the Chittar-Pattanamkal Scheme has been completed?

THE HON. SRI P. KAKKAN : Only the preliminary investigation of the scheme has been completed.

SRI M. WILLIAM : Will the Government be pleased to take up the work in the course of the Second Five-Year Plan period?

THE HON. SRI P. KAKKAN : In my answer I have already stated that preliminary investigation of the scheme has been completed.

MR. SPEAKER : The other day some doubt had arisen in respect of the question put by Sri M. P. Subramaniam. Now I have allowed him to speak about it.

SRI M. P. SUBRAMANIAM : It was a question put by Sri Vinayakam.

ஐயா, 20-9-1958 அன்று கனம் உறுப்பினர் திரு. கே. விநயகம் அவர்கள் 381-ம் எண்ணுள்ள கேள்வியின் மூலமாக “ சென்னை ராஜ்ய முதல் அமைச்சர் மூலமாக இந்த அரசாங்கத்திற்கு, கோயமுத்தூர் மாவட்டம், பவானி தாலூகா, சிங்கிப்பேட்டை கிராமத்து ரயத்துக்களிடமிருந்து ஏதாவது புகார் வந்திருக்கிறதா?” என்று கேட்டதற்கு, அமைச்சர் அவர்கள் “ இல்லை ” என்று பதிலளித்திருக்கிறார்கள். ஆனால், முதல் அமைச்சரிடத்திலே புகார் வந்திருக்கிறது என்பது உண்மை. அந்த

24th September 1958]

உண்மையான தகவலை அரசாங்கத்தில் உள்ளவர்கள் மறுப்பதன் காரணமாக, சபையின் உரிமை பாதிக்கப்படுகிறது என்பதை கனம் சபாநாயகர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

**Mr. SPEAKER** : அது வாஸ்தவமா என்று கேட்டார்கள். அவ்வளவு தான்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : கனம் சபாநாயகர் அவர்களே, இங்கு வரக்கூடிய கேள்விகளுக்குப் பதில் தயாரிக்கப்படுகிற போது, கிராமத்திலிருந்து வரும் புள்ளி விவரங்களை வைத்துக்கொண்டு தகவல் சேகரிக்கப்படுகிறது. அந்த மாதிரி எந்த இலாகாவுக்கும் ஒரு விண்ணப்பமும் வராத காரணத்தால் " இல்லை " என்று பதில் சொல்லப் பட்டது. ஆனால், அம்மாதிரி விண்ணப்பம் முதல் மந்திரி அவர்களுக்கு கோயம்புத்தூரில் கொடுத்ததாகவும், அதை அவர் கலெக்டரிடத்தில் கொடுத்ததாகவும் தெரியவருகிறது. வேண்டுமென்றே எந்தத் தகவலையும் மறைக்கவில்லை என்று இங்கே நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

**Sri K. VINAYAKAM** : On a point of personal explanation, Sir.

**Mr. SPEAKER** : Nobody is accusing the hon. Member.

**Sri K. VINAYAKAM** : Sir, I want to make my position very clear in respect of this matter. The petition was not given in the form of a petition to the Hon. the Chief Minister but it was given in the form of a Welcome Address, wherein some complaints had been detailed. While I drafted my question, I erroneously called it a ' petition '. So, the Hon. Minister was right in replying ' No ' to that question. (Laughter.)

(Sri M. P. Subramaniam rose.)

**Mr. SPEAKER** : There is no need for any hon. Member to speak. One mistake leads to another and all is well that ends well.

Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER.

### BILL PASSED BY THE COUNCIL.

**Mr. SPEAKER** : I have to announce that the Madras Public Health (Amendment) Bill, 1958 (L.C. Bill No. 6 of 1958) as passed by the Madras Legislative Council, on the 22nd September 1958, has been received for the concurrence of the Assembly.

## III.—CALLING ATTENTION TO THE ATTACHMENT OF PROPERTIES TOWARDS ARREARS OF PENAL WATER CESS IN THE LOWER BHAVANI PROJECT AREA.

**Mr. SPEAKER** : Two Members, Sri G. G. Gurumurthy and Sri V. S. Manickasundaram have given notice of a motion under Rule 40 to call the attention of the Hon. Minister for Revenue to a matter of urgent public importance. The correct procedure would be to call upon the Member who has first given notice of the motion to speak. The other day also a similar motion was in the name of

[Mr. Speaker] [24th September 1958

two Members and I allowed both the Members to speak. So to-day also I will allow both Sri Gurumurthy and Sri Manickasundaram to speak on the motion. But in future I will call only that **Member who has first given notice of the motion to speak.**

Now I think, Sri Gurumurthy has relinquished his right to speak in favour of Sri Manickasundaram.

**Sri V. S. MANICKASUNDARAM**. கனம் சபாநாயகர் அவர்களே, சமீப காலத்தில், கீழ் பவானிப் பாசனப் பிரதேசத்தில், தண்ணீர் வரி விதித்து வரி வசூல் செய்வது சம்பந்தமாக பொது மக்களுக்குத் திருப்தி யின்மையும், பயமும் ஏற்படக்கூடிய வகையில் அனேக நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. நியாயமாக வரி கொடுக்க வேண்டியவர்கள் அல்லாதவர்களிடமிருந்தும் பலவந்தமாக வரி வசூல் செய்யப்படுகிறது. வரி வசூல் செய்யும் காலங்களிலே உழவு மாடுகளைக் கூட ஜப்தி செய்யக் கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது தண்டத் தீர்வை கொடுக்க வேண்டிய அவசியம் இல்லாதவ களிடமிருந்தும் தண்டத் தீர்வை பலவந்தமாக வசூல் செயயப்படுகிறது.

இதற்கு நான் இரண்டு காரணங்களைச் சொல்ல முடியும். முதலாவதாக, மகசூல் கணக்கு எழுதப்படுவதில் மிகுந்த தாமதம் ஏற்படுகிறது. 1957-ம் வருஷம் ஜூலை மாதம் முதல் 1958-ம்வருஷம் ஜூன் மாதம் வரையில் எழுப்பப்படும் மகசூல்களின் கணக்கு 1958-ம் வருஷ ஜூன் ஜூலை மாதங்களுக்கு மேலே தான் எழுதப்பட்டு, அந்த அடிப்படையில், வரி விதிப்பு நடந்து வருகிறது. அதனால், கணக்கில் தவறுகள் ஏற்பட்டால், அதை நிரூபிக்க விவசாயிகளுக்கு சந்தர்ப்பமே கிடைப்பதில்லை. கீழ்த்தர உத்தியோகஸ்தர்கள் லஞ்சம் வாங்குவதற்கு இந்த முறை நல்ல வாய்ப்பை அளிக்கிறது. ஆகையால், இந்த முறையை மாற்றி யமைக்கவேண்டும். காட்டில் மகசூல் இருக்கும்போது சாகுபடிக் கணக்கு எழுதப்பட்டு விவசாயிக்கு அறிவிக்கப்பட்டு, உண்மையை நிரூபிக்க அவர் களுக்கு ஒரு சந்தர்ப்பம் அளிக்கப்படவேண்டும்.

இரண்டாவதாக, தண்ணீர் பாயாத நிலங்களுக்கும் வரி வசூலிக்கப் படுகிறது. பவானி ரிசர்வாயர் இரிகேஷன் சட்டத்தில்.

'It shall be lawful for the Government to levy water cess for the lands, the irrigation for which is permitted by the Government whether the lands are actually irrigated with water or not' என்று இருப்பதினால், ரெவினியூ இலாகாவினர், ஒரு காட்டுக்குத் தண்ணீர் கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும், வரி விதித்து அதைப் பலவந்தமாக வசூலிக்கிறார்கள். மாராமத்து இலாகாவினர் வாய்க்காலில் இதுவரையில், முழு அளவு தண்ணீர் விடவே இல்லை. ஆகையால், கீழ் பவானிப் பிரதேசத்தில் எழுபதாயிரம் ஏக்கரா பூமிக்கும் தண்ணீர் கிடைக்கவே இல்லை. இருந்தாலும், இந்த அளவு விஸ்தீர்ணமுள்ள பூமிகளுக்கும் "**Penal assesment for non-development**;" என்று கொண்டு தண்டத் தீர்வையும், தீர்வையும் வசூலிக்கப்படுகிறது. இந்த வரிகளை ஜப்தி போன்ற பலவந்தமுறையில் வசூலிப்பதால், அந்தப் பிரதேசத்தில் பீதியும் பயமும் ஏற்பட்டிருக்கிறது.

அதோடு நீர்க்கசிவு நிலங்களைப் பொறுத்து, பதிவு விஷயமாக செய்யப் பட்டிருக்கும் அப்பீல்களை ரெவினியூ டிவிஷனல் ஆபீசர் அளவில் ஒரு அதிகாரி நியமனம் செய்யப்பட்டு, அவர் தண்ணீர் வந்த பின்பு அந்த பூமிகளை நேரில் பார்வையிட்டு அந்த அப்பில்களைப் பைசல் செய்ய ஏற்பாடு செய்யவேண்டியதும் மிக அவசியமாக இருக்கிறது. இந்த விஷயங்களைக்

24th September 1958] [Sri V. S. Manickasundaram]

கவனித்து, ரெவினியூ அமைச்சர் அவர்கள் அந்தப் பகுதியிலே ஏற்பட்டிருக்கும் பயத்தையும் பீதியையும் நீக்க ஏற்பாடு செய்யுமாறு நான் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : Mr. Speaker, Sir, the points raised in the notice are :—

(1) levy of penal water cess in the Lower Bhavani Project area; and

(2) harassment in the collection of the penal water cess by way of attachment of movable properties.

*Point* (1).—Penalties have been levied for the paddy crops raised on lands which were not affected by seepage and for the prohibited crops raised in the ayacut lands. Penalties have also been levied for the following cases of irregular irrigation :

(i) raising of non-permitted crops in the ayacut extent with or without reservoir water, and

(ii) utilising Lower Bhavani Project water for non-permitted extent.

During fasli 1367, the maximum penalty charged in the Lower Bhavani Project area is only 5 rates as against 20 rates prescribed under the Rules. Remission of penalties is being granted by the Special Deputy Tahsildars themselves in deserving cases and stay of collection of penalty is granted liberally by the Revenue Divisional Officers on appeals by the concerned ryots. There is thus ample opportunity provided for the ryots to avail themselves of the facilities against levy of penalty for cases which are not really irregular irrigation under the Rules. The raising of non-permitted crops in the ayacut extent even without reservoir water, has to be penalised under the rules. Orders regarding treatment of lands which have not been irrigated by the Lower Bhavani Project water have already been issued in paragraph 3 of G.O. Ms. No. 4722, Revenue, dated 28th December 1956 to the effect, that the areas which are either rocky or impossible to reclaim, should be excluded from the permits and in regard to other areas, which are now non-commandable where extents involved are small (i.e., 5 acres and less), the parties should be given time to reclaim the lands within ten years and, in such cases, no penalty will be levied.

10-20 a.m.

*Point* (2).—It will thus be seen from the foregoing paragraph that penalty was being levied only in real cases of unauthorised irrigation. A general complaint of harassment in collection of the penalty was also received by Government. On that, it has been reported that the complaint is not wholly correct, and is mainly meant to put off payment of the penalty as long as possible, after having taken canal water unauthorisedly for wet crop cultivation.

### IV.—GOVERNMENT BILL.

### THE MADRAS PANCHAYATS BILL, 1958 (L.A. BILL NO. 33 OF 1958)—*cont.*

MR. SPEAKER : Yesterday, we decided that leaders of Parties and the Hon. Finance Minister will speak to-day. But I find that some of the Leaders are not present. Sri M. Kalyanasundaram has left and Sri Chinnadurai and Sri Pakkirisami Pillai are not available. So, we have got some more time, I shall, therefore, allow four more members to speak before the Hon. Finance Minister begins his speech.

* SRI P. K. MOOKIAH THEVAR : கனம் தலைவர் அவர்களே, இந்த மசோதாவானது மக்கள் நலனைக்கருத்திற் கொண்டு கொண்டுவரப்பட்டிருக்கிறதா அல்லது அரசியல் நோக்கத்துடன் கொண்டுவரப்பட்டிருக்கிறதா என்று பார்க்கும்போது, பெரும்பாலும் அரசியல் நோக்கத்துடனேயே கொண்டுவரப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஜில்லா போர்டுகளை எடுத்து விடவேண்டும் ; எடுத்துவிட்டோம், ஏதாவதொரு மாற்றுத் திட்டத்தைக் கொண்டுவர வேண்டும். இந்த நோக்கத்துடன்தான் இந்த பஞ்சாயத்து மசோதா தயாரிக்கப்பட்டிருக்கிறது.

(Deputy Speaker in the Chair.)

இந்நாட்டில் ஆதிகாலத்தில் இருந்த பஞ்சாயத்துக்கள் அதிகாரத்தின் ஆரம்ப ஸ்தாபனங்களாகவும் கலாசாரத்தின் அடிப்படையாகவும் இருந்தன. இந்த மசோதாவிலுள்ள பஞ்சாயத்து அமைப்பு அதற்கு நேர் மாறான முறையில் இருக்கிறது. மசோதாவிலுள்ள பஞ்சாயத்து அமைப்பு ஒரு பெரிய உருக்கொடுக்கப்பட்டு இருக்கிறதே யொழிய, அவ்வமைப்பில் உயிர் இல்லை. பெருகி வரும் ஜனத்தொகைக்கேற்ப உணவு உற்பத்தியை அதிகரிப்பதற்காகவும், ஜனத்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்காகவும் இந்த மசோதா கொண்டுவரப்படுவதாக மசோதாவில் ஆரம்பத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஜனத் தொகைப் பெருக்கத்தை இந்த மசோதா எவ்வாறு கட்டுப்படுத்த முடியும் என்று புரியவில்லை. சர்க்காரின் திட்டங்கள் தோல்வியடைந்துவிட்டன. நினைத்தப்படி உணவு உற்பத்தியைப் பெருக்க முடியவில்லை. உணவு உற்பத்தியைப் பெருக்க முடியாத சர்க்கார், ஜனத் தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமென்று சொல்கிறார்கள். இது, செருப்பிற்காகக் காலைக் குறைப்பதுபோல் இருக்கிறது. ஜனத் தொகையைக் கட்டுப் டுத்துவதற்கு இந்த மசோதா எவ்வாறு உபயோகப்படும் என்று எனக்குத் தெரியவில்லை. மேலும், பஞ்சாயத்து அமைப்பின் மூலம் அதிகாரங்களை பரவலான நிலைக்குக் கொண்டுவர வேண்டுமென்று அரசியல் சட்டத்தில் ஒரு ஷரத்து கூறுவதால் இந்த மசோதா கொண்டுவரப்படுகிறது என்றும் சர்க்கார் கூறுகிறார்கள். அந்த ஷரத்திற்கு ஒத்த முறையிலும் இந்த மசோதா அமைந்திருக்கவில்லை ; அதிகாரங்களைப் பரவலான நிலைக்குக் கொண்டுவருவதற்கு மசோதா வகைசெய்யவில்லை. மசோதாவில், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சேர்மனுக்கோ, பஞ்சாயத்து ப்ரெஸிடெண்டுக்கோ அதிகாரம் எதுவும் கொடுக்கப்படவில்லை, ஜில்லா போர்டு தலைவருக்கு இருந்த அதிகாரங்கள் அனைத்தும் கமிஷனருக்கும் எ ஸிக்யூடிவ் ஆபீசருக்கும் தான் கொடுக்கப்படுகின்றன. எனவே, பஞ்சாயத்துக்களுக்கு போதிய அதிகாரங்கள் கொடுக்கும் நோக்கத்துடனும் மசோதா கொண்டுவரப்படவில்லை ; கிராம மக்கள் இப்பொது போதிய அறிவும் ஆற்றலும் இல்லாதவர்களாகவும், நிர்வாகத் திறன் இல்லாதவர்களாகவும் இருக்கிறார்கள் என்றும், அதனால் தான் அதிகாரங்களை அதிகாரிகளிடம் ஒப்படைக்க வேண்டியிருக்கிறது என்றும் நேற்று ஆளும் கட்சியைச் சேர்ந்த சில கனம் அங்கத்தினர்கள் கூறினார்கள். " இந்தியாவை ஆளுவதற்கு உரிய திறமை இந்தியர்களுக்கு இல்லை ; அதற்கு வேண்டிய பக்குவத்தை இந்தியர்கள் இன்னும் அடையவில்லை " என்று ஒரு காலத்தில் ஆங்கிலேயர்கள் கூறியதைப் போல் தான் இந்த கனம் அங்கத்தினர்களின் கூற்று இருக்கிறது.

24th September 1958] [Sri P. K. Mookiah Thevar]

இங்கிலாந்து போன்ற தேசங்களில் கௌண்டி கவுன்சில்கள், முனிசிபல் கவுன்சில்கள் என்ற ஸ்தல ஸ்தாபனங்கள் இருக்கின்றன. இந்த தேசங்களில் சட்ட சபைகளுக்கும், பார்லிமெண்டிற்கும் பொதுத் தேர்தல் நடப்பதற்கு முன்பு இந்த ஸ்தல ஸ்தாபன சபைகளுக்கு தேர்தல் நடக்கின்றன. ஸ்தல ஸ்தாபன தேர்தல்களின்போதே, சர்க்கார் என்ன திட்டங்களை நிறைவேற்றியிருக்கிறார்கள் என்பதையும் என்ன காரியங்கள் செய்திருக்கிறார்கள் என்பதையும் அபேட்சகர்களின் பிரசாரத்திலிருந்து மக்கள் தெரிந்துகொள்வார்கள். அதற்கு வாய்ப்பளிக்கும் முறையில் அங்கே ஸ்தல ஸ்தாபன சபைகளின் தேர்தல்கள் சட்டசபை, பார்லிமெண்ட்—பொதுத் தேர்தலுக்கு முன்பு நடத்தப்படுகின்றன. நமது ராஜ்யத்தில், ஜில்லா போர்டுகள் நீக்கப்பட்டபிறகு இந்த புதிய ஸ்தாபனங்கள் வருவதால், இடைக்காலத்தில், 5-6 வருஷங்களுக்கு தேர்தலே கிடையாது. இது ஜனநாயகத்திற்குப் புறம்பானது. ஜனநாயக ஆட்சியில் சர்க்காரின் காரியங்களை அடிக்கடி தெரிந்துகொள்வதற்கு மக்களுக்கு வாய்ப்பு இருக்கவேண்டும். சர்க்கார், அவர்களுடைய திட்டம் தோல்வியடைந்துவிட்டதால் மக்களின் மன நிலை அவர்கட்கு விரோதமாக மாறிவருவதால் அதை சரிக்கட்டுவதற்காக ஸ்தல ஸ்தாபன தேர்தல்கள் இல்லாமல் செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன் தான் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. அந்தக் காரணத்திற்காகத் தான் இந்த ஏமாற்றுத் திட்டத்தை சர்க்கார் கொண்டுவந்திருக்கிறார்கள். ஜில்லா போர்டுகளையே மறுபடியும் கொண்டுவர வேண்டும் என்று நான் சொல்லிக்கொள்ளுகிறேன். ஜில்லா போர்டு அமைப்பில் குற்றம் குறைகள் இருந்திருக்கலாம். இருந்தாலும், அவைகளையே குற்றம் குறைகள் இல்லாமல் புதுப்பித்து மறுபடியும் கொண்டுவரவேண்டும். அப்படிச் செய்வது தான் நல்லது. கிராம முன்னேற்றத்தை லட்சியமாகக் கொண்ட ப்ளாக் அபிவிருத்தித் திட்டங்கள், சமுதாய நலத் திட்டங்கள் முதலிய பல திட்டங்கள் நிறைவேற்றப் பட்டபோது மக்களின் ஒத்துழைப்புக் கிடைக்காததால் அத்திட்டங்கள் வெற்றியடையவில்லை என்று திட்டக் கமிஷன் ரிவியூ (Review)வில் குறிப்பிட்டிருக்கிறது. தங்கள் திட்டம் தோல்வியடைந்ததைப் பார்த்துவிட்டு, சர்க்கார் தேர்தல்களையே ஒதுக்கிவைப்பதற்காக இந்த மசோதாவைக் கொண்டுவருகிறார்கள். இந்த ஐந்து வருஷங்கள் கழிந்தபிறகு அடுத்த பொதுத் தேர்தலில் தங்கள் கட்சியே எந்த முறையிலாவது பூரண மெஜாரிட்டியுடன் ஜெயிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்த மசோதாவை சர்க்கார் கொண்டுவந்திருக்கிறார்கள்.

உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான திட்டங்கள் வெற்றி பெற வேண்டுமானால், அவைகளை சர்க்கார் " ஸெண்ட்ரலைஸ்ட் ஸ்டேட் கண்ட்ரோல் " உடன் நிறைவேற்ற வேண்டும் என்று திட்டக் கமிஷன் அபிப்பிராயம் தெரிவித்திருக்கிறது. அதாவது, திட்டம் வெற்றிபெறுவதற்கு அதிகாரத்தில் குவியல் முறை வேண்டும் என்று திட்டக் கமிஷன் கூறியிருக்கிறது. உண்மையான பஞ்சாயத்து அமைப்பு வருமானால், அது, அதிகாரத்தைப் பரவல் முறைக்குக் கொண்டுவருவதாகிறது. எனவே தான் பஞ்சாயத்துக்களிடம் அதிகம் அதிகாரம் இல்லாத முறையில் இந்த மசோதா தயாரிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் காரணத்தால் தான், மக்கள் நலனை அதிகம் கருதாமல் பெரும்பாலும் அரசியல் நோக்கத்துடன் இந்த மசோதா தயாரிக்கப்பட்டிருக்கிறது என்று நான் நிச்சயமாகச் சொல்லுவேன். உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்குரிய அம்சம் இந்த மசோதாவில் என்ன இருக்கிறது ? கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு அதிகாரங்கள் கொடுக்கப்படவேண்டும். பிரதமர் நேரு கூட, ஜனநாயகத் தத்துவப்படி அதிகாரம் என்பது கிராமத்திலிருந்து தான் ஆரம்பமாகிறது என்று சொல்லியிருக்கிறார். இந்த மசோதா அந்தத் தத்துவப்படி தயாரிக்கப்படவில்லை. உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான யோசனைகளும், உதவிகளும் டெல்லியிலிருந்தும், சென்னையிலிருந்தும், நகரங்களிலிருந்தும் தான் வரவேண்டியிருக்கிறது. கிராமங்களிலிருந்துதான் அவை வரும் ; வர வேண்டும். விவசாயிகள் கிராமங்களில்தான் இருக்கிறார்கள். விவசாய விஷயங்களை கிராமங்களிலுள்ளவர்கள்தான் நேரிடையாக அறிந்திருக்கிறார்கள். எனவே, கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு போதிய அதிகாரங்களைக்

கொடுத்தால் தான் திட்டங்கள் நிறைவேறும், உணவு தானிய உற்பத்தி அதிகரிக்கும். அவைகளுக்கு அதிகாரங்களைக் கொடுப்பதற்கு மசோதா வகை செய்யவில்லை. எனவே அதிகாரங்கள் சில இடங்களிலேயே குவிவதற்குத் தான் மசோதா அடிகோலுகிறது. ஜில்லா போர்டுகளிடம் அதிகாரங்கள் இருந்தன. ஜில்லா போர்ட்டுகளில் குற்றம் குறைகள் இருந்தன என்று கனம் அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். ஜில்லா போர்டு ப்ரெஸிடெண்டுகளில் காங்கிரஸ்காரர்கள் கூட, குற்றங்கள் செய்திருக்கிறார்கள். எதிர்க்கட்சிக்காரர்கள் தேர்தலில் வெற்றிபெற்று ஜில்லா போர்டுகளில் பதவிக்கு வரும்போது ஜில்லா போர்டுகள் சர்க்காரால் நீக்கப்பட்டன. இதைப் பார்க்கும்போது, இந்த சர்க்கார், எதிர்க்கட்சியினர் அந்த ஸ்தாபனங்களில் செல்வாக்குள்ளவர்களாக ஆவதைப் பார்த்து, பொறுமையுடனும் தன்னல மனப்பான்மையுடனும், அவைகளை நீக்கிவிட்டனர் என்று எனக்குத் தோன்றுகிறது. மற்றவர்களும் பொறுமையாகவும் நிதானமாகவும் இந்த மசோதாவைப் பரிசீலித்தால், இம்மசோதா சட்டமானால் கிராமங்களுக்கு நன்மைகள் ஏற்படுவதைவிட கெடுதல்கள்தான் ஏற்படும் என்பது அவர்களுக்குத் தெரியவரும். எனவே, இந்த மசோதாவைக் கைவிட வேண்டுமென்று கனம் அமைச்சரைத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். இந்த மசோதாவைக் கைவிட்டுவிட்டு ஜில்லா போர்டுகளையே புதுப்பித்து மறுபடியும் கொண்டுவர வேண்டும். ப்ளாக் அபிவிருத்தித் திட்டங்களையும், சமுதாய நலத் திட்டங்களையும் ரெவினியூ இலாகா மூலம் ஜில்லா ரீதியில் நிறைவேற்ற வேண்டும் என்றும், அந்தத் திட்டங்களை பெரிய அளவில், ஜில்லா ரீதியில், தயாரிக்க வேண்டும் என்றும், இவ்வாறெல்லாம் செய்தால் திட்டங்கள் வெற்றியுறும் என்றும் சொல்லிக் கொள்கிறேன். ஜில்லா போர்டுகளை மீண்டும் கொண்டுவர வேண்டுமென்றும், இந்த மசோதாவை வாபஸ் வாங்கவேண்டுமென்றும் கனம் அமைச்சரைக் கேட்டுக்கொண்டு என் சிற்றுரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI V. K. KRISHNAMURTHI : அவைத் தலைவர் அவர்களே, இந்த மசோதாவை அவரவர்கள் தாங்கள் நின்ற இடத்திலிருந்தும், சார்ந்த இடத்திலிருந்தும், சேர்ந்த இடத்திலிருந்தும், பார்த்த இடத்திலிருந்தும், பார்க்கப்பட்ட இடத்திலிருந்தும் நோக்கி வெவ்வேறு கருத்துக்களைத் தெரிவித்ததை நாம் காணாமலில்லை. வரலாறு கண்ட தமிழகத்தையும், வரலாறுடைய தமிழிலக்கியத்தையும் காண்கையில் மணிமுடி தாங்கி மாமாளிகையில் மகிழ்வுடன் வாழ்ந்த மாமன்னர்கள் மக்களாட்சி நிலவவேண்டுமென்று "எண்பேராயமும் ஐம்பெருங்குழுவும்" என்ற குழுவை நிறுவி அரசோச்சியமை இன்தமிழ் இலக்கியம் பயின்றவர்களும் வரலாறு அறிந்தவர்களும் கருதாமலிருக்க முடியவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஸ்தல ஸ்தாபனங்களை மிகச் சிறந்த முறையில் அமைப்பதற்கான மசோதாக்களில் இது நான்காவது மசோதா. இதற்கு முன் மூன்று மசோதாக்கள் வந்திருக்கின்றன. இனிமேல் இரு மசோதாக்கள் வரும். ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து நிற்கும் மசோதாக்களுள் ஒன்றாகிய இம்மசோதாவை நுண்மாண்நுழை புலமைகொண்டு நுணுகியாராய்ந்து பார்க்கும்போது, இம்மசோதாவில் அமைந்துள்ள அமைப்பு மிக நன்றாக இருக்கிறதென்பது இயல்பாகவே தெரிகிறது.

கிராமங்களிலுள்ள மக்கள் ஜனநாயகத் தத்துவத்தை நன்கு புரிந்துகொண்டு தங்களுக்கு எது தேவை என்பதையும் உணர்ந்துகொண்டு அவர்களே, அவைகளை நிறைவேற்றிக்கொள்வதற்கு அவர்களுக்கு வாய்ப்பளிக்கக் கூடிய அம்சங்களை இம்மசோதாவில் காண்கிறோம்.

உலக அரசியலுக்கு வித்திட்ட அரசியல் தத்துவ ஞானிகள் நாட்டை சிறு சிறு பகுதிகளாக **(Units of Self Government)** ஆட்சியியலுக்கு அரண் செய்யும் வகையில் பிரிக்க வேண்டுமென்ற நற்கொள்கையை நம் மாநில ஆட்சியினர் மேற் கொண்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய ஒன்றே. சிறு சிறு பகுதிகளாக பிரிந்தால்தான் நல்ல முறையில் குறைகளை உணர்ந்து, நல்லெண்ணத்துடன் சிந்தனையுடன் கூடி நடைமுறையில் நல்ல திட்டங்கள் வகுக்க முடியுமென்று அறிவித்துக்கொள்ளுகிறேன்.

24th September 1958] [Sri V. K. Krishnamurthi]

10–30 a.m.

இயங்கும் ஜில்லா போர்ட் பிரிந்து பஞ்சாயத்துகள் அத்தனையும் பஞ்சாயத்து யூனியன்களாக மலரும் என்ற அடிப்படையில் பஞ்சாயத்துக்கள் அத்தனையும் பஞ்சாயத்து கௌன்சில்களுடன் பிணைந்து நல்ல முறையில் ஆட்சி செய்யவேண்டுமென்று கூறப்படுகிறது. ஒவ்வொரு பஞ்சாயத்தும் பஞ்சாயத்து கௌன்சிலுடன் பிணைந்து அரசாங்கத்தினுடைய உதவியை யும் பெற்று அவைகள் நல்ல முறையில் பணியாற்றுவதோடு மட்டு மில்லாமல் அது தலை சிறந்ததொரு ஒப்பற்ற அறக் கொள்கையுமாக இருக்கிறது. இலவச கட்டாய ஆரம்பக் கல்வி கொடுக்க பஞ்சாயத்து யூனியன்களுக்கு உதவி செய்யப்படும் என்றிருப்பதைப் பார்க்கும்போது மக்களின் அறியாமையை ஒழித்து, கல்லாமையில் இருந்து மக்களை விலக்கி, மக்கள் நல்ல கல்வி அறிவு உள்ளவர்களாக விளங்க கட்டாய இலவசக் கல்வி முறை அமைந்திருப்பது நாம் எல்லோரும் மகிழ்ச்சியடையக் கூடிய காரியமாகும். இப்பொழுது, ஜில்லா போர்டின் கீழ் இருக்கக்கூடிய பெரிய பாதைகள், மருத்துவ மன்றங்கள், உயர்நிலைப் பள்ளிகள் அத்தனையை யும் அவர்களிடமிருந்து எடுத்துவிட்டு அரசாங்கமே அவைகளை நேரான முறையில் பார்வையிட்டு அங்குள்ள மக்களுக்கு நல்ல வசதிகள் செய்து கொடுக்கயிருப்பதால், கிராம மக்களுக்கு பணியாற்ற வேண்டிய பெரிய பெரிய காரியங்களை செவ்வன செய்வதற்கு அந்த ஸ்தாபனங்களுக்கு வழி வகுக்கப்பட்டிருக்கிறது. மற்றொரு தலை சிறந்த திட்டமும் இதில் இருக்கிறது. சமுதாயக் கல்வித் திட்டம் என்ற ஒப்பற்ற திட்டத்தை ரோமர்கள் கிரேக்கரிடமிருந்து கற்றுக்கொண்டு, அதன் அடிப்படையில் பணியாற்றி "உலகாண்ட உரோமர்கள்" என்ற புகழை எய்தினர். அப்படிப் பட்ட சமுதாயக் கல்வித் திட்டங்கள் நம் இலக்கியத்தில் குறிப்பாக வள்ளுவர் யாத்த திருக்குறளில் அரசியல்-சமூக-வாழ்வியல்-ஆண்டவனியல் இன்னபிற ஒளிர்கின்றன. நாம் இவைகளை கையாண்டு நம் கிராம மக்கள் கல்வியறிவு, அரசியலறிவு இவைகளை ஒருங்கே பெற்று சீரிய முறையில் நல்வாழ்க்கை நடாத்த இத்திட்டத்தில் இடமிருக்கிறது. வையகமே வியக்கும் ஒப்பற்ற சமுதாய நலத்திட்டம் இதில் இயங்குகிறது. பல திட்டங்களை வகுத்து அத்திட்டங்கள் நிறைவேறாத காரணத்தால் திட்டம் தீட்டியவர் களையும், நிறைவேற்ற ஈடுபட்ட அத்தனை பேரையும் சுட்டுத் தள்ளி நாசமாக்கிய கொடுமையை ரஷ்யாவில் கண்டோம். நம் திட்டங்கள் ஜன நாயக தத்துவத்தை அடிப்படையாக கொண்டிருக்கிறது. முதல் யுத்தத் திற்குப் பின் திட்டங்கள் நிறைவேறாததால் பல தலைவர்களையும் மற்றவர் களையும் சுட்டுக் கொன்ற கொடுமையை, எச். ஜி. வெல்ஸ் கூறியுள்ளார். இத்தகைய கொடுமை நம் நாட்டிலில்லை. நம் நாட்டில் குறைகள் பல இருந்தாலும், அவைகள் ஏற்பட காரணமென்ன என்று ஆர அமர சிந்தித்துப் பார்த்து அவைகளைக் களைந்தெறிய முற்படுகிறோம். அங் ஙனம் குறைகளை களைந்தெறிந்துவிட்டு மக்கள் முன்னேற்றமடைய பாடு படுகிறோம். இப்பொழுது நம் நாட்டில், கம்யூனிட்டி பிராஜெக்ட் என்ற திட்டத்தின் கீழ் தேசிய வளர்ச்சித் திட்டமும், வட்டார வளர்ச்சித் திட்டமும் இருக்கின்றன. அவைகளின் அடிப்படையில் நாம் இன்று நமது உணவு உற்பத்தியை அதிகரிக்க பாடுபடுகிறோம். மாற்றான் ஆட்சியில் நம் வழி வகைகள் அத்தனையையும் மறந்து, நமது அறிவை இழந்துபோன காரணத்தினால்தான், இப்பொழுது ஜப்பான் போன்ற நாடுகளில் உணவு உற்பத்தியைப் பெருக்க கையாளும் முறைகளை நாமும் கையாண்டு உணவு உற்பத்தியைப் பெருக்கி, நாட்டிலுள்ள பசியையும், பஞ்சத்தையும், பட்டினியையும் போக்க வேண்டிய நடவடிக்கைகளை கையாள்கிறோம். அது மாத்திரமல்ல. பாதைகள் போடுவதற்கு, அரசாங்கத்தால் தான் முடியும் என்ற நிலை மாறி, எந்தெந்த கிராமங்கள் வட்டார வளர்ச்சித் திட்டத்தில் பிணைக்கப்பட்டிருக்கிறதோ அந்த கிராமங்களில் இருக்கும் மக்கள் பாதை கள் போட பணம் கொடுக்க முடியவில்லையென்றால் "சிரமதானம்" என்ற ஒப்பற்ற தத்துவத்தை அடிப்படையாகக்கொண்டு ஒவ்வொரு கிராம மகனும் 2, 3, 5 நாட்கள் என்று பொருளை எதிர்பார்க்காமல், பணத்திற்காகவல்லாமல், தங்களுக்கு வேண்டிய காரியங்களை தாங்களே செய்துகொள்ளவேண்டுமென்ற அடிப்படையில், அவர்கள், கிராம மக்கள், சிரமதானம், போன்றவைகளால் தங்கள் உழைப்பின் காரணமாக நல்ல பாதைகளை செம்மையாக போட்டுக்கொண்டு வருகிறார்கள், பிறருடைய

உதவியை எதிர்பார்க்காமல், கிணறுகள், குளங்கள் முதலியவைகளை வெட்டுவதற்கு வட்டார வளர்ச்சித் திட்டம் உதவி புரிந்து வருகிறது. கிராமப் பஞ்சாயத்துக்கள், பஞ்சாயத்து கவுன்சில்களுடன் பிணைந்திருப்ப தோடு மட்டுமில்லாமல், நம் நாட்டில் இருக்கக் கூடிய அத்தனை கிராமங் களும் தேசீய வளர்ச்சித் திட்டத்தின் கீழ் என்று வருகிறதோ அன்று நம் நாடு முன்னேற்ற பாதையின் முன்னணியில் வந்து விட்டதெனலாம். இப்பொழுது நம் நாட்டிலுள்ள மக்கள் கிணறுகள் வெட்டவும், குளங் கள் வெட்டவும், பாதைகள் போடவும் பணம் கொடுக்க முடியாத நிலை யில் இருந்தபோதிலும் அவர்கள் அத்தனைபேரும் ஒன்று சேர்ந்து மேற் குறித்த வேலைகளைச் செய்து நிறைவேற்றுகிறார்கள். அவர்கள் மன மகிழ்ச்சியில் திகழ "மனமகிழ் மன்றங்கள்" ஏற்படுத்துகிறார்கள். கிராமங் கள் முன்னேற்றம் அடைய, அங்குள்ள மக்களுக்கு தேவையானவைகளை நிறைவேற்றுவதற்கு பணம் இருந்தால்தான் முடியும், இல்லாவிட்டால் முடியாது என்ற நிலை இன்று மாறி எல்லோரும் ஒன்று சேர்ந்து சிரம தானம் மூலமாக அவர்கள் அவர்களுக்கு வேண்டிய காரியங்களை நிறை வேற்றிக்கொள்ளும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது. சிறிது காலத்திற்கு முன்னர் வரை, முள்ளண்டரம் போன்ற கிராமங்களுக்குச் செல்ல நல்ல பாதைகள் இருந்ததில்லை. ஆனால் இன்று அந்நிலை மாறிவிட்டது. எல்லா கிராமங்களிலும் மக்கள் சிரமதானத்தில் ஈடுபட்டதால் நல்ல நல்ல பாதைகள் அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆக, இந்த வட்டார அமைப்புத் திட்டத்தின் கீழ் எல்லா கிராமங்களிலும் உள்ள மக்கள் தங்கள் கடமையையும், பொறுப்பையும் உணர்ந்து கல்வித்துறையிலும், அறிவுத் துறையிலும், விவசாயத்துறையிலும், எல்லாத் துறைகளிலும் தங்கள் தங்கள் கிராமங்கள் முன்னேற்றமடைவதற்கு பாடுபடவேண்டும். அப்படி ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கடமையையும், பொறுப்பையும் உணர்ந்து பாடு பட அரசாங்கம் வேண்டிய வசதிகள் செய்து கொடுக்கின்றது. ஆண் களுக்குள்ள வாக்குரிமை பெண்களுக்கு சில மேலை நாடுகளில் கூட கொடுக்காதிருந்தபோதிலும், நம் நாட்டில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து பிரதிநிதிகளை தேர்ந்தெடுத்து குறைகளை களைந்தெறிந்து கிராமங்கள் நல்ல முறையில் சீரமைய பாடுபட இத்திட்டம் அறம் வகுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லிக் கொண்டு, இந்த மசோதாவை நான் முழு மனதோடு ஆதரிக்கிறேன். வணக்கம்.

* **SRI A. R. MARIMUTHU :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, பொதுவாக அதிகாரங்களையெல்லாம் பிரித்து கிராம ரீதியாக கொடுக்கப் படவேண்டுமென்று எல்லோரும் விரும்புகிறோம். அந்நிலையில் இன்று கிராமப் பஞ்சாயத்துக்கள், பஞ்சாயத்து கௌன்ஸில்கள் போன்ற முறையில் அமைத்து இதன் மூலம் அதிகாரங்களை எல்லாம் கீழே கொடுக்கப்படுவ தாக எண்ணிக்கொண்டு இந்தச் சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. பொதுவாக இதை பரிசீலனை செய்துபார்த்தால் இன்று, கிராம பஞ்சா யத்துக்களுக்கு என்ன அதிகாரங்கள் ஏற்கனவே இருந்ததோ அந்த அதி காரங்களை விட அதிகப்படியான அதிகாரங்கள் இந்தச் சட்டத்தின் மூலம் கொடுக்கப்படவில்லை. ஆனால் ஜில்லா போர்ட் ரீதியில் இருந்ததை, ஜில்லா போர்ட் அதிகாரங்களையும் நிதியையும் பிரித்து பஞ்சாயத்து யூனியனுக்கு கொடுப்பதற்கு என்னசெய்ய வேண்டுமென்பதைத்தான் இந்தச் சட்டத்தில் நாம் பார்க்கிறோம். ஆனால் இதற்கு முன்னால் தாலூகா போர்ட் எந்த நிலையில் இயங்கி வந்ததோ அதே நிலையில்தான், அதை விட சிறிய அளவில் தான் பஞ்சாயத்து யூனியன் கௌன்ஸில்கள் அமைக்க திட்டமிடப்பட்டி ருக்கிறது. முன்னால் தாலூகா போர்ட் எந்தக் காரணத்திற்காக கலைக்கப் பட்டதோ, அது சரியாக இயங்கவில்லை என்ற காரணத்திற்காகத்தான் ஜில்லா போர்ட் அமைக்கப்பட்டது. ஆனால் இன்று அதேபோல் பஞ்சாயத்து யூனியன்கள் அமைக்க இருக்கிறார்கள். இவை எந்தளவிற்கு வெற்றிகர மாக வேலை செய்யும் என்பதைப் பொறுத்துத்தான் பார்க்க வேண்டுமே தவிர இது நல்ல முறையில் இயங்கி விடும் என்று இப்பொழுது சொல்லிவிட முடியாது. இருந்தாலும் சூழ்நிலையில் அதிகாரங்களை பிரிக்கவேண்டுமென்ற எண்ணத்தில் அதைப் பிரித்து இந்தச் சட்டத்தை கொண்டுவருவதற்காக

24th September 1958] [Sri A. R. Marimuthu]

அதை நான் பாராட்டுகிறேன், வரவேற்கிறேன், பரிபூரணமாக கிராமங்களுக்கு அதிகாரங்கள் பிரித்துக் கொடுக்கப்பட்டுவிட்டது என்பதை நான் ஒத்துக்கொள்ளவில்லையென்றாலும். மேலும் 1961–க்குள் இந்தச் சட்டத்தை அமுலுக்கு கொண்டு வர முடியவில்லை என்றால் மேலும் காலத்தை நீடிப்பதற்கு இதில் வழிசெய்யப்பட்டிருக்கிறது. அது அவசியமில்லை என்று நினைக்கிறேன். கூடியமட்டும் 1961–க்குள் இதை கொண்டு வருவதற்கு அரசாங்கம் முயற்சி எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் இன்றைக்கு கிராம ரீதியாக பஞ்சாயத்தை நிர்வாகம் பண்ணக்கூடியவர்களுக்கு எந்தெந்த வகையில் சிரமங்கள் இருக்கின்றன என்பதைப் பார்த்து அந்த கஷ்டங்களை எல்லாம் நீக்குவதற்கு இதில் வழி வகை செய்யப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் அவ்விதம் ஒன்றும் இல்லை என்றே சொல்லவேண்டியிருக்கிறது. மேலும் நிர்வாக அதிகாரங்கள் எல்லாம் அதிகாரிகளுடைய கையில்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்தில் இருக்கக்கூடிய அங்கத்தினர்களோ அல்லது தலைவரோ ஏதாவது செய்யவேண்டும் என்று நினைத்தால் அவர்கள் அதிகாரிகளுடைய தயவை எதிர்பார்த்துத்தான் செய்யக்கூடிய ஒரு துர்பாக்கியமான நிலையில்தான் இருக்கிறது. சுயேச்சையாக எந்தக் காரியத்தையும் செய்ய முடியாத நிலைதான் இருந்துகொண்டிருக்கிறது. இந்தச் சட்டத்தின் மூலமாக இதை மாற்றவும் இல்லை. அவர்களுக்கு சில வரிகளைபோடுவதற்குள்ள அதிகாரங்கள் மாத்திரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது பல வகைகளில் வரிகளை போட்டிருக்கிறோம். மேலும் இதன் மூலமாக வரிகளை கூடுதலாக போட்டு கிராம மக்களுடைய தலையில் பாரத்தை ஏற்றுவதற்குத்தான் இதில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. விவசாயத்தின் பேரில் ரூபாய் 4 அணா என்றிருந்தது இதன் மூலமாக 45 நயாபைசா என்று கொடுக்கவேண்டிய நிலைதான் இந்த சட்டத்தின் மூலம் ஏற்பட்டிருக்கிறது. ஸர்சார்ஜ் இரண்டு அணா என்றிருப்பதை நீடித்து வைத்துக்கொள்வதற்கும் இதில் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த சட்டத்தின் மூலம் மேலும் வரிகளை விதிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இவ்விதம் மேலும் மேலும் வரிச்சுமையை கிராம மக்களின் மேல் விதிப்பது சரியா என்பதை அரசாங்கம் யோசிக்கவேண்டும். யார் அதிகப்படியாக வரி விதித்து வசூல் செய்கிறார்களோ அவர்களுக்குத்தான் மான்யம் அதிகப்படியாக கிடைக்கும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மான்யம் அதிகமாக கிடைக்க வேண்டும் என்றால் வரிகளை அதிகமாக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. இந்த முறை வரிகளை அதிகப்படியாக வசூல் செய்வதற்கு உற்சாகம் அளிக்கும் என்று இருந்தாலும் கூட கிராம மக்களுக்கு இதன் மூலம் அதிகப்படியாக வரி கொடுக்கவேண்டிய நிலையும் ஏற்படும் என்பதை உணரவேண்டும். ஆகவே இந்த முறை கூடாது என்று நான் கருதுகிறேன். மேலும் 20 ஆயிரம் ஜனத்தொகை உடையதாக இருக்கக்கூடிய பஞ்சாயத்துக்கள், அதிலும் ஒரு லட்சம் ரூபாய் வருமானம் வரக்கூடியதாக இருந்தாலும் அதை முனிசிபாலிடியாக மாற்றலாம் என்று இதில் இருக்கிறது. ஆனால் இதற்கு பல இடங்களிலிருந்தும் ஆட்சேபணை கிளம்பி இருக்கிறது. ஆகவே பஞ்சாயத்து நினைத்தால்தான் இவ்விதம் முனிசிபாலிட்டியாக மாற்ற முடியும் என்று ஒரு திருத்தம் இதில் கொண்டு வந்தால் நல்லதாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். அம்மாதிரியான ஒரு நிலையிருந்தால்தான் பஞ்சாயத்துக்களுக்கு நல்ல மதிப்பும் அதிகாரமும் இருக்க முடியும். மேலும் செஸ் வசூலிலிருந்து பஞ்சாயத் யூனியனுக்கு 9–ல் 4 பங்கு கொடுக்க வேண்டும் என்றும் நகர பஞ்சாயத்துகள் என்றால் 9–ல் இரண்டு பங்கு கொடுக்கவேண்டும் என்றும் கிராம பஞ்சாயத்துக்களுக்கு இவ்விதம் கொடுக்கவேண்டிய தொகைகளை பஞ்சாயத் கவுன்சில் நிர்ணயித்துக்கொள்ள வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதை விட்டு விட வேண்டும். ஏனென்றால் டிஸ்ட்ரிக்ட் போர்டு இருந்து வருகிற காலத்தில் எதற்குக் கேட்டாலும் பணம் இல்லை என்று சொல்லப்படுகிறது. இப்போது டிஸ்ரிக்ட் போர்டின் கீழ் இருக்கக்கூடிய நிர்வாக அதிகாரங்கள் எல்லாம் பஞ்சாயத்து யூனியனுக்கு மாற்றப்படும்போது, அந்தந்த இடங்களில் டிஸ்பென்ஸரிகள், கல்விச்சாலைகள் முதலியன ஏற்படுத்த வேண்டும் என்று சொன்னால் பணம் இல்லை என்று சொல்லக்கூடிய நிலைமைதான் பின்னாலும் ஏற்படும். இதன் காரணமாக

பஞ்சாயத்துகளுக்கு செய்து கொடுக்கவேண்டிய காரியங்களை எல்லாம் குறைத்துவிடக்கூடிய நிலைமை ஏற்படலாம். ஆகவே பஞ்சாயத்துகளுக்கு இவ்வளவு என்பதை இங்கேயே நிர்ணயிக்கவேண்டும் என்று எண்ணுகிறேன். அடுத்தப்படியாக இப்போது நிர்வாக அதிகாரங்கள் எல்லாம், அதிகாரிகளிடத்தில்தான் இருக்கிறதே தவிர தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களிடமோ அல்லது தலைவரிடமோ இல்லை. அந்தமாதிரியான ஒரு நிலை இருக்கக்கூடாது. பஞ்சாயத்தைப் பொறுத்தவரையில் அந்த தலைவருக்குத்தான் நிர்வாக அதிகாரங்கள் எல்லாம் இருக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

*SRI D. S. AUTHIMOOLAM: டெப்யூடி ஸ்பீக்கர் ஸார், இந்த பஞ்சாயத்து மசோதா பல குழப்பங்களின் விளைவாக பிறந்திருக்கும் ஒரு குழந்தை என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதுவும் நொண்டிக் குழந்தை என்று பக்கத்திலுள்ள நண்பர் ஒருவர் கூறுகிறார். அதுவும் உண்மைதான். இதுவரை டிஸ்ட்ரிக்ட்போர்டு ஸ்தாபனம் நல்ல ஸ்தாபனமாக இருந்து வந்தது, சென்ற 11 வருடங்களாக நல்லவிதமாக சேவை செய்து வந்த அந்த ஸ்தாபனத்தை மேலும் நல்ல முறையில் பொது மக்களுக்கு வேலை செய்யக்கூடிய ஸ்தாபனமாக ஆக்கவேண்டும் என்று நினைத்ததின் விளைவாகத்தான் சமீபத்தில் டிஸ்ட்ரிக்ட் கவுன்சில் மசோதா ஒன்றை நிறைவேற்றினோம். இப்போது அதற்கு அடுத்தப்படியாக இந்த மசோதாவும் வந்திருக்கிறது. முன்பு 11 ஜில்லாக்களில் இருந்தது, இப்போது அந்த நிர்வாகம் 358 இடங்களில் துண்டாக்கப்பட்டிருக்கிறது. அவ்வளவுதான். அதே நேரத்தில் கிராம ஜனங்களுக்கு இந்த சமயத்தில் என்ன கிடைத்திருக்கிறது என்று பார்த்தால், ஏதோ கனம் அங்கத்தினர் ஒருவர் கூறினது மாதிரி ராமராஜ்யம் ஏற்படவும் இல்லை, புரட்சிகரமாகவும் ஒன்றும் ஏற்படவில்லை. கனம் அங்கத்தினர் ஒருவர் இதில் புரட்சிகரமான மாறுதல் இருக்கிறது என்று குறிப்பிட்டார். இதில் என்ன புரட்சிகரமான மாறுதல் இருக்கிறது என்று எனக்குத் தெரியவில்லை. உண்மையில் ஒன்றிரண்டு புரட்சி இருக்கிறது, அதாவது கிராம மக்களிடம் இன்னும் வரியை எவ்வளவு தூரம் பல ரூபங்களில் போட்டு வசூல் செய்யலாம் என்கின்ற அடிப்படையில்தான் சில மாறுதல்கள் இதில் இருக்கின்றன. இவர்களுக்கு வேறு வழியும் இல்லை. காரணம் அதிகாரம் பூராவும் சென்ட்ரலைஸ்—ஸாகி விட்டது. இந்த நிலையில் அரை வயிற்றுக்குக் கூட கூழ் இல்லாமல் இருக்கும் லட்சக்கணக்கான கிராம மக்களிடம் புது வரிகளைப் போட்டு கஷ்டப்படுத்துவதைத் தவிர வேறு வழியில்லை. ஆகவேதான் இந்த கிராம பஞ்சாயத்து மசோதாவை தயார் செய்திருக்கிறார்கள். வெள்ளைக்காரன் இருந்த காலத்தில் பல ரோடுகளையும், பல ஆஸ்பத்திரிகளையும் பல கல்வி சாலைகளையும் அமைத்து கொடுப்பதற்கு உதவி தொகை கொடுக்கப்பட்டு வந்தது. ஜில்லா போர்டுக்கு முன்னால் எல்லாம் பணம் கொடுக்கப்படுவது, 20 வருஷத்திற்கு முன்னால் அந்த ஜில்லாவில் எத்தனை பஸ் ஓடுகிறதோ அதற்குத் தகுந்தபடி கிராண்டுகளை கொடுத்து வந்தார்கள். முன்பு ஒரு லட்சத்தி இருபதினாயிரம் ரூபாய் கொடுக்கப்பட்டு வந்தது என்றால் 15 வருஷத்திற்குப் பிறகும் அதே தொகைதான் கொடுக்கப்பட்டு வருகிறது. முன்னால் இருந்ததை விட பஸ்கள் எல்லாம் கூடுதலாகிவிட்டது. முன்பு 30 பஸ்கள் ஓடிக்கொண்டிருந்தது. இப்போது 600 பஸ்களாக பெருகியிருக்கிறது. ஆனால் அதற்குத் தகுந்தபடி உதவித் தொகை கொடுப்பதில்லை. ஆகையால் ஜில்லா போர்டை கவனிப்பாரற்று அதனுடைய நியாயமான வேலைகள் எல்லாம் இப்போது சீரழிந்து விட்டது. அதை இப்போது வேறு ரூபத்தில் கொண்டுவந்திருக்கிறார்கள். இவ்விதம் வெறுமனே மசோதாவை கொண்டு வந்து கிராம மக்களை ஏமாற்றிக் கொண்டிருப்பதில் பிரயோஜனமில்லை. இதை கிராம மக்கள் விரும்ப மாட்டார்கள். ஆகவே அரசாங்கத்திற்கு சொல்லிவிடுகிறேன். அம்பர் சர்க்கார் என்றும், சர்வோதயம் என்றும் பலவிதமான ரூபங்களில் இதையெல்லாம் கொண்டு வந்து பிரச்சாரம் செய்து மக்களிடத்தில் கூடுதல் வரிகளை வசூல் செய்ய நினைக்கவேண்டாம். அவர்கள் இதையெல்லாம் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். ஆகவே பஞ்சாயத்துக்களுக்கு ஆட்டாணமி

24th September 1958] [Sri D. S. Authimoolam]

முறையில் ஜாஸ்தியான அதிகாரமும் பணமும் கொடுக்கவேண்டும். அதற்குத் தகுந்தபடி திட்டங்களை வகுக்கவேண்டும். திட்டங்களை மாத்திரம் போட்டுவிட்டு, சீனி, சர்க்கரை, லட்டு என்று சொல்லிவிட்டால் மாத்திரம் அது இனிக்காது. ஆகவே தீவிரமாக இதை பரிசீலனை செய்வதற்கு செலக்ட் கமிட்டிக்கு அனுப்பவேண்டும். அதோடு இந்திய சர்க்காரிலிருந்து அதிக மாக உதவித் தொகை வாங்கி கிராம மக்களுக்கு கொடுத்து, அதன் மூல மாக சுயராஜ்யம் என்பதின் பயனை அனுபவிப்பதற்கு வேண்டிய வசதிகளை செய்து கொடுக்கவேண்டும். ஆகவே அதற்குத் தகுந்த முறையில் இந்த மசோதாவை கொண்டுவரவேண்டும். இந்த மசோதாவை தீவிரமாக பரிசீலனை செய்த பின் இந்த சபைக்கு கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

(Mr. Speaker in the Chair.)

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் சபாநாயகர் அவர்களே, நாம் இப்போது விவாதித்து வரக்கூடிய விஷயம் மிகவும் முக்கிய மானது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள்.

நம்முடைய நாட்டினுடைய அரசியல் அமைப்பு எப்படி இருக்கவேண்டு மென்பதைப் பற்றி நாம் தீர்மானித்ததற்குப் பிறகு, நமது ஆட்சி முறை யிலே மிகவும் முக்கியமான ஒரு அம்சத்தைப் பற்றி இந்த மசோதா மூல மாக இன்றைக்கு நாம் பரிசீலனை செய்கிறோம். நமது கிராம ஆட்சி எந்த முறையில் அமைந்தால் கிராம மக்களுக்கு வேண்டிய எல்லா விதமான வசதிகளையும் செய்து கொடுக்க முடியும் என்ற அடிப்படையில் தான் இந்தப் பரிசீலனை நடந்து கொண்டிருக்கிறது. இந்த முக்கியமான விஷயத்திலே, தகுந்த பிரகாரம் சர்க்காரோ அல்லது இதற்கென்று ஏற்படுத்தப்பட்ட குழுவோ நல்ல முறையிலே ஆலோசித்து முடிவுகளை எடுப்பதற்கு உரிய ஆற்றலோ அறிவோ இருக்கிறதா, இல்லையா என் பதைப்பற்றி பல அங்கத்தினர்கள் பல விதமாக அபிப்பிராயப்படலாம். அதைப் பற்றி நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஏனென்றால், இதைப் பற்றி பல்வேறு கருத்துக்களை, விதம் விதமான கருத்துக்களை, நியாயமா கவே கொள்ள முடியும். இதிலே ஒரு கருத்துத்தான் சிறந்த கருத்து, இன்னொரு கருத்து சிறந்தது அல்ல என்ற முறையில் வறையறுத்துக் கூறி விட முடியாது. எந்தக் கருத்தை எடுத்துக்கொண்டாலும், அதில் சில சிறப்புகள் அமைந்திருப்பதைக் காணலாம். அத்துடன் கூட சில குறைபாடுகள் இருப்பதையும் காணலாம். அதன் காரணமாக ஒரு அபிப்பிராயம் கொண்டிருப்பதன் காரணமாக இதுதான் சிறந்தது தன் னுடைய அபிப்பிராயம்தான் சிறந்தது என்று யாரும் கொள்ள முடி யாது என்று நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். இதன் காரண மாகத்தான் சர்க்கார் எந்த விதமான முடிவையும் எடுத்துக்கொள்ள வில்லை. இந்த இலாகாவை நிர்வகிக்கும் மந்திரியினுடைய அபிப்பிரா யம் என்னவாக இருந்தபோதிலும், நிதி அமைச்சருடைய அபிப்பிராயம் என்னவாக இருந்தபோதிலும், முதலமைச்சருடைய அபிப்பிராயம் என்ன வாக இருந்தபோதிலும், சர்க்காரின் ஒன்றுகூடிய அபிப்பிராயம் என்ன வாக இருந்தபோதிலும், ஏதோ ஒரு கருத்தை வைத்துக்கொண்டு உட னடியாக ஏற்படுத்திவிடவேண்டும் என்ற அடிப்படையில் தயார் செய்யா மல், சட்ட சபையில் இருக்கக்கூடிய, இரு சபைகளிலும் இருக்கக்கூடிய கட்சிப் பிரதிநிதிகளைக் கொண்டு பரிசீலனை செய்து, பிறகு ஒரு முடிவுக்கு வரவேண்டுமென்ற காரணத்திற்காக, பல்வேறு கருத்துக்களையும் ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம். என்னைப் பொறுத்த வரையில், இதுதான் சிறந்த முடிவு, இதற்கு மேல் சிறந்த முடிவே இருக்காது என்று சொல்லத் தயாராயில்லை. ஆனால், எந்த முடிவை எடுத்தாலும், நான் முன்பு சொன்னது போல், அதிலே சில சிறப்புகளும் இருக்கின்றன, அதோடு சில குறைகளும் இருக்கின்றன. ஆகவே, உடனடியாக இதற்கு ஒரு முடிவைக் கண்டு, அதை நடைமுறைக்குக் கொண்டு வந்து நல்ல முறையில் நடத்துவதற்கு முயற்சி செய்து, ஒரு நல்ல நிர்வாக அமைப்பை அமைத்துக்கொள்ள முடியுமே தவிர, ஒவ்வொருவரும் தன்னுடைய

10-50 a.m.

அபிப்பிராயங்களைச் சொல்லிக் கொண்டு இருந்தால், எல்லோரும் இதுதான் சிறந்தது என்று சொல்லும் முறையில், எதையும் செய்துவிட முடியாது. இந்த அபிப்பிராயத்தில் தான் சட்டசபைக் குழு எல்லா விஷயங்களையும் பரிசீலனை செய்து, முடிவுகளை எடுத்து, இந்த மசோதா இப்போது சபை முன் வைக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் மாறுபட்ட கருத்துகள் இருக் கின்றன என்ற காரணத்தால், இது சரியல்ல என்று, மசோதாவிலே இருக்கக்கூடிய பல்வேறு திட்டங்களை ஒதுக்கிவிடாமல், மாறுபட்ட கருத் துக்களுக்கு இடம் இருக்கிறது என்ற காரணத்தினாலே உடனடியாக மாற்றம் செய்ய வேண்டுமென்று ஒவ்வொருவரும் வலியுறுத்தாமல் இப்போது செய்திருக்கக்கூடிய முடிவுகளில் உள்ள சிறப்புக்களை உணர்ந்து, அதி லுள்ள குறைகளையும் தெரிந்து, அந்தக் குறைகளை நீக்குவதற்கு உருப் படியான யோசனைகளைச் சொல்ல முடியுமானால், அவைகளை இந்தச் சபை எற்றுக் கொள்ளத்தயாராக இருக்கும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். சர்க்காரைப் பொறுத்த வரையில், இந்தத் திட்டமாகத் தான் இருக்கவேண்டுமென்ற கொள்கை அடிப்படையில் எந்த விதமான முடிவும் செய்து விடவில்லை. ஆனால் இந்த மசோதாவைப் பரிசீலிப்ப திலே நாம் எடுத்துக்கொள்ளக்கூடிய ஒரு மனப்பான்மையை மட்டும் நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். இது எல்லா கட்சிப் பிரதிநிதி களும் சேர்ந்து முடிவு செய்திருக்கக்கூடிய ஒரு காரியமானதால், ஒரு முடிவை மாற்ற வேண்டுமென்று சொன்னால், அந்த மாற்றத்திற்கு அடிப் படையான காரணங்கள் இருந்தாலொழிய, தங்களுக்கு மாறுபட்ட அபிப் பிராயம் இருக்கிறது என்ற ஒரு காரணத்திற்காக மட்டும் இதை மாற்ற வேண்டுமென்று சொன்னால் எல்லோரும் சேர்ந்து ஒரு முடிவு செய்வதற்கு அர்த்தமில்லாமல் போய்விடும். இதிலே மாறுபட்ட கருத்துக்களுக்கு இடம் இருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். எல்லா முறையிலும் அனுபவம் வாய்ந்தவர்கள், அதுவும் கட்சித் தலைவர்கள், பஞ்சாயத்து ஆட் சியில் அனுபவம் உள்ளவர்கள், அப்போது தாலுகா போர்டு இருந்த போது, அதிலே பங்கு கொண்டு அனுபவம் உள்ளவர்கள், ஜில்லா போர்டு பிரஸிடெண்டுகளாக இருந்து நல்ல அனுபவம் பெற்றவர்கள், இதற்கு முன்பு பரிசீலனை செய்த காலத்தில் ஜில்லா போர்டு பிரஸிடெண்டாக இருந்தவர்கள், பல்வேறு அனுபவங்களைப் பெற்றவர்கள், கிராமங்களில் இருந்து அனுபவம் பெற்றவர்கள் எல்லோரும் உட்கார்ந்து, கிராம ஆட்சி அமைப்பு எப்படி இருக்கவேண்டுமென்று யோசித்து, அந்த அடிப்படை யில்தான் இந்த மசோதா வந்திருக்கிறது என்பதை மட்டும் ஒவ்வொரு அங்கத்தினரும் மனதில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று நான் கேட் டுக்கொள்கிறேன். ஒரு சிலர் இதைப் பற்றிப் பேசும்போது, மலையைத் தோண்டி எலியைக் கண்டுபிடித்தது போல இருக்கிறது என்று சொன் னார்கள். கனம் அங்கத்தினர் பழனிசாமிதான் சொன்னார், அதைப் பார் த்து நான் ஆச்சரியமடைந்தேன். அவருடைய கட்சியின் பிரதிநிதியும் இதில் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார். இப்படி எலியைப் பிடிக்க அவ ருடைய கட்சியின் பிரதிநிதியை ஏன் அனுப்பினார் என்று எனக்குத் தெரியவில்லை. இன்றைக்கு இந்த மாதிரி வார்த்தைகளை யார் வேண்டு மானாலும் பேசி விடலாம். இதையே இன்னொரு குழுவிற்கு அனுப்பி, அந்தக் குழு ஒரு திட்டத்தை சமர்ப்பித்தாலும், அதிலே கூட ஏராள மான குறைகள் வரலாம். ஆகவே குற்றங்களைக் கண்டு பிடித்து குறை சொல்லுவதை விட, அவைகளை நீக்குவதற்கான யோசனைகள் என்ன என்ற முறையில் பரிசீலித்தால், இந்த மசோதா மூலமாக நாம் எந்த லட்சியத்தை அடைய விரும்புகிறோமோ, அந்த லட்சியத்தை அடைய முடியும். அப்படியில்லாது, தான் கொண்டிருக்கிற கருத்துத்தான் சரியான கருத்து என்ற முறையிலே பேசிக் கொண்டே போய்க் கொண்டி ருந்தால் எல்லா கட்சிப் பிரதிநிதிகளும் சேர்ந்து முடிவுக்கு வந்திருப் பதை மாற்ற வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருந்தால், இதற்கு ஒரு முடிவே இருக்காது என்பதைத்தான் நான் மறுபடியும் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

இதிலே இன்னொன்று பார்க்கவேண்டும். இப்போது இந்த அமைப்பை ஏற்படுத்துவதாவது, கடைசி வரைக்கும் இப்படியே இருந்து விடும் என்று

24th September 1958] [Sri C. Subramaniam]

யாரும் நினைக்க வேண்டியதில்லை. நடை முறையிலே, எதிர்பாராத
குறைகள் வெளியாகலாம், எதிர்பாராத கஷ்டங்கள் வரலாம். அக்
காலத்தில் அவைகளை மாற்றியமைக்க வேண்டிய நடவடிக்கைகளை அந்த
சந்தர்ப்பத்தில் இருக்கக்கூடியவர்கள் எடுப்பார்கள். அப்போது பொறுப்
பிலுள்ளவர்கள் எடுப்பார்கள். அப்போது இருக்கக்கூடிய சட்டசபை எடுக்கும்
என்பதில் சந்தேகமில்லை. இதுதான் கடைசித் திட்டம் என்றும்,
கஷ்டங்கள் ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வது என்றும் எண்ணிக்கொண்டு
இருக்கத்தேவையில்லை. அதோடு, மூன்று வருஷத்திற்கு ஒரு தடவையோ,
ஐந்து வருஷத்திற்கு ஒரு தடவையோ இதே போன்று எல்லா கட்சிப் பிரதி
நிதிகளையும் கொண்டு ஒரு குழுவை ஏற்படுத்தி, இந்தச் சட்டம் இது
வரையில் எப்படி நடந்திருக்கிறது, இதிலுள்ள குறைகள் என்ன, என்று
பரிசீலனை செய்து அவர்கள் செய்யக்கூடிய சிபாரிசுகளின் அடிப்படையில் 11 a.m.
எங்கெங்கே மாறுதல்களைச் செய்ய வேண்டுமோ, அவைகளைச் செய்து
கொள்ள முடியும், இவ்வாறு ஒரு திட்டத்தையும் ஏற்படுத்திக்கொள்
வது நல்லது என்று நினைக்கிறேன். மூன்று வருஷத்திற்கு ஒரு தடவையோ,
ஐந்து வருஷத்திற்கு ஒரு தடவையோ, இந்தச் சட்டம் எந்த முறையிலே நடக்
கிறது, இதிலே கஷ்டங்கள், குறைகள் ஏதேனும் இருக்கின்றனவா என்ற
முறையில் அவ்வப்போது மாற்றம் செய்து கொள்வது அவசியமாக இருக்
கலாம். இன்றைக்கு நமக்கு தோன்றக்கூடிய அளவிற்கு நம்முடைய
புத்திக்கு எட்டக்கூடிய அளவிற்கு நாம் இந்த அமைப்பை ஏற்படுத்தலாம்.
இதை கனம் அங்கத்தினர்களெல்லோரும் மனதில் வைத்துக்கொண்டு,
இந்த மசோதாவைப் பரிசீலனை செய்து, மாற்றங்கள் அவசியம் என்று
நினைத்தால் அதைப்பற்றி மட்டும் வலியுறுத்தவேண்டுமென்று கேட்டுக்
கொள்கிறேன்.

இதிலே, நாம் இந்த மசோதாவை அமைப்பதிலே அடிப்படையாகக்
கொண்டிருக்கக்கூடிய கருத்துக்களை மனதில் வைத்துக்கொள்ள வேண்டி
யது அவசியம். முக்கியமாக இன்றைக்கு ஒவ்வொரு கிராமத்திற்கும்
ஒரு பஞ்சாயத்தை ஏற்படுத்தவேண்டும் என்பது. இதிலே கருத்து வேறு
பாடே கிடையாது. அதற்கு அடுத்தப்படியாக ஒரு கிராமத்திற்கு மட்டும்
இருக்கக்கூடிய விஷயங்களைத் தவிர சில கிராமங்களுக்குப் பொதுவாக
இருக்கக்கூடிய ஒரு பிராந்தியத்தினுடைய விஷயங்களை கவனிப்பதற்கு
நிர்வாக அமைப்பு எப்படி இருக்கவேண்டுமென்பதைப் பற்றி கருத்து
வேறுபாடு இருக்கிறது. ஒரு சில அங்கத்தினர்கள், முன்பு இருந்த
ஜில்லா போர்டே சரியானது, அதை அப்படியே நடத்த முடியும் என்று
நினைக்கிறார்கள். ஒரு சிலர் தாலூகா அளவிலே வைக்க வேண்டுமென்று
நினைக்கிறார்கள். எல்லாக் கருத்துக்களையும் பரிசீலனை செய்து பார்த்து,
என்ன காரணத்தினால் இந்த வட்டார அபிவிருத்தி முறை ஏற்படுத்த
வேண்டுமென்பதை, அங்கத்தினர்களுக்குக் கொடுக்கப் பட்டிருக்கக்
கூடிய வெளியீடுகளில் மிகவும் தெளிவாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.
அத்துடன் அங்கே சொல்லப்பட்ட எல்லா வித கருத்துக்களுக்கும் அதிலே
கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையினால் இன்றைக்கு திரும்பவும் ஜில்லா
போர்டுகளே இருக்கலாம், தாலூகா போர்டுகளே இருக்கலாம் என்பதைப்
பற்றி திரும்பத் திரும்ப விவாதம் செய்து கொண்டிருக்கவேண்டிய அவ
சியம் இல்லை. முக்கியமாக, அபிவிருத்தி வட்டார அடிப்படையைக்
கொண்டு பார்த்தால் பல்வேறு அபிவிருத்தி வேலைகளை நிறைவேற்றுவதற்
காக பல அதிகாரிகள் இன்றைக்கு அந்த அமைப்பிலே இருக்கிறார்கள். அவர்
களை நாம் உபயோகப்படுத்திக் கொள்வோமேயானால் இன்னும் அதிக
மான அதிகாரிகளை நியமித்து வீண் செலவு செய்யவேண்டியது
அவசியமில்லை என்பது தெரியவரும். ஆகவே, இந்த அபிவிருத்தி வட்டா
ரத்தை அடிப்படையாகக் கொண்டு இந்த மசோதாவிலே அதற்கான
சிபார்சுகள் செய்யப்பட்டிருக்கின்றன. அபிவிருத்தி வட்டார அமைப்பிலே
பார்க்கும் பொழுது, கிராமப் பஞ்சாயத்துகளுக்கு என்னென்ன அதிகாரம்
இருக்கவேண்டும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு என்னென்ன அதி
காரம் இருக்கவேண்டும் என்பதை நாம் கவனிக்கவேண்டும். எந்தெந்த
விஷயங்கள் தனியாக ஒரு கிராமத்திற்கு மட்டும் பொருந்துமோ, அவர்
கள் எடுத்துக்கொள்ளக்கூடிய நடவடிக்கைகளின் காரணமாக பக்கத்துக்

கிராமங்களுக்குப் பாதகம் இல்லாமல் இருக்குமோ, அந்தக் காரியங்களை பஞ்சாயத்துக்கு ஒதுக்க வேண்டுமென்ற முறையிலே ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. இப்பொழுது பஞ்சாயத்து குழுவுக்குக் கொடுக்கக்கூடிய அதி காரத்தையும், தனிப்பட்ட பஞ்சாயத்திற்குக் கொடுக்கக்கூடிய அதிகாரத் தையும் பரிசீலனை செய்து பார்ப்போமேயானால், இரண்டு அல்லது இரண் டுக்கு மேற்பட்ட கிராமங்களுக்குப் பொதுவான விஷயமாக இருக்குமே யானால் பஞ்சாயத்து குழுவுக்கும், தனிப்பட்ட கிராமத்திலே மட்டும் செய்யக் கூடிய காரியமாக இருந்தால் பஞ்சாயத்துக்கும் என்ற அடிப்படையிலே தான் அதிகாரம் ஒதுக்கப்பட்டிருக்கிறது, வேறு எந்த அடிப்படையிலும் இல்லை என்பது தெரியவரும். அப்படிப் பரிசீலனை செய்து பார்க்கும் பொழுது, ஏற்கனவே இருந்த அதிகாரங்கள் சில எடுக்கப்பட்டு விட்டனவே என்று சிலர் குறை கூறினார்கள். முன்பு இருந்த அமைப்பில் ஜில்லா போர்டுகளுக்கு இருந்த சில அதிகாரங்கள் பஞ்சாயத்து போர்டுகளுக்கும் இருந்தது. இதன் காரணமாக இரண்டிற்கும் முரண்பாடு ஏற்பட்டு வந் தது. ஆனால் இன்றைக்கு வட்டார அளவிலே பஞ்சாயத்துக் குழுவுக்கு பஞ்சாயத்துப் பிரதிநிதிகளைக் கொண்டே ஏற்பாடு செய்யும்பொழுது, அந்தப் பஞ்சாயத்துக்களுக்கும், பஞ்சாயத்து குழுக்களுக்கும் முரண்பாடு இருக்கக் கூடாது என்ற முறையில் இந்த விஷயம் பரிசீலனை செய்யப்பட்டது. பஞ்சாயத்து குழுவிற்கு கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தை, எந்த விதத்திலும் மற்ற பகுதிகளை பாதிக்காமல் தனிப்பட்ட கிராமங்களுக்கே ஒதுக்கியிருக்கலாம் என்று யாராவது எடுத்துக் காட்டுவார்களேயானால், அதைப் பரிசீலனை செய்வதற்குத் தயாராயிருக்கிறோம் என்பதை தெரி வித்துக்கொள்கிறேன். ஏதோ அதிகாரங்களைப் பிரித்து விட்டோம் என்று சொல்வதில் அர்த்தமில்லை. பஞ்சாயத்து யூனியனுக்குக் கொடுத் திருக்கும் அதிகாரத்தை பஞ்சாயத்துக்கே கொடுத்திருக்க முடியும் என்று சொன்னால், அதைப் பரிசீலனை செய்து பார்க்க முடியும். எந்தத் தத்துவ அடிப்படையில் அதிகாரங்களைப் பிரித்திருக்கிறது என்பதை விளக்கிக் காட்டுவது முக்கியம் என்ற முறையில் இதை எடுத்துச்சொன் னேன்.

அடுத்தப்படியாக நாம் பஞ்சாயத்தைப் பற்றிப் பேசும்பொழுது, அந்தப் பஞ்சாயத்துக்கள் எந்த முறையில் அமைய வேண்டுமென்பதைப் பற்றி பலர் பலவிதமான கருத்துக்களைத் தெரிவித்தார்கள். முக்கியமாக, தலை வரை எப்படி தேர்ந்தெடுக்கவேண்டுமென்பதிலே கருத்து வேறுபாடு கள் இருந்தன. காங்கிரஸ் ஸ்தாபனமே, இந்த சட்டத்தை இயற்றும் போது, எல்லா மக்களும் சேர்ந்து தேர்ந்தெடுக்கக்கூடிய ஒருவர் தலைவ ராக இருக்கவேண்டுமென்று முடிவு செய்து அந்தச் சட்டம் இயற்றப்பட் டது. அந்தச் சட்டமானது சில வருஷ காலமாக நடைமுறையில் இருந்து வருகிறது. அதை அடிப்படையாக வைத்துக்கொண்டு இந்தப் பிரச்னையை நாம் பரிசீலனை செய்து பார்க்கவேண்டும். இன்றைக்கு நாம் விரும்புவது என்ன ? தனிப்பட்டவர்களுக்கு அதிகாரம் கொடுக்கவேண்டுமென்பதல்ல நம்முடைய கருத்து. ஜனங்களுடைய பிரதிநிதிகள் கொண்ட சபைக்கு எல்லாவிதமான அதிகாரமும் கொடுக்கவேண்டுமென்பதுதான் இந்த சபை யின் அடிப்படையான கருத்தாக இருக்கவேண்டும். தனிப்பட்டவர்களுக்கு எவ்வளவு அதிகாரம் கொடுக்க வேண்டும் என்ற முறையிலே இன்றை க்கு இதைப் பரிசீலனை செய்து பார்க்கக்கூடாது. அதற்குப் பதிலாக மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட சபைகளுக்கு எந்த அளவுக்கு அதிகாரங் களைக் கொடுக்கவேண்டும் என்று பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கும்பொழுது பொறுப்பு முழுவதும் மக்கள் பிரதிநிதிகள் அடங்கிய பஞ்சாயத்து சபைக்கு இருக்கவேண்டும். அப்படி இருக்கவேண்டு மென்று சொல்லும் பொழுது, பஞ்சாயத்து சபைக்கு உட்பட்டு நடக்கக் கூடிய தலைவராக இருக்கவேண்டியது அவசியம். ஆனால், இன்றைக்குப் பார்க்கப்போனால், பஞ்சாயத்துத் தலைவருக்கும் அங்கத்தினர்களுக்கும் மனோபாவம் எப்படி யிருக்கிறது என்றால் " நீங்கள் ஒருவிதத்திலே தேர்ந் தெடுக்கப்பட்டு வந்தீர்கள், நான் எல்லா மக்களாலேயும் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறேன் " என்று சொல்லக்கூடிய முறையில், ஒன்றுக்கொன்று முரண்பட்ட முறையில், இருக்கிறது. இன்று பல இடங்களிலே நடவடிக்கை

24th September 1958] [Sri C. Subramaniam]

களைப் பார்ப்போமேயானுல், தலைவர் சொல்லுவதை பஞ்சாயத்து கவனிக்க வில்லை. தலைவர் சொல்லுவதற்கு நேர்மாறாக பஞ்சாயத்தில் தீர்மானங் கள் நிறைவேற்றப்படுகின்றன. இப்படி முரண்பாடு ஏற்பட்டிருக்கிறது. சில இடங்களில் இந்த நிர்வாகமே ஸ்தம்பித்துவிடக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. உதாரணமாக, மந்திரி சபையை எடுத்துக்கொள்ளுங் கள். மந்திரிசபை இந்த சபைக்கு பொறுப்பாக இருக்கக்கூடிய கார ணத்தினுலே, இந்த சபையின் நம்பிக்கை இருந்தால்தான் மந்திரிசபை இருக்கலாம். ஆகவே எல்லா விஷயங்களையும் இங்கே எடுத்துச் சொல்லி, இந்த சபை என்ன சொல்லுகிறதோ அந்த அடிப்படையில் நாங்கள் நடக்கிறோம். அப்படியில்லாமல், மக்கள் எல்லோரும், சேர்ந்து ஓட்டுப் போட்டு மந்திரிகளை தனியாகத் தேர்ந்தெடுத்துவிடுவது என்று சொன் னல், இந்த சபைக்கு பொறுப்பு இல்லை. அமெரிக்காவில் இந்த ஆட்சி முறையை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். ஆனல் நாம் அந்த ஆட்சி முறையை ஏற்றுக்கொள்ளவில்லை. சபைக்குப் பொறுப்பாக இருந்து நிர் வாகத்தை நடத்த வேண்டுமென்று சொல்லும்பொழுது, முரண்பட்ட கருத் துக்கள் இருப்பதன் காரணமாக நிர்வாகமே ஸ்தம்பித்து விடக்கூடிய நிலைமை இருக்கிறது என்பதை நான் இந்த சந்தர்ப்பத்திலே வலியுறுத்த விரும்புகிறேன். இதையெல்லாம் பரிசீலனை செய்து பார்த்து, முன்பு இருந்த சட்டம் ஒருவிதமாக இருந்தபோதிலும், பஞ்சாயத்து மெம்பர்களே தலைவரைத் தேர்ந்தெடுத்தால்தான் பஞ்சாயத்து சபை நல்ல முறையில் நடைபெறும், தனிப்பட்டவர்களுக்கு தனி அதிகாரமோ, பதவியோ கொடுக் கக் கூடிய விஷயம் அல்ல இது, மக்களுடைய சபை நல்ல முறையில் நடக்க வேண்டும் என்ற எண்ணத்துடன்தான் செய்திருக்கிறோம். வேறொரு முறையிலும் தேர்ந்தெடுக்க முடியும், அந்த முறைதான் நல்லது என்று சொல்லுவதினுல், அது சரியல்ல என்று வலியுறுத்துவதற்காகவே இதை நான் எடுத்துச் சொல்லுகிறேன்.

இன்றைக்கு ஜில்லா போர்டுகளுக்கும், பஞ்சாயத்துகளுக்கும் இருக் கக்கூடிய அதிகாரங்களை, பஞ்சாயத்துக்களுக்கும், பஞ்சாயத்து குழுக்க ளுக்கும் பிரித்துக் கொடுப்பது மட்டுமல்ல, இன்னும் ஒருபடி அதிகமாகவே நாம் சென்றிருக்கிறோம். இன்றைக்கு அபிவிருத்தித் திட்டங்கள் அடிப் படையிலே செய்யக்கூடிய பல்வேறு காரியங்கள் இந்த பஞ்சாயத்து கவுன் சில் மூலமாகச் செய்யப்படவேண்டும், பஞ்சாயத்துக்கள் மூலமாகச் செய் யப்படவேண்டும் என்ற கருத்தையும் நாங்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். ஆகவே, பெரிய பொறுப்பை இந்த பஞ்சாயத்துகளுக்கும், பஞ்சாயத்து கவுன்சில்களுக்கும் இந்த சட்டத்தின் மூலமாக கொடுப்பதற்கு ஏற்பாடு செய்கிறோம். பலர் " இதிலே என்ன இருக்கிறது, பெருவாரியாகப் பார்க் கும்போது ஒன்றுமில்லை" என்று சொல்லலாம். ஆனல், நன்றாக ஆராய் ந்து பார்ப்போமேயானுல் இதன் மூலமாக எவ்வளவு பெரிய காரியங்களைச் சாதிக்க முடியும், நல்ல முறையில் நிர்வாகம் அமையுமேயானுல் மக்க ளுக்கு எவ்வளவு நன்மைகளைச் செய்ய முடியும் என்பதை பஞ்சாயத்து நிர்வாகத்திலே அனுபவமுள்ளவர்கள், ஜில்லா போர்டு நிர்வாகத்திலே அனுபவமுள்ளவர்கள் கட்டாயம் ஒப்புக்கொள்வார்கள் என்பதில் சந் தேகமில்லை. அப்பேர்ப்பட்ட ஒரு பொறுப்பை ஒப்புவிக்கும்பொழுது, யாருக்கு எவ்வளவு அதிகாரம் கொடுப்பது என்பது ஒருபுறமிருக்க, இந்த நிர் வாகம் நல்ல முறையில் நடப்பதற்கான ஏற்பாட்டைச் செய்யவேண்டும். ஆகையால் சில பாதுகாப்புகள் அளிக்கவேண்டியிருக்கிறது. நிர்வாகம் நல்ல முறையில் நடப்பதற்கு ஏற்பாடு செய்யும்பொழுது, அதிகாரத் திற்கு வரம்பு கட்டுவதாக நினைத்துவிடக் கூடாது. நம்முடைய அரசியல் சட்டத்தை எடுத்துக்கொள்ளுங்கள். அரசியல் சட்டத்திலே ஜன நாயக முறை ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. மக்கள் தேர்ந்தெடுக்கக் கூடிய பிரதிநிதிகளுக்குத்தான் சர்வாதிகாரமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் சொல்லுவதுதான் கடைசி வார்த்தையாக இருக்கவேண்டும் என்ற முறையில் பார்லிமெண்டரி டெமாக்ரஸி ஒப்புக்கொள்ளப்பட்டி ருக்கிறது. இருந்தாலும், எதற்காக "ஜீவாதார உரிமைகள்" என்று பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது ? மக்களுடைய அதிகாரத்தைப் பெற் றிருந்தாலும், இந்த ஜீவாதார உரிமைகளை மீறி சட்டம் இயற்றுவதற்கு

நமக்கு அதிகாரம் கிடையாது. இதனாலே அதிகாரத்திற்கு வரம்பு கட்டுவது என்று அர்த்தமில்லை. இருக்கக்கூடிய சூழ்நிலைக்குத் தக்கவாறு நிர்வாகம் சீர்குலைந்து போகாமல், மக்களுக்குக் கஷ்டம் ஏற்படாத வகையில் பாதுகாப்பு செய்து கொடுப்பது அவசியம். இவ்வாறு பாதுகாப்புகள் அளிக்கும்போது அதிகாரத்திற்கு வரம்பு கட்டுவதாக நினைத்துவிடக்கூடாது. அது அரசியல் தத்துவத்திற்கு முரண்பாடானது என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். ஆகையினால் தான் இன்றைக்கு இதுமாதிரி பஞ்சாயத்து, பஞ்சாயத்து குழுவின் மூலம் இதுவரையில் செய்து வந்த, மக்களுக்கு ரோடு வசதி செய்து கொடுப்பது, குடி தண்ணீர், சுகாதாரம் முதலிய வசதிகளை செய்து கொடுப்பது என்பதுமட்டுமல்லாமல், அபிவிருத்தித் திட்டங்களையும் நிறைவேற்றவேண்டுமென்கின்ற அடிப்படையிலே நாம் அவர்களுக்கு பொறுப்பை ஏற்படுத்தும்பொழுது, யார் தலைவராக வந்தாலும், யாருக்கு தலைமை தாங்கி நடத்த வேண்டிய பொறுப்பு வந்தாலும், எந்த விதமான தடையும் இல்லாமல் நிர்வாகம் நடத்தக்கூடிய ஏற்பாட்டை செய்து முடிப்பது மிகவும் அவசியம். ஜனநாயக அடிப்படையிலே யார் வேண்டுமானாலும் எந்தப் பதவிக்கும் வரலாம். அதற்கு உரிமை இருக்கிறது. படிப்பு இல்லை, அதனால் இந்த ஸ்தானத்திற்கு வரக்கூடாது, நிர்வாக அனுபவம் இல்லை, தலைவர் பதவிக்கு வரக்கூடாது என்கின்ற முறையில் நாம் உரிமைகளை கட்டுப்படுத்தவில்லை. யார் வேண்டுமானாலும் எந்தப் பதவிக்கு வேண்டுமானாலும் வரலாம். சில இடங்களிலே மக்கள் நல்ல முறையிலே தலைவர்களை தேர்ந்தெடுப்பார்கள். பல இடங்களில் அவர்கள் நல்ல முறையிலே தேர்ந்தெடுக்கப்படலாம். தேர்ந்தெடுக்கப்படாமலும் இருக்கலாம். ஆகவே, சில சமயங்களில் சில தவறுகள் காரணமாக நல்ல முறையில் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்படவில்லையானால், அப்பொழுதும், நிர்வாகம் தொடர்ந்து நடக்கக்கூடிய வகையிலே நாம் ஏற்பாடு செய்யவேண்டியிருக்கிறது. தலைவர் தேர்தலிலே ஏதோ தவறு ஏற்பட்டுவிட்ட காரணத்தினால், அந்தப் பகுதியிலே ஒன்றுமே நடக்க முடியாத நிலைமை ஏற்பட்டுவிட்டால், ஆட்சியை பிரித்துக்கொடுத்தது தவறு, அதிகாரத்தை பிரித்து கிராம மக்களுக்கு கொடுத்தது தவறு என்று சிலர் நினைக்கிறார்களே அவர்கள் வாதாடுவதற்கு இடம் கொடுத்தவர்களாவோம். அதற்கு நாம் உதவி செய்பவர்களாக இருக்கக்கூடாது. கிராமத்தில் ஆட்சி இன்னும் நல்ல முறையில் பரவலாக ஏற்படுவதற்கு உதவியாக இருக்க வேண்டுமானால், இந்தப் புதிய அமைப்பை ஏற்படுத்தவேண்டியிருக்கிறது. யார் பதவிக்கு வந்தாலும், தலைவர் தகுதி எப்படியிருந்தாலும், நாம் ஏற்படுத்தக்கூடிய நிர்வாக அமைப்பின் மூலம் அந்தப் பகுதியிலே காரியங்கள் நிற்காமல் நடைபெற வேண்டும் என்கின்ற ஒரு முறையில் ஏற்பாடு செய்யவேண்டியிருக்கிறது. இந்த முறையில் தான் தலைவருக்கும், எக்ஸிகியூடிவ் ஆபீஸருக்கும் எந்த அளவு அதிகாரம் இருக்க வேண்டும் என்பது பற்றி யோசிக்கவேண்டும். பல அங்கத்தினர்கள் பேசியதை நான் கவனித்திருக்கிறேன். நாம் இதிலே கவனிக்க வேண்டியது பஞ்சாயத்து சபைக்கு என்ன அதிகாரம் இருக்க வேண்டும், அதே மாதிரி பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு இன்னும் எவ்வளவு அதிகமாக அதிகாரம் இருக்க வேண்டும் என்பது தான். அதில் தனிப்பட்டவர்களுக்கு எவ்வளவு அதிகாரத்தை கொடுத்து, அவர்கள் அந்த அதிகாரத்தை நடத்துவதற்கு எந்த முறையில் ஏற்பாடு செய்வது என்கின்ற முறையில் பரிசீலனை செய்வது, என்னைப் பொறுத்த வரையில், தவறான வழியிலே நம்முடைய கருத்தை செலுத்துவது ஆகும். இது விஷயத்தில் வேறு ஒரு வித அபிப்பிராயமும் இருப்பதற்கு இடம் இருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். இவைகளையெல்லாம் பரிசீலனை செய்த பிற்பாடுதான் நாம் ஏற்படுத்திய குழு இந்த அமைப்பு எல்லாவிதமான சந்தர்ப்பத்திலும் நல்ல முறையிலே நிர்வாகம் நடைபெறுவதற்கு ஏற்ற அமைப்பு என்று கருதி, இம்மாதிரி ஒரு அமைப்பை ஏற்படுத்த முடிவு செய்தது. வேறு விதமான அபிப்பிராயம் நம்முடைய மனதிலே இருக்கிறது, அதன் காரணமாக நாம் நினைக்கிற பிரகாரம் இந்த அமைப்பை மாற்றி அமைக்க வேண்டும் என்று இப்பொழுது வலியுறுத்துவது சரியல்ல என்பதை எடுத்துச் சொல்லுவதற்காகத் தான் நான் இதை விளக்கினேன். என்னுடைய

11-10 a.m.

24th September 1958] [Sri C. Subramaniam]

தனிப்பட்ட அபிப்பிராயத்தை வலியுறுத்தவில்லை. எல்லோரும் சேர்ந்து இதிலே இருக்கக்கூடிய கஷ்டங்களையெல்லாம், இதிலே இருக்கக்கூடிய பல்வேறு நுணுக்கங்களையெல்லாம் ஆராய்ந்து பரிசீலித்த பிற்பாடு தான் இப்பொழுது இருக்கக்கூடிய நிலைமையிலே இந்த அமைப்பு இருந்தால் தான் எந்த விதமான பாதகமும் இல்லாமல், தடை இல்லாமல், தேர்தல் முறையில் ஏதாவது தவறுதல் நேர்ந்தாலும்கூட, நிர்வாகத்தை நடத்திச் செல்லக்கூடிய அமைப்பு ஏற்படும் என்று முடிவு செய்யப்பட்டது. இதில் கருத்து வேறுபாடு இருப்பதற்கு இடம் இருந்தாலும், இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பஞ்சாயத்தாக இருந்தாலும் சரி, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலாக இருந்தாலும் சரி, தேர்ந்தெடுத்து வரக்கூடியவர்களிடத்தில் நிர்வாக அதிகாரம் இருக்க வேண்டியது அவசியமா, அதை அவர்கள் எந்த அளவுக்கு நல்ல முறையிலே செலுத்த முடியும் என்பதை கவனிக்க வேண்டும். அதுவும் சிறு சிறு குழுவாக இருக்கக்கூடிய காலத்தில்,—சென்னையில் உட்கார்ந்து ராஜ்யம் பூராவும் சம்பந்தப்பட்ட ஒரு அதிகாரத்தை பிரயோகிப்பது என்றால் அது ஒவ்வொரு இடத்தையும் பாதிப்பதில்லை,—ஒரு பகுதியிலே இருக்கக்கூடியவர்கள் அந்தப் பகுதியிலே நடக்கக்கூடிய நிகழ்ச்சி மூலம் பாதிக்கப்படுவார்கள் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்—வட்டார அபிவிருத்தி பகுதியாக இருக்கக்கூடிய அளவிலே ஒவ்வொரு சிறிய விஷயத்திலும்கூட விருப்பு வெறுப்பு இல்லாமல் நிர்வாகம் நடைபெறவேண்டியது எல்லாவற்றிலும் மிகவும் முக்கியமானது. அதற்கான ஒரு ஏற்பாட்டைச் செய்வது மிகவும் அவசியம். அந்த அடிப்படையில் கொள்கையை வகுக்கும்பொழுது, எந்த இடத்தில் நிர்வாகம் நடக்க வேண்டும், எந்த அடிப்படையில் அதிகாரம் இந்த சபைக்கு கொடுக்கிறோம், அதற்கு மேலாக கொள்கைகளை நிறைவேற்றுவதிலே யாருக்கு அதிகாரம் இருக்கவேண்டும் என்பதை யோசித்துப் பார்க்கவேண்டும். உதாரணமாக வரி எந்த விதத்திலே விதிக்கப்படவேண்டுமென்பது பற்றி பஞ்சாயத்துகளும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களும் முடிவு செய்யவேண்டும். அதற்கு இந்தச் சபைகளுக்கு பூரண அதிகாரம் இருக்க வேண்டும். ஆனால் இந்த வரியை நிர்ணயிப்பதில் ஒருவரைப் பொறுத்த வரையில் ஏதாவது தகராறு ஏற்பட்டால், யார் முடிவாகச் சொல்லுவது என்பது பற்றி கொஞ்சம் யோசனை செய்து பார்த்தோமானால், அதில் பயிற்சி பெற்றவர்கள், அந்த நுணுக்கங்களை தெரிந்தவர்கள் அதை முடிவு செய்யவேண்டும் என்பது ஒரு புறம் இருக்க, இதுமாதிரி தேர்தலிலே ஈடுபடுபவர்கள், விருப்பு, வெறுப்புக்கு உட்படுபவர்கள் இதை முடிவு செய்வது என்று சொன்னால், பலர் நியாயமாக நடந்துகொண்டாலும்கூட, ஒரு சமயம் அநியாயம் நடந்துவிடுமோ என்ற உணர்ச்சி ஏற்படும். ஒருவர் கட்டிய வரி சரியானதா என்பது போன்ற விஷயங்களை தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்கள் முடிவு செய்வதாய் இருந்தால், அதை பரிசீலனை செய்யும்பொழுது விருப்பு வெறுப்புக்களைக் காட்ட இடம் ஏற்படுகிறது என்கின்ற பல புகார்கள் பல இடங்களில் இன்றைக்கு நடக்கக்கூடிய நிர்வாக அமைப்பில் கிடைத்துக் கொண்டிருக்கின்றன. அதுமட்டுமல்ல. இன்றைக்கு ஒரு ஆக்கிரமிப்பை விலக்கவேண்டுமென்று சொன்னால் எது ஆக்கிரமிப்பு என்பது பற்றி அதற்கான கொள்கையை வகுத்துவிடலாம். ஆனால் ஆக்கிரமிப்பை விலக்கும் அதிகாரம் தேர்தலில் வரக்கூடியவர்களிடத்தில், விருப்பு, வெறுப்புக்கு உட்பட்டவர்களிடத்தில் இருந்தால், சிலருக்கு எடுக்கலாம் என்று தோன்றலாம், சிலருக்கு எடுக்கக்கூடாது என்று தோன்றலாம். அவ்வாறு இல்லாது, பாரபட்சமில்லாமல் யாராக இருந்தாலும் நல்ல முறையில் நிர்வாகத்தை நடத்துவதற்கு ஒரு அதிகாரிக்கு பொறுப்பை கொடுக்க வேண்டும். மேலும் அந்த அதிகாரி சரிவர நடந்துகொள்ளாவிட்டால், அவருடைய பொறுப்பை சரிவர நிறைவேற்றாவிட்டால், அவர் பேரில் நடவடிக்கை எடுக்கக்கூடிய நிலைமையில் இந்தச் சபைகள் இருக்கவேண்டும். ஆகவே தான் நிர்வாகத்தில் ஒரு சாதாரண விஷயத்தில் கூட நுணுக்கங்களை தெரிந்து செய்யக்கூடியவர்கள் வேண்டியிருக்கிறது. ஆனால் தேர்ந்தெடுக்கக்கூடியவர்களில் யார் வேண்டுமானாலும் வரலாம். அனுபவம் பெற்றவர்கள் தான் வரவேண்டுமென்பதில்லை. வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்த எனக்கு மந்திரியாக இருக்கக்கூடிய பொறுப்பு ஏற்பட்டது.

[Sri C. Subramaniam] [24th September 1958

எனக்கு நிர்வாக நுணுக்கங்களெல்லாம் தெரியும் என்று யாரும் எதிர் பார்க்க முடியாது. அதற்காகத் தான் ஆலோசனை சொல்லுவதற்கும், நுணுக்கங்களை எடுத்துச் சொல்லுவதற்கும், சில விஷயங்களை முடிவு செய்வதற்கும் பயிற்சி பெற்ற, அனுபவம் பெற்ற தனிப்பட்ட அதிகார வர்க்கம் ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. சிலர் சொல்லலாம் இதனால் பல தடங்கல்கள் ஏற்படுகின்றன என்று. ஆனால், எதிலும் சிறப்பும் இருக்கிறது, குறையும் இருக்கிறது. ஆனால் பெருவாரியாக பார்க்கப் போனால், அனுகூலங்களையும் பிரதிகூலங்களையும் சேர்த்துப் பார்க்கப்போனால் இது போன்று விஷயங்களை எடுத்துச் சொல்லுவதற்கு, கடைசியாக முடிவு செய்வதற்கு, முக்கியமாக நிர்வாக விஷயங்களில், நிர்வாக நுணுக்கங் களில் பயிற்சி பெற்றவர்கள்தான் அதற்கு அருகதையாக இருக்கிறார்கள் என்கின்ற முறையில்தான் இந்த அமைப்பு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. உதாரணமாக, யார் மந்திரிகளாக வந்தாலும், கொள்கை எப்படி இருக்க வேண்டுமென்று தீர்மானிப்பது மந்திரி சபையின் பொறுப்பு. அதற்கு மேலாக இந்தச் சபையின் பொறுப்பு. ஆனால் அந்தக் கொள்கையை நிறைவேற்றுவது, அமுலுக்குக் கொண்டுவருவது தனிப்பட்ட எல்லோ ருக்கும் பொதுவாக இயங்கக்கூடிய அதிகார வர்க்கத்தினுடைய பொறுப் பில் விடப்பட்டிருக்கிறது. அதனால் தான் அதிகார வர்க்கம் அரசியலில் ஈடுபடக்கூடாது, ஒரு கட்சியிலும் ஈடுபடக்கூடாது என்பது போன்ற கட்டுப் பாடுகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. பஞ்சாயத்தாக இருந்தாலும் சரி, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலாக இருந்தாலும் சரி, முதலிலே இருக்கக் கூடிய நிர்வாகம் நல்ல முறையில் நடைபெறவேண்டுமென்பது ஒறுபுறம் இருக்க, விருப்பு, வெறுப்பு இல்லாமல் நிர்வாகம் நடத்தப்பட வேண்டுமென்பதையும் மனதில் கொள்ள வேண்டும். ஆகவே, பயிற்சி உள்ளவர்களை, அனுபவம் உள்ளவர்களை வைத்துக்கொண்டு நிர்வாகத்தை நடத்துகிறோம். அவர்கள் ஏதாவது தவறு செய்தால், அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கக்கூடிய முறையில் நிர்வாக அமைப்பு ஏற்படுத்தப்படவேண்டும். நிர்வாகம் நடத்தக்கூடியவர்கள் சட்டத்தை மீறி நடந்து கொள்வார்களேயானால் அவர்கள் பேரில் சபை தான் நடவடிக்கை எடுத்து முடிவு செய்யவேண்டும். சபை கொள்கையை வகுத்துக்கொடுக் கும். அந்தக் கொள்கையை நிறைவேற்றவேண்டிய பொறுப்பு பயிற்சி பெற்ற, சம்பளம் வாங்கிக் கொண்டு, அந்த சபைக்கு கீழ்ப்பட்டு நடக்கக் கூடிய அதிகாரிகளிடம் ஒப்படைக்கப்பட்டு, அவர்கள் வரம்பு மீறி நடந்தால், அல்லது அநியாயமாக நடந்தால், அவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்கக் கூடிய வகையில் இந்த அமைப்பை ஏற்படுத்தினால்தான் இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையில் நிர்வாகத்திற்கு எந்த விதத்திலும் பாதகம் இல்லாமல், எல்லாப் பகுதிகளிலும் நிர்வாகத்தை நடத்த முடியும். எனக்கு நம்பிக்கை இருக்கிறது, சில தலைவர்களாவது வழிகாட்டும் முறை யிலே இயங்குவார்கள் என்று. இன்றைக்கு நாம் ஏற்படுத்தக் கூடியது திறமை பெற்றவர்களுக்கு மட்டுமல்லாமல், திறமையில்லாதவர்கள் வரும் போதும் நிர்வாகம் நடைபெறவேண்டும். ஆகவே தான், இதை நன்றாக ஆழ்ந்த யோசனைக்குப் பிறகு, பரிசீலனைக்குப் பிறகு, நீங்கள் அமைத்த குழு இந்த முடிவுக்கு வந்திருக்கிறது. வேறுபட்ட கருத்து இருக்கலாம். ஆனால், இந்த முடிவையே மாற்ற வேண்டும் என்று வலியுறுத்த வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

11-20 a.m.

அடுத்தபடியாக, நிர்வாகம் நல்ல முறையிலே நடைபெற வேண்டு மானால், நிதி வசதிகள் போதிய அளவு இல்லாமல், அதிகாரம் மட்டும் கொடுத்தால், பல காரியங்களைச் செய்ய முடியாமல் போய்விடும். அதற்காக ஒரு தனிக் குழு அமைக்கப்பட்டது. அவர்கள் எந்த எந்த அதிகாரங்கள் பஞ்சாயத்துக்கு கொடுக்க வேண்டும், எந்த எந்த அதிகாரங்கள் கௌன்சி லுக்குக் கொடுக்கவேண்டும், இவர்களுக்கு எந்த அளவுக்கு நிதி அமைக்க வேண்டும், அதையெல்லாம் எப்படி அமைக்க வேண்டும், என்பதையெல் லாம் அங்கத்தினர்களைக் கொண்ட அந்தக் குழு ஆராய்ச்சி செய்து, ஒரு அறிக்கையும் புரிந்து கொள்ளும் முறையிலே கொடுத்திருக்கிறார்கள். அதில் கொடுத்திருக்கக்கூடிய அதிகாரங்களைப் பார்க்கவேண்டும். அதிலி ருந்து தெரியும், இன்றைக்கு பஞ்சாயத்துக்கு பூர்ண பொறுப்பு இருக்கிறது.

24th September 1958] [Sri C. Subramaniam]

நிர்வகிக்க நிதியை ஏற்பாடு செய்து கொடுத்தால்தான் இன்றைக்கு நடந்து இருக்கக்கூடிய அளவில் முன்னேற்றக் காரியங்கள் செய்ய முடியும். உதாரணமாக கல்வித் துறையை எடுத்துக்கொண்டால், எல்லாப் பகுதி களிலும் கல்வி பரவி இருக்கவில்லை. சில பகுதிகளில் அதிகமாகப் பரவி இருக்கிறது, சில வேறு பகுதிகளில் அவ்வளவு பரவவில்லை, மிகக் குறைவாக இருக்கிறது. நாம் இந்த நிதியை ஒதுக்கி வைத்தால் தான், இன்றைக்கு முன்னேற்றம் அடைந்திருக்கும் பகுதிகளின் அளவுக்கு பிற்போக்கான பகுதிகளும் முன்னேறும் வகையில் அமையும். கல்வி அதிக மாக இருக்கும் பகுதிகளின் அளவை வைத்துக்கொண்டு, அந்த முறை யிலே ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற கருத்திலே, அந்த அளவை வைத்துக்கொண்டு நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது. கல்வி பரவுவது மட்டுமல்ல, பல்வேறு வசதிகளும் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். முனி ஸிபாலிடிகளிலும் கூட, பல வசதிகள் தேவைப்படுகின்றன. மேஜர் பஞ்சாயத்துக்களிலும் கூட தேவைப்படுகின்றன. ரோடு வசதி, சுகாதார வசதி, இன்னும் எத்தனையோ வசதிகள். இவைகளில் கிராம மக்களுக்குத் தலைக்கு எவ்வளவு செலவாகிறது என்று பார்த்தால், மேஜர் பஞ்சாயத்தில் அதைப் போல் 5 அல்லது 10 பங்கு செலவாகிறது, முனிஸிபாலிடிகளில் 20 அல்லது 25 பங்கு ஆகிறது. சென்னையில், இன்னும் அதிகமாக இருக்கிறது. ஆகவே இதற்கெல்லாம் நிதி வேண்டும். இதிலும் ஒரு முடிவு செய்திருக்கிறார்கள். வரி போடும் அதிகாரத்தை நாம் வைத்துக் கொண்டு, வரிமூலம் வரும் பணத்தை செலவு செய்வது அவர்களிடம் என்று இருத்தல் நல்லதல்ல. வரி போடும் பொறுப்பு நமக்கு, அந்தப் பணத்தை செலவு செய்வது மட்டும் பஞ்சாயத்துக்கும், கௌன்சிலுக்கும், வரி வசூலில் அவர்களுக்கு ஒரு பொறுப்பும் இல்லை என்றால், பொறுப் புணர்ச்சியோடு அவர்கள் காரியங்கள் செய்ய முடியாது என்பதை எல் லோரும் ஒப்புக்கொண்டார்கள். இப்பொழுது இருக்கக்கூடிய கல்வியளவை எடுத்துக்கொண்டால், நீம் உதவியோடு, அங்கு இருப்பவர்களும் பொறுப்பை ஏற்றுக்கொண்டால், பொறுப்பான முறையிலே காரியங்கள் நடைபெறும். ஆகவே தான் இந்த மாச்சிங் கிராண்ட் அவர்களுக்கு எந்த அளவுக்குக் கொடுக்க வேண்டும், எந்த அளவுக்கு நாம் அவர்களுக்குத் தூண்டு கோலாக இருந்து கல்வியைப் பெருக்கும் வசதிகளை செய்து கொடுக்க வேண்டும் என்று செய்திருக்கிறார்கள். ஆனால், இப்பொழுது, அவர்களுக்கு வரி போடும் பொறுப்பு வேண்டியதில்லை, பணத்தை மட்டும் செலவழித்தால் போதும் என்று இந்த சட்ட சபை முடிவு செய்தால்— அது சரியான முடிவு என்று நான் சொல்லமாட்டேன்—எனக்கு ஆட்சே பணையில்லை. ஆனால், நீங்கள் அமைத்த குழு நல்ல முறையிலே ஆராய்ந்து, அது சிறந்தது அல்ல என்று முடிவு செய்திருக்கிறார்கள். அவர்களுக்கும் வரிபோடுதல், பணத்தை செலவழிப்பதில் போல, பொறுப்பு இருக்க வேண்டும் என்று அமைக்கப்பட்டிருக்கிறது.

வரி வசூல் செய்வதைப் பற்றிச் சொன்னார்கள். இன்றைக்கு உண்மை யிலேயே, பஞ்சாயத்துக்கள் வரி வசூலிக்கத் தயாராக இருப்பார்களானால், அதை நான் மிக்க மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ள முற்படுவேன். ஆனால், வரி போடலாம், வசூல் செய்வது எங்களால் முடியாது என்று பலர் சொல்கிறார்கள். ஆகவே, வரி வசூல் செய்யும் கஷ்டத்தையும் பரிசீலனை செய்து, இந்த முடிவுக்கு வந்திருக்கிறார்கள். மேலாகப் பார்த்து விட்டு அதிகாரம் குறைந்து விட்டது என்று சொல்லிவிடக் கூடாது என்று வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தப்படியாக, அபிவிருத்தித் திட்டங்கள் எந்த அளவுக்கு நடை பெற வேண்டும் என்பது. திட்டங்கள் நல்ல முறையிலே நடந்தால் தான் மக்களின் பொருளாதாரம் உயரும், அந்த அளவுக்குத் தான் அவர்கள் வாழ்க்கைத் தரமும் உயரும். பொருளாதாரம் உயராமல், வறுமை இருந் துக்கொண்டேயிருந்தால், அதிகமான வசதிகள் இருந்தும் பயன் இல்லை, அவைகளை மக்கள் அனுபவிக்க முடியாது, அனுபவிக்கும் சக்தி அவர் களுக்கு இருக்க முடியாது. அதற்காக, இன்று கம்யூனிடி டெவலப் மெண்ட் ஸ்கீம்கள் ஏற்பாடு செய்யப் பட்டிருக்கின்றன. இதில் வெறும்

அதிகாரிகளைக் கொண்டு செய்து விடுவது என்பது தவறு. அதுவும் நமக்கு ஏற்பட்டிருக்கும் படிப்பினை. எப்படி அதிகாரிகள் இல்லாமல், நிர்வாகம் நடைபெறுதோ அதே மாதிரித்தான், அதிகாரிகள் மட்டும் இருந்து அபிவிருத்தித் திட்டங்கள் இருப்பது. அதிகாரிகளை மட்டும் வைத்துக்கொண்டு அபிவிருத்தித் திட்டங்களை நிறைவேற்றி விடலாம் என்று நினைப்பது, வெறும் பகல் கனவு. மக்களின் பொறுப்பு எந்த அளவுக்கு உதவுகிறதோ, அந்த அளவுக்குத் தான் திட்டங்கள் வெற்றி பெறுகின்றன என்று அனுபவத்திலிருந்து உணர்ந்திருக்கிறோம். அதிகமாக நிதி ஒதுக்கப்பட்டாலும், பஞ்சாயத்துக்கள், கௌன்சில்கள் பொறுப்பாக அந்தந்த வேலைகளைச் செய்தால்தான், பூரா நன்மையையும் மக்கள் அடைய முடியும். அந்த முறையிலே, அவர்கள் செய்ய வேண்டுமென்றே இந்த மாதிரி அவர்களுக்குப் பொறுப்பை வைத்து இந்த விதி அமைத்திருக்கிறது.

ஒரு கருத்துப்பற்றி சொல்ல விரும்புகிறேன். இதில் சர்க்கார் அதிகாரத்தைக் கொடுத்தாலும் கொடுக்கலாம், இல்லாவிட்டாலும் இல்லை, என்ற கருத்தை தெரிவித்தார்கள். அதைப் பற்றி ஆட்சேபம் தெரிவித்தார்கள். இந்தப் பொறுப்பை எல்லா இடங்களிலும் கொடுத்துவிட முடியாது. படிப்படியாக வேண்டுமானால் கொடுக்கலாம். அதற்கு வேண்டுமானால் ஒரு காலவரம்பை வைக்கலாம். அதற்கேற்றவாறு வாசகத்தை அமைத்திருக்கிறார்கள். பஞ்சாயத்திலும், யூனியனிலும் பொறுப்பு அதிகமாக ஏற்பட்டவுடன், பல இடங்களிலே கொடுக்கலாம். ஆகவே, இந்தக் கொள்கையை ஒட்டித்தான் சட்ட சபைக் குழு சிபாரிசு செய்திருக்கிறது. இதிலே தாமதங்கள் ஏற்பட்டால் அவ்வப்பொழுது, சட்ட சபையிலே கேள்விகள் போட்டு கேட்கலாம். விவாதங்களின் போது வலியுறுத்தலாம், ஆகவே அதற்கேற்றவாறே இதில் வாசகம் அமைந்திருக்கிறது. எல்லோரும் ஏகோபித்து ஒத்துக்கொள்ளக்கூடிய முறையில் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. எல்லோரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய அளவில் இது கொண்டு வரப்பட்டிருக்கிறது. நல்ல முறையில் இந்த நிர்வாகம் நடைபெறவேண்டும் என்ற எண்ணத்தில் இதைக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. நடைமுறைக்கு இது வரும்போது எல்லோரும் ஒத்துழைத்து அமுலுக்குக் கொண்டு வர வேண்டும். இது ஒரு சிறந்த முறை. இதன் மூலமாக கிராம மக்களுக்கு நன்மை ஏற்படும் என்று அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த சபையிலுள்ள ஏகோபித்த கருத்தில் இதை ஏற்றுக்கொள்ள வேண்டும். மக்கள் நன்மை அடையும் முறையில் இதை நடை முறைக்குக் கொண்டு வரவேண்டும். இதன் மூலமாக உண்மையான கிராம ஆட்சி ஏற்பட வேண்டும். அதன் மூலமாக கிராம மக்கள் பல்வேறு நன்மைகளை அடைய வேண்டும். இன்றைக்கு இதில் சில குறைகள் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இதை நடைமுறைக்குக் கொண்டு வரும்போது அதில் என்னன்ன குறைகள் இருக்கின்றன என்பதை அனுபவத்தில் பார்த்து அதன்படி திருத்தங்கள் செய்து கொள்ளலாம். அப்படி திருத்தங்களைச் செய்து கொள்வதற்கு நமக்கு அதிகாரம் இருக்கிறது. இன்றைக்கு வெவ்வேறு நோக்கத்துடன் இதை அணுகக்கூடாது. கட்சி பாகுபாடுகள் இல்லாமல் கட்சி மனப்பான்மையில் தங்களுடைய கருத்துக்களைச் செலுத்தாமல் நல்ல முறையில் இதை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். கட்சி பாகுபாடு இல்லாமல் குறைகளை நீக்குவதற்கு ஆலோசனைகளைச் சொல்ல வேண்டும். தங்களுடைய கட்சிக் கொள்கைகளை வலியுறுத்தும் அளவில் இருக்கக்கூடாது. அந்த அடிப்படையில் இந்த மசோதாவை அணுகாமல் கிராம மக்களுக்கு நன்மையைச் செய்ய வேண்டுமென்ற அடிப்படையில் இதை அணுக வேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

11-30 a.m.

SRI C. N. ANNADURAI: சட்ட மன்றத் தலைவர் அவர்களே, ஊராட்சி மன்றங்களுக்கான மசோதாபற்றி இன்றையதினம் மூன்றுவது நாளாக பொது விவாதம் நடத்தி அதற்குப் பிறகு இன்னும் நான்கு நாட்கள் மசோதாவிலுள்ள ஷரத்துக்களைப் பற்றிய விவாதம் இந்த சபை நடத்த இருக்கிறது. கடந்த மூன்று நாட்களாக நடைபெற்றுக்கொண்டு

24th September 1958] [Sri C. N. Annadurai]

வந்தபோது விவாதமும், இனி நடைபெற ஏற்பாடாகியிருக்கும் நான்கு நாட்கள் மசோதாவிலேயுள்ள ஷரத்துக்களைப்பற்றிய விவாதமும் ஓரளவுக்கு தேவையில்லையோ என்று நாம் ஐயப்படத்தக்க அளவுக்கு, சபைத்தலைவர் கனம் நிதி அமைச்சர் அவர்கள், இப்படிப்பட்ட மசோதாக்கள் பொறுக்குக் கமிட்டிக்கு விடப்பட்ட பிறகு, பொறுக்குக் கமிட்டியிலே எல்லாக் கட்சியினுடைய உறுப்பினர்களும் அமர்ந்து இருந்து, ஏகோபித்த முடிவுக்கு வந்த ஒரு விஷயத்தை மறுபடியும் மறுபடியும் நுணுக்கமாக ஆராய்வது தேவை தானா என்ற ஒரு புதிய பிரச்னையை இங்கே கிளப்பியிருக்கிறார்கள்.

பொறுக்குக் கமிட்டியிலே நிறைவேற்றப்பட்டவைகள், அந்தந்த கட்சியினுடைய தலைவர்களும் உறுப்பினர்களும் அந்தக் கமிட்டியிலே இடம் பெற்றிருந்தார்கள் என்ற காரணத்தினாலேயே அவைகளில் உள்ள சாதக பாதகங்களையோ, நுணுக்கங்களையோ நாம் விவாதிப்பது முறையல்ல என்று நிதி அமைச்சர் அவர்கள் கருதுவாரானால், ஐந்து நாட்கள், ஆறு நாட்கள் அதற்காக இந்தச் சபையினுடைய காலத்தை ஒதுக்குவதற்குப் பதிலாக, பொறுக்குக் கமிட்டியிலே இடம் பெற்ற உறுப்பினர்களைக் கொண்டு, சபையிலே உள்ள மற்றவர்களுக்கெல்லாம், நாங்கள் இன்ன இன்ன காரணத்தாலே, இன்ன இன்ன விதிமுறைகளை ஏற்படுத்தியிருக்கிறோம் என்று விளக்கம் அளித்து, மற்றவர்கள் கருத்து எதும் கூறாமல் செய்திருக்கலாம்.

ஆனால், ஜனநாயக சம்பிரதாயத்தில், ஆளும் கட்சியினர் நிறைவேற்ற வேண்டுமென்று கருதுகிற சட்டத்தை, மசோதாவாக அவர்கள் முதலில் தயாரிக்கிறார்கள். அப்படித் தயாரிக்கப்பட்ட மசோதாவில், நான்கு சுவற்றுக்கு இடையே என்ன செய்யலாம் என்ற முறையில் தயாரிக்கப்பட்ட மசோதாவில், என்ன திருத்தங்களைப் புகுத்தலாம் என்று பல கட்சியினுடைய தலைவர்களும், தனிப்பட்ட உறுப்பினர்களும் பொறுக்குக் கமிட்டியிலே இடம் பெற்று அவர்கள் அதிலே தங்களுடைய கருத்துக்களைத் தெரிவிக்கின்றார்கள். தெரிவிக்கின்ற கருத்துக்கள் அத்தனையும் அப்படியே ஏற்றுக்கொள்ளப்படும் என்று பொருள் அல்ல; செய்யப்பட்ட முடிவுகள் அத்தனையும் எல்லோரும் ஏற்றுக்கொண்டுள்ள கருத்துக்கள் என்றும் பொருள் அல்ல. பல கருத்துக்கள் விவாத வடிவிலிருந்து மசோதாவாக சபைக்கு வருகிறது. அப்படி வருகின்ற நேரத்தில், பல நல்ல புதிய கருத்துக்களும், பல விவாதத்துக்குரிய நல்ல பிரச்னைகளும் எடுத்துக்காட்டப்படும் என்ற நம்பிக்கையிலே தான் இந்த மன்றத்திலே மூன்று நாட்களாக பொது விவாதமும், மற்ற நான்கு நாட்கள் இந்த மசோதாவிலேயுள்ள நுணுக்கங்களைப்பற்றியும் நாம் விவாதிக்க வேண்டியவர்களாக இருக்கின்றோம்.

ஆகையால், " இது என்னுடைய மசோதா அல்ல ; சர்க்காருடைய மசோதாவும் அல்ல ; எல்லாக் கட்சித் தலைவர்களும் சேர்ந்து செய்த மசோதா ; ஆகையால், அவர்கள் எல்லாம் சொன்ன கருத்துக்களை இங்கே நீங்கள் நுணுக்கமான முறையில் மறுத்துப் பேசுவது முறையல்ல" என்று நிதி அமைச்சர் சொல்வது விவாதத்திலிருந்து சர்க்கார்த் தரப்பினர் தப்பித்துக்கொள்ள விரும்புகிறார்கள் என்றுதான் எனக்கு ஐயப்பாடு தோன்றுகிறது.

" கட்சியினுடைய கண்ணோட்டத்திலே இதைக் கவனிக்க வேண்டாம் " என்று சொல்கிற நேரத்தில் நான் ஒன்றை இந்த மன்றத்திலே குறிப்பிட்டுச் சொல்ல விரும்புகிறேன். நல்ல வேளைக்கோ அல்லது கெட்ட வேளைக்கோ இன்றையதினம் ஆளும் கட்சியினர் நிர்வாகத்திலே இருக்கும் நெளிவு சுளுவுகளைப்பற்றி எடுத்துச் சொல்ல திறமை பெற்றிருக்கிறார்கள், அனுபவம் காரணமாக. ஆனால், எதிர்க்கட்சியிலேயுள்ள யாரும் நிர்வாகத்திலே முன்னாலே இருந்தவர்கள் அல்ல ; அவர்கள் துவக்கியிருக்கும் கட்சி எதுவும் நிர்வாக அலுவலிலே இதுவரை ஈடுபடவில்லையாகையால், தத்துவ ரீதியாக அவர்கள் பேசினால், நடைமுறையிலே இது இப்படி இப்படி இருக்கிறது என்று சிக்கல்களை எடுத்துக்காட்டுவதன் மூலம், நாட்டு மக்களுக்கு ஏற்றதாக அந்தத் தத்துவம் அமைந்திருக்கிறதா என்று பார்க்கின்ற எங்களுடைய உரிமை பறிக்கப்படுவது அவ்வளவு முறையாகாது என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

[Sri C. N. Annadurai] [24th September 1958

செய்யப்படுகிற எந்தத் திட்டத்தையும், புகுத்தப்படும் எந்த மசோதா வையும், அல்லது இதைவிடக் கொஞ்சம் விரிவாகச் சொல்ல வேண்டு மானால் எடுத்துக்கொள்ளுகின்ற எந்த வழக்கையும் மிகச் சாமர்த்திய மாக வாதாடும் வழக்கறிஞர்கள் நாட்டிலே இருக்கத்தான் செய்வார்கள். அதேமாதிரிதான், பஞ்சாயத்துத் தலைவர்களைத் தேர்ந்தெடுப்பது பஞ்சாயத்து அங்கத்தினர்களாகத்தான் இருக்கவேண்டும் என்று நிதி அமைச்சர் அவர்கள் எவ்வளவு காரசாரமாக எவ்வளவு விளக்கமாக காரணங்களைக் காட்டினு ரோ அதிலே ஒரு இம்மியும் குறையாத நிலைமையில், தலைவரை மக்கள் தான் தேர்ந்தெடுக்கவேண்டும். ஏனென்றால் மக்களுக்கும் தலைவருக்கும் தொடர்பு இருந்தால் தான் நல்லபடி ஜனநாயகம் நடக்கும் என்று ஆளும் கட்சியினரே முன்னாலே வாதாடியிருக்கிறார்கள்.

இன்று அதே முறையில், ' சபைக்குப் பொறுப்பு இருக்கவேண்டுமானால் சபையிலே உள்ளவர்கள் தான் தலைவரைத் தேர்ந்தெடுக்கவேண்டும் ; அப்படித் தான் நாங்களெல்லாம் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறோம் ' என்று வாதாடுகிற நம்முடைய நிதி அமைச்சரிடம், சபையினால் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்கள் எப்படி முழு அதிகாரப் பொறுப்பையும், நிர்வாகப் பொறுப் பையும் ஏற்றுக்கொண்டிருக்கிறார்களோ, அதேபோல் நல்ல முறையிலே பஞ்சாயத்துக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவருக்கு ஏன் நிர்வாகப் பொறுப் பைத் தரக்கூடாதென்று கேட்டால், அவர் உடனே வேறொரு கட்டைப் பிரித்து, " நிர்வாகப் பொறுப்பை ஏற்று நடத்துவதற்குப் பயிற்சி வேண் டும், பழக்கம் வேண்டும், அதிலே ஊறிப்போனவர்களால்தான் முடியும், ஆகையால் அவர்களிடம் ஒப்படைக்கிறோம் " என்று சொல்கிறார்.

மறுபடியும், அவர் மற்றொரு இடத்தில் பேசும்போது, " இந்த நிர்வாகப் பழக்கம் பெறுவது கம்பசூத்திரம் அல்ல ; அதை யாரும் பெறலாம் ; நான் கூட சாதாரண வழக்கறிஞனாகத்தான் இருந்தேன் ; என்னிடத்தில் இவ்வளவு நிர்வாகத் திறமை இருக்கும் என்று எனக்கே தெரியாது ; எனக்கு வாய்ப்புக் கிடைத்த பிறகுதான் இவ்வளவு நிர்வாகத் திறமை இருக்கிறது என்று தெரிந்தது " என்று ஒன்றுக்கொன்று முரண்பட்ட கருத்துக்களைச் சொல்லி சாமர்த்தியமாக வாதாடியிருக்கிறார்.

அவர்கள் எடுத்துக்கொண்ட அந்த முறையிலே வாதாடப் பார்க்காமல், எதிர்க்கட்சியிலே உள்ளவர்களாகிய நாங்கள், ஆளும் கட்சியினரால் கொண்டுவரப்பட்ட மசோதாவைக் கவனிக்கின்ற நேரத்தில், இந்த மசோதா நடைமுறையில் எப்படி இருக்கும் என்பதைக் கவனிப்பதைவிட, நாட்டு மக்கள் உங்களிடமிருந்து எதை எதிர்ப்பார்க்கிறார்கள். நீங்கள் எதைத் தருகிறீர்கள் என்பதைப் பார்க்க விரும்புகிறேன்.

நாட்டு மக்களாகிய, கிராமத்து மக்களுக்கு இதுவரையிலே இருந்து வந்த குறை சீராக்கப்பட்டு, அவர்களுக்கு மேலும் மேலும் அதிகாரங்களும், அந்த அதிகாரங்களை நிர்வகிக்கக்கூடிய வசதிகளும் தரப்படவேண்டுமென்று பெரும் கிளர்ச்சி செய்துகொண்டிருக்கிறார்கள். அதனால் தான், இந்த மன்றத்தில் பேசிய பல அங்கத்தினர்கள், வெள்ளைக்காரன் காலத்திலே இந்தப் பஞ்சாயத்துக்கள் எல்லாம் கிராமத்திலே அழிக்கப்பட்டு, தேசிய ஆர்வமே இல்லாத முறையில் வைக்கப்பட்டிருந்தார்கள் என்றும், இன்னும் எங்களுடைய பக்கத்திலேயுள்ள நண்பர்களிலே சிலர், இந்த ஊராட்சி மன்றங்கள் பழந்தமிழர் காலத்திலேயே இருந்தன என்று பாத்தியதையும் கொண்டாடினார்கள். இத்தனையும் எடுத்துக்கொண்டு பேசியதற்கு முக்கிய காரணம், நாட்டிலே இன்றைய தினம் கிராமப் புறத்திலே மகத்தான விழிப்புணர்ச்சி ஏற்பட்டு, கிராமத்திலேயுள்ள மக்கள் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ள வேண்டும் என்ற நல்ல கருத்தினாலே, தாங்கள் யாரோலோ ஆளப்பட்டால் தங்களுடைய சுகதுக்கங்களைக் கவனிப்பதில்லை என்ற மனக் குறை மிக அதிகமான அளவில் பெற்றிருக்கிறார்கள் என்பதனால் தான்.

ஆகையால், இந்த ஆட்சியாளர்கள், கிராம ராஜ்யம் என்று அவர்கள் சொன்னாலும், ராம ராஜ்யம் என்று அவர்கள் சொன்னாலும், மற்றொரு கனம் அங்கத்தினர் நேற்றைய தினம் சொன்னது போல், ராம ராஜ்யமும் காம ராஜ்யமும் இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து இணைத்து இருக்கிறார்கள்

24th September 1958] [Sri C. N. Annadurai]

என்று சொன்னாலும், அப்படிப்பட்ட ராஜ்யத்தின் மூலமாக அவர்கள் என்ன எதிர்பார்க்கிறார்கள், நீங்கள் என்ன தருகிறீர்கள் இந்த மசோதாவின் மூலமாக என்பதைத்தான் ஆராய்ந்து பார்க்க வேண்டுமேத் தவிர . . . .

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர், ஸார், கிராம ராஜ்யத்தையும் ராம ராஜ்யத்தையும் ஒன்றாகச் சேர்த்திருப்பதாகத்தான் நான் நேற்று குறிப்பிட்டேன்.

**Mr. SPEAKER :** வித்தியாசம் ஒன்றும் இல்லையே ; இரண்டும் ஒன்றாகத் தான் இருக்கிறது.

**Sri C. N. ANNADURAI :** நம்முடைய கனம் அங்கத்தினர் அவர்கள் திருத்துவதற்கு என் நன்றி. காம ராஜ்யத்திலே அவர்கள் போய்விட்டாரோ என்று நான் பயப்பட்டேன். (சிரிப்பு).

அதைப்போலவே நிதி அமைச்சர் அவர்கள் இப்படியெல்லாம் நுணுக்கமாக விவாதிக்கவேண்டிய அவசியம் இல்லை என்று சொல்லி, இப்படியெல்லாம் பேசுவதால் நிர்வாகம் ஸ்தம்பித்துவிடும் என்ற பயத்தையும் காட்டியிருக்கிறார்கள். அதுமட்டுமல்ல. இப்படியெல்லாம் கவனத்தை வேறுபுறம் திருப்பிவிட்டுவிட்டால் சட்டப்படி, அதற்கு தரவேண்டிய சரியான ஊட்டம் கொடுக்கப்படாமல் போகும் என்று சொல்கிறார்கள். அவர்கள் இப்படியெல்லாம் அச்சப்படாமல் இருப்பதற்காக நான் என் தரப்பிலிருந்து சொல்லிக் கொள்வது என்னவென்றால்—இந்த மசோதாவின் மூலமாக அவர்கள் செய்திருக்கும்படியான நல்ல காரியத்தை வரவேற்கிறோம். அதேசமயத்தில் அதில் உள்ள குற்றங்குறைகளை நாங்கள் எடுத்துச் சொல்கிற காரணத்தினால் அந்த மசோதாவில் அடங்கியுள்ள சிறப்புகளை மறந்து விட்டோம் என்று அர்த்தம் இல்லை. எப்படி மசோதாவில் உள்ள குறைகளை ஆளும் கட்சியினர் மறந்துவிடவில்லையென்றாலும், அந்த மசோதாவின் சிறப்புக்களையே அப்படியும் இப்படியுமாக எடுத்துப் பேசிக்கொண்டிருக்கிறார்களோ அப்படி இதன் குற்றங்குறைகளை நாங்கள் எடுத்துச் சொல்லும்போது இதன் சிறப்புக்களை மறந்துவிட்டோம் என்று பொருள் இல்லை. நான் முன்பே சொன்னபடி கிராமத்து மக்கள் எதை எதிர்பார்க்கிறார்கள் என்று நாம் ஆராய்ந்து பார்க்கிற நேரத்தில் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ள வேண்டுமென்று அவர்கள் வேண்டிக் கொண்டிருக்கிறார்கள். அதற்கான நிர்வாக அமைப்பு வகுக்கப்படுமென்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். கிராமத்திலுள்ள நிர்வாக காரியங்கள் எல்லாம் தங்களிடம் ஒப்படைக்கப்படவேண்டும், ஊராண்மைக் கழகங்கள், அதற்காகத் தேர்ந்தெடுக்கப்படுகிற தலைவர், நிர்வாகப் பொறுப்பு எல்லாம் தங்களிடமே ஒப்படைக்கப்படவேண்டும். அவர்களுக்குத் தேவையான உரிமைகள், வசதிகள் எல்லாம் தரப்பட்டு தங்களுடைய காரியங்களைத் தாங்களே நடத்திக் கொள்வதற்கு இன்றுள்ள ஆட்சியில் தங்களுக்கு வழிவகை செய்யப்படும் என்ற நம்பிக்கையில் பஞ்சாயத்துகளை நாடுகிறார்கள். இதற்காக அவர்கள் கூட்டாத மகாநாடுகள் இல்லை. தீட்டாத தீர்மானம் இல்லை. பேட்டி பார்க்காத நாள் இல்லை. அவர்களுக்கு நாமும் வாக்களிக்காத நேரம் இல்லை. கிராம ராஜ்யத்தை அமைக்க எல்லாவிதமான காரியங்களையும் செய்திருக்கிறோம், அவர்களுக்கு வேண்டிய தேவைகளை, உரிமைகளை, வசதிகளை எல்லாம் அள்ளி அள்ளி கொடுத்துவிட்டோம் என்று பேசிவிட்டு இப்போது கிராமத்தாரிடத்திலே நாம் போய் நின்றால்—கனம் காங்கிரஸ் அங்கத்தினர் ஒருவர் கேட்டுக்கொண்டது போல—இங்கே சர்க்காரைப் பாராட்டுவதோடு மட்டும் நின்றுவிடாமல் வெளியிலும் போய் இந்தச் சர்க்கார் செய்திருக்கும்படியாக இந்தச் சட்டத்தைப் பாராட்டிப் பேசுகிற போது—நானோ, எதிர்கட்சித் தலைவர் திரு. வி. கே. ராமசாமி முதலியாரோ மக்களைச் சந்திக்கிற நேரத்தில் " நீங்கள் இத்தனை நாளும் கேட்ட கிராம சுயாட்சி உரிமையை வழங்கிவிட்டோம் " என்கிற நேரத்தில் "ஊராண்மைக் கழகத் தலைவரை நாங்கள் தேர்ந்தெடுக்கப்படுவதற்குப் பதிலாக அங்கத்தினர்களிலிருந்து, அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமென்று செய்துவிட்டீர்களே" என்? என்று கேட்டால், "தலைவர் அங்கத்தினர்

11-40 a.m.

களால் தேர்ந்தெடுக்கப்படுவதை நீங்கள் விரும்பவில்லையா?" என்று நாங்கள் கேட்பதற்கு "ஆம்" என்று சொன்னால், "ஏன் நீங்கள் அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்படுவதை விரும்பவில்லை?" என்பதற்கு "ஐயோ இதனால் தானே 6 பேர்கள் இந்த ஊரில் பழனிக்கு அழைத்துச் செல்லப் பட்டார்கள். எட்டு பேர்களைக் காஞ்சீபுரத்திற்குக் கொண்டுபோனார்கள். புதுச்சேரிக்கு 6 பேர்கள் கடத்தப்பட்டார்கள். தேர்தலுக்குப் பிறகு இதில் திரும்பியவர்கள் நான்கு பேர்கள் தானே" இப்படி ஆளைத் தூக்கிக் கொண்டு போகப்படுவதற்கா இப்படிச் செய்துவிட்டீர்கள் என்று கேட்டால் நாங்கள் என்ன சொல்வது என்று கேட்கிறேன். அவர்களுக்கு நாங்கள் என்ன சமாதானம் சொல்வோம்? நாங்கள் சொல்கிற சமாதானம் அவர்களது அச்சத்தை நீக்கி திருப்தியை அளிக்குமா என்று கேட்கிறேன்...

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படித் தூக்கிக்கொண்டு போய்விடுவார்கள் என்கிற பயம் உள்ளவரையில் பஞ்சாயத்து மசோதாவைப்பற்றி நாம் யோசனை செய்யாமல் இருப்பதுகூட நல்லது என்று சொல்வேன். என்றைக்கு "நாங்கள் யாராலும் தூக்கிக் கொண்டு போய்விடுவோம் என்கிற பயம் எங்களுக்கு இல்லை. சுதந்திரமாக வோட்டு அளிக்கும் தைரியம் எங்களுக்கு உண்டு." என்கிற மன உறுதி நம் மக்களுக்கு வருகிறதோ அன்றைக்குத்தான் இந்த ஜனநாயக ஆட்சி முறை நன்றாக அமைய முடியும். தூக்கிக்கொண்டு போய்விடுவார்களே என்று பயப்படுகிற வரையில், ஒருவருடைய செல்வாக்குக்குப் பயந்து வோட்டு அளிக்கிற நிலைமை இருக்கிற வரையில் எந்த ஆட்சி முறையும், எந்த ஜனநாயக அமைப்பும் வெற்றி பெறாது. ஆனால் எனக்கு மக்கள் பேரில் அதிக நம்பிக்கை இருக்கிறது. ஒரு சிலர் தவறாக நடந்து கொண்ட போதிலும் ஆயிரத்தில் தொள்ளாயிரத்து தொண்ணூத் தொன்பது பேர்கள் தைரியமாக, சுதந்திரமாக தங்கள் விருப்பப்படி செயல்படக்கூடிய ஆற்றல் படைத்தவர்கள் என்பதில் சந்தேகம் கிடையாது.

SRI C. N. ANNADURAI : மக்களிடத்தில் நிதி அமைச்சர் அவர்களுக்கு இருக்கிற நம்பிக்கையைத் தெரிவித்துக் கொள்வதற்கு ஒரு வாய்ப்பை எடுத்துக்கொண்டதற்கு மகிழ்ச்சியுறுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நீங்கள் எனக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்ததற்கு என் நன்றி.

SRI C. N. ANNADURAI : அப்படித் தூக்கிக்கொண்டு போவதற்கு இடம் இல்லையென்று சொன்னால் தன்னைத்தானே காப்பாற்றிக் கொள்ள முடியாத நிலையில் சீதை ராவணனால் தூக்கிக்கொண்டு போகப்பட்டதை அவர்கள் மறந்து இருக்கமாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : அது அந்தக் காலம். இந்தக் காலத்தில் முடியாது.

MR. SPEAKER : கனம் அண்ணாதுரை தன் பேச்சில் எனக்கும் குறுக்கிடுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்கிறார். (சிரிப்பு.) மசோதாவைப் பற்றி மட்டும் அவர்கள் பேசினால் இப்படிப்பட்ட குறுக்கீடுகள் இருக்காது என்று சொல்லிக்கொள்ளுகிறேன்.

SRI C. N. ANNADURAI : அந்தக் காலத்தில் அப்படி நடந்தது இந்தக் காலத்தில் நடக்காது என்று நிதி அமைச்சர் அவர்கள் சொல்கிறார்கள். இப்போது சீதையை தூக்கிக்கொண்டு போவதற்குப் பதிலாக சீதாராமர்களைத் தூக்கிக்கொண்டு போகிறார்கள். (சிரிப்பு).

SRI S. NAGARAJA MONIGAR : On a point of order, தமிழ் நாட்டிலே ராமாயணத்தையே கொளுத்திவிடவேண்டுமென்று கீமாயணம் பாடியவர்களுக்கு சீதையைப்பற்றியும், ராமனைப்பற்றியும் நம்பிக்கை இருக்கிறதா என்று கேட்கிறேன்.

24th September 1958]

MR. SPEAKER : I don't see any point of order in this. I rule it out of order. The hon. Member may continue his speech.

SRI C. N. ANNADURAI : பஞ்சாயத்துத் தலைவரை பஞ்சாயத்து அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்க வேண்டுமென்ற முறையில் இப்படிப் பட்ட சீர்கேடுகள் வளர்கின்றன என்பதை இந்த மன்றத்திலே நாங்கள் எடுத்துச் சொல்வதற்குக் காரணம் கூற விரும்புகிறேன். பஞ்சாயத்துத் தலைவரை பொது மக்களே தேர்ந்தெடுக்கவேண்டுமென்று இந்த மன்றமே முன்பு தீர்மானித்திருந்தது ; ஆனால் அந்த முறை நடைமுறையில் ஒத்து வரவில்லை என்று கருதி இந்த மன்றமே அந்த முறையை மாற்றி, பஞ்சாயத்துத் தலைவரை பஞ்சாயத்து அங்கத்தினர்கள் தான் தேர்ந்தெடுக்க வேண்டுமென்ற முறையைக் கொண்டுவந்திருக்கிறது ; மறுபடியும் இந்த முறையை மாற்றி பழைய முறையைக் கொண்டுவர வேண்டியது அவசியமானால், " அந்த அவசியத்திற்கான காரணங்களை நீங்கள் எடுத்துக் காட்ட வில்லையே " என்று எங்களைப் பார்த்து ஆட்சியாளர்கள் சொல்வார்களோ என்ற பயத்தால் தான் இந்த சீர்கேடுகளைப்பற்றி இங்கே இப்போது எடுத்துச் சொல்கிறோம். ஜனநாயகம் கையாளப்படும் முறையிலுள்ள தவறுகள் தான், மசோதாக்கள் தயாரிக்கப்படும்போது அவைகளில் குறைபாடுகள் ஏற்படுவதற்கு அடிப்படையான காரணங்களாக இருக்கின்றன. மசோதாக்கள் தயாரிக்கப்படும்போது எதிர்க் கட்சியினருடனோ மற்றவர்களுடனோ சர்க்கார் கலந்து பேசுவதற்கு இன்றைய ஜனநாயக முறையில் இடமில்லை. எனவே, இன்றைய நிலையில், மசோதாக்கள் தயாரிக்கப்பட்ட பிறகு அவைகளில் காணக் கிடக்கும் குற்றங் குறைகளை நாங்கள் எடுத்துச் சொல்வதன் மூலமாகத் தான், மசோதாக்களிலிருந்து அவைகளைக் களைவதற்கான வாய்ப்பு ஆளும் கட்சியினருக்கு அளிக்கப்படவேண்டியிருக்கிறது. கிராம மக்கள் எங்களைப் பார்த்து " இந்தப் புதிய மசோதாவால் எங்களுக்கு என்ன கிடைக்கிறது " என்று கேட்கும்போது, " நேற்றையதினம் வரை உங்களுக்கு இல்லாதிருந்த அதிகாரங்கள் இன்றுமுதல் உங்களுக்கு கிடைக்கும் " என்றோ, " உங்களுடைய அந்தஸ்து இப்போது உயர்ந்திருக்கிறது " என்றோ அவர்களிடம் சொல்வதற்கு எங்களுக்கு வாய்ப்பு அளிக்கக்கூடியதாக இந்த மசோதா இல்லை. நிர்வாக இயந்திரம் சரியாக இயங்கவேண்டுமென்பதற்காக நிர்வாக இயந்திரத்திற்கு அதிகாரங்களைக் கொடுத்திருக்கிறோம் " என்று வேண்டுமானால் கனம் அமைச்சர்கள் வாதாட முடியுமே தவிர, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் கொண்ட பஞ்சாயத்து சபைகளுக்கு போதிய அதிகாரங்கள் வழங்கியிருப்பதாக கனம் அமைச்சர்கள் கூற முடியாது. இந்தச் சபையில் நானும் என் கட்சியல்லாத இதர கட்சிகளைச் சேர்ந்தவர்களும் கனம் அமைச்சர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள். அதேபோல்தான், பஞ்சாயத்து உறுப்பினர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள். ஆனால் மசோதாப்படி, சட்டசபை உறுப்பினர்களின் அதிகாரங்களுக்கும் பஞ்சாயத்து உறுப்பினர்களின் அதிகாரங்களுக்கும் வேற்றுமை இருக்கிறது ; பஞ்சாயத்து உறுப்பினர்களுக்கு போதிய அதிகாரங்கள் இல்லை. இந்த நிலையில் இருக்கக் கூடிய பஞ்சாயத்து உறுப்பினர்கள் " கனம் அமைச்சர்களும் சட்டசபையின் இதர உறுப்பினர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே. நாங்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். சட்டசபை உறுப்பினர்கள் லட்சம் பேரால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்றால், நாங்கள் 500 பேரால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். அவ்வளவுதான் வித்தியாசம். அவர்கள் அனுபவிக்கும் அதேவிதமான உரிமைகளை பஞ்சாயத்தில் நாங்கள் ஏன் அனுபவிக்கக்கூடாது ? எங்களுக்கு பஞ்சாயத்தில் அத்தகைய அதிகாரங்கள் ஏன் இருக்கக்கூடாது ?" என்று கேட்க ஆரம்பித்தால் ஆட்சியாளர்கள் என்ன செய்யப்போகிறார்கள் ? அப்படி அவர்கள் கேட்ட பிறகாவது அவர்களிடம் படிப்படியாக அதிகாரங்களை ஒப்படைப்பதற்கு வகை செய்வதாக இந்த மசோதா இருக்க வேண்டும். மசோதாவில் இதற்கு எப்படி வகை செய்வது என்பது, கனம் நிதி அமைச்சர் சொல்வதைப் போல், நிர்வாகத்தில் பழக்கப்பட்டவர்களுக்குத்தான் தெரியும், புரியும் ; நிர்வாகத்தில் பழக்கப்படாதவர்களுக்குத் தெரியாது, புரியாது ; நிர்வாகத்தில் பழக்கப் படாதவர்களுக்கு அதைத் தெரிந்துகொள்வதற்கும் வாய்ப்புகள் இருக்காது.

இயற்றப்படும் சட்டத்தில் இருக்கக்கூடிய குறைபாடுகள் குறித்து கிராம மக்களுக்கு ஏற்படக்கூடிய அதிருப்தியை நீக்குவதற்கான முறையில் மசோதாவில் திருத்தங்கள் கொண்டுவரவேண்டுமென்பதற்காகத் தான் இந்த விவாதத்தில் பல கட்சியினரும் கலந்துகொள்கிறார்கள்; பொறுக்குக் கமிட்டி பரிசீலனை செய்து தீர்மானித்து மசோதாவை இவ்வாறு உருவாக்கியதற்குப் பிறகு, இந்த சபையில் மேலும் பேசுவது அவசியமா என்று கேட்பது சரியாகாது என்பதை......

THE HON. SRI C. SUBRAMANIAM: கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் இதை பல தடவை குறிப்பிட்டு விட்டதால் நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். பொறுக்குக் கமிட்டியில் முடிவு செய்துவிட்டதால் மசோதாவை இங்கே கனம் அங்கத்தினர்கள் பரிசீலனை செய்யக்கூடாது என்றோ, அதைப்பற்றி பேசக்கூடாது என்றோ நான் சொல்லவில்லை. அவ்வாறு நான் சொல்லமாட்டேன். மசோதாவில் ஒரு விதியில் மாறுதல் செய்யவேண்டுமென்றால் அதற்கு சரியான காரணங்கள் இருக்கவேண்டுமென்றும் அக்காரணங்களை கனம் அங்கத்தினர்கள் எடுத்துக் காட்டவேண்டுமென்றும் தான் நான் சொன்னேன்; ஒரு விதி குறித்து யாரோ ஒரிருவர் மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள் என்பதால், சரியான காரணங்களைக் கூறாமல் அந்த விதியை மாற்ற வேண்டுமென்று பேசிக்கொண்டே யிருக்க வேண்டாம் என்று தான் நான் சொன்னேன். இந்த மசோதாவைக் குறித்து இங்கே விவாதிப்பதற்கே இடமில்லை என்று நான் சொல்லவில்லை. அவ்வாறு நான் கருதவும் இல்லை. இந்த மசோதாவைக் குறித்து சபையில் விவாதம் நடக்கவேண்டியதில்லை என்று தீர்மானிக்கப்பட்டிருந்தால், இதன்மீது இரண்டு நாட்கள் பொது விவாதமும் மூன்று நாட்கள் பிரிவு வாரியான விவாதமும் நடக்கலாம் என்று தீர்மானிக்கப்பட்டிருக்காது.

SRI C. N. ANNADURAI: கனம் சபாநாயகர் அவர்களே, என் பயத்தைப் போக்கியதற்கு கனம் நிதி அமைச்சருக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். நான் ஆளும் கட்சியில் இல்லாத காரணத்தால், இனிமேல் இப்படிப்பட்ட விவாதங்கள் நடத்தக்கூடாது என்று ஆளும் கட்சியினர் தீர்மானித்துவிடுவார்களோ என்று பயந்தேன். மசோதாக்கள் குறித்து நல்ல முறையில் விவாதிப்பதற்கு எதிர்க் கட்சிகளுக்கு உரிமை இருக்கிறது. கிராமப் பஞ்சாயத்துக்களுக்கு ஏன் நிர்வாக அதிகாரங்களைக் கொடுக்கக்கூடாது என்பதற்கு, ஆளும் கட்சியினரால் எடுத்துச் சொல்லப்பட்ட காரணங்கள் எங்கள் மனதிற்குத் திருப்தியளிக்கக் கூடியவையாகவோ எங்கள் மனதில் சமாதானத்தை ஏற்படுத்தக் கூடியவையாகவோ இல்லை என்பதை மிக மிக வன்மையாகவும் மிக மிக வினயத்துடனும் தெரிவிக்க விரும்புகிறேன். நிர்வாகத் துறையில் ஈடுபடத் தக்க பக்குவம் அடையாதவர்களாகவும், திறமை இல்லாதவர்களாகவும் இப்போது கிராம மக்கள் இருக்கிறார்கள் என்று பலர் வாதாடினர். கிராம மக்களுடன் நேரிடையாகப் பழகியுள்ளவர்களுக்கு, இப்படிப்பட்ட ஊராண்மைக் கழகங்களை நடத்திச் செல்லத் தக்க தரமும் திறமையும் படைத்தவர்கள் நம் கிராமங்களில் இருக்கிறார்கள் என்பது நன்கு தெரியும். நமது தமிழகத்தில் 7,000 பஞ்சாயத்துக்களை அமைக்கலாம் என்று வைத்துக்கொண்டால், அந்த 7,000 பஞ்சாயத்துக்களில் ஒவ்வொன்றிலும் பொது நலக் காரியங்களைத் திறம்படச் செய்வதற்கும் நிர்வாகத்தை மிக நேர்மையான முறையில் நடத்துவதற்கும் உரிய மனிதர்கள் இந்தத் தமிழகத்தில் இல்லையா என்ற கேள்விக்கு கனம் நிதி அமைச்சர் பதிலளிக்க வேண்டுமென்று நான் பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன். அவர் கிராம மக்களைப் பார்த்து, "ஊராண்மைக் கழகத்தை திறம்பட நடத்தத் தக்க நிர்வாகத் திறன் உங்களுக்கு இல்லை. இதற்கான பக்குவத்தை நீங்கள் இன்னும் அடையவில்லை" என்று கூறத்தக்க....

11-50 a.m.

SRI T. L. SASIVARNA THEVAR: Sir, on a point of order, முக்கியமானதொரு விவாதத்தின் மீது எதிர்க்கட்சித் தலைவர் பேசிக்கொண்டிருக்கிறார்கள். அந்த சந்தர்ப்பத்தில் நிதியமைச்சர் அவர்கள் சபையில் உட்கார்ந்துகொண்டு சர்க்கார் சம்பந்தப்பட்ட பைல்களை பார்த்துக் கொண்டிருப்பது நல்லதா என்று அறிய விரும்புகிறேன்.

24th September 1958]

**Mr. SPEAKER :** விவாதத்திற்கு சம்பந்தமான பைல்களை பார்க்கலாம்.

**Sri C. N. ANNADURAI :** உங்களுக்கு நிர்வாகத் திறமையில்லை, ஆகவே உங்களிடம் நிர்வாகப் பொறுப்பை ஒப்புவிக்கப் போவதில்லை என்று கிராம மக்களைப் பார்த்துச் சொல்வதற்குள்ள தைரியம் நமது நிதியமைச்சர் அவர்களுக்கு இருக்கிறதா ? இதுவரையில் பஞ்சாயத்துகளை நடத்திச் சென்றவர்களில் எத்தனை பேர் ஒழுங்கீனத்திற்காக கைது செய்யப்பட்டிருக்கிறார்கள் ? எத்தனை தலைவர்களின் பேரில் ஒழுங்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கிறது ? எத்தனை தலைவர்கள் கையாடல்கள் நடத்தியிருக்கிறார்கள் ? என்ற கணக்கையும் எத்தனை நிர்வாக அதிகாரிகள் மோசமாக நடந்துகொண்டிருக்கிறார்கள் என்ற கணக்கையும் பார்த்து இரண்டு வர்க்கத்திலே எந்த வர்க்கம் மோசமாக நடந்து கொண்டது என்பதை கவனித்துப் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தால் நிச்சயமாக பஞ்சாயத்து பொறுப்புக்களை தலைவர்களிடம் ஒப்படைப்பதில் நிர்வாகம் குந்தகப்பட்டுவிடாது என்பதை நாம் உணர முடியும். அதைத்தான் நான் இந்த சட்டமன்றத்தில் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். அவர்களிடம் ஒப்படைக்கும் அதிகாரம், வழக்குகளைப் போடுவதோ அல்லது வழக்குகளை விசாரிப்பதோ போன்ற அதிகாரங்கள் தரப்படவில்லை, அப்படி தரப்பட வேண்டுமென்று நாங்களும் வலியுறுத்திக் கேட்கவில்லை. மக்களால் தேர்ந்தெடுக்கப்படுபவர் தலைவராக வந்திருக்கும்போது அவர்களது பக்கத்தில் இருக்கக்கூடிய நிர்வாக அதிகாரிதான் எல்லாக் காரியங்களையும் செய்ய வேண்டுமென்று இருந்தால் நல்லவர்கள் பஞ்சாயத்துகளுக்கு வர, நாளாக நாளாக கூச்சப்பட்டுக்கொண்டு ஒதுங்கி விடுவார்கள். அதிகாரிகளின் தலையீட்டிற்கு கட்டுப்படுபவர்கள், அதிகாரிகளின் தயவை நாடக்கூடியவர்கள்தான், தமக்கு அதிகாரம் இல்லாவிட்டாலும் தம் பக்கத்திலுள்ள அதிகாரியின் தயவு கிடைத்தால் போதும் என்று கருதுகிறவர்கள் தான் ஊராண்மைக் கழக தலைவர்களாக வருவார்களே தவிர, இந்த ஊரை நான் தான் நிர்வாகம் செய்து நடத்தி வருகிறேன், அதற்கேற்ற திறமை எனக்கிருக்கிறது, ஊரின் சீருக்கு நான்தான் பொறுப்பு அதற்கேற்றபடி ஊரிலுள்ள மக்களுக்கு பணியாற்றுவதற்குள்ள உரிமை பெற்றிருக்கிறேன் என்ற மனப்பான்மையோடு அங்கு செல்லக் கூடியவர்கள் நாளாக நாளாக அதிலிருந்து ஒதுங்கிவிடுவார்கள். அதோடு, ஜனநாயகத்தில் நமக்கு சரியான இடமில்லை என்று அவர்கள் மனமுடைந்து போவார்கள். ஆகவே ஜனநாயகத்தில் நல்ல பயிற்சி பெறக் கூடியவர்களை நாம் அணி அணியாக உண்டாக்கவேண்டுமானால் அதற்கான முதல் கட்டம் கிராமப்புறங்கள்தான். ஆகவே கிராமப்புறங்களில் இருந்து தான் ஜனநாயகத்தை துவக்கவேண்டுமென்று இன்று நேற்றல்ல, 1907-ம் ஆண்டில் நிறுவப்பட்ட ராயல் கமிஷன் காலந்தொட்டு, மாண்டேகு செம்ஸ்போர்ட் சீர்திருத்தம் வரையில், அதற்கு பிறகு ஏற்பட்ட "கவர்ன்மென்ட் ஆப் இந்தியா ரெஸல்யூஷன், 1918", 1918-ம் ஆண்டு ஏற்பட்ட சட்டம் முதற்கொண்டு கிராமப்புறங்களில்தான் அதிக அளவு அதிகாரங்களை பங்கிட்டுக் கொடுக்கவேண்டுமென்பது வலியுறுத்தப்பட்டிருக்கிறது. இந்நிலையில், மிகச் செல்வாக்கு பெற்றிருக்கிற "டீசென்ட்ரலைஸேஷன்" என்ற வார்த்தையையும், அதன் உள் இருக்கிற தத்துவத்தையும் பற்றி நாம் இப்பொழுது யோசித்துப் பார்க்க கடமைப்பட்டிருக்கிறோம். "டீசென்ட்ரலைஸேஷன்" என்ற சொல், குவிந்து கிடக்கிற அதிகாரத்தை பரவலாக்குவது என்ற முறையில் மட்டுந்தான் இதுவரையிலும் நாம் கவனித்து வந்திருக்கிறோம். என்னைப் பொறுத்த வரையில் சொல்லிக் கொள்வேன். இது இந்த மசோதாவிற்கு அப்பாற்பட்டதாக கருதப்பட்டாலும் சரி, அல்லது அடிப்படை பிரச்னையிலிருந்து வேறானது என்று எண்ணப்பட்டாலும் சரி அல்லது நிதி அமைச்சர் அவர்கள் சொல்வது போல் அவரவர்கள் கட்சிக்கென்று சில கொள்கைகள் உண்டு, அதை இங்கே புகுத்தாதீர்கள் என்பதாகயிருந்தாலும் சரி என்னைப் பொறுத்த வரையில், "டீசென்ட்ரலைஸேஷன்" என்பதின்படி, ஜனநாயகம் உயிர் பெறவேண்டுமென்றால் வட்டங்களுக்கு தனித்தனியாக அதிகாரங்கள் வகுக்கப்படவேண்டும். எப்படி இந்த மாமன்றம் இந்த மாநிலம் பூராவிற்கும் பொறுப்பேற்றுக்கொண்டிருக்கிறதோ, எப்படி நம் அமைச்சர்கள் தங்கள் தங்கள்

[Sri C. N. Annadurai] [24th September 1958

துறைகளுக்கு பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறார்களோ அதேபோன்று ஊராட்சி மன்றங்களுக்கு முழு உரிமையும், முழு அதிகாரமும் அளிக்கப்பட வேண்டும்.

இந்த மாமன்றத்தில் பல சந்தர்ப்பங்களில் எடுத்துக்கையாளப்பட்ட விநோபா சொல்லுகின்ற ராம ராஜ்யத்தை எண்ணிப் பார்ப்பார்களானால் இதில் கொஞ்சம்கூட அந்த வாடையோ ஜாடையோ இல்லாத அளவுக்கு வகுக்கப்பட்டிருக்கின்றது என்பது புரியும். ஆகவே நிர்வாக அதிகாரிகளைப் போட்டு பஞ்சாயத்துக்களை நடத்தி செல்லுகின்ற ஒரு நிலையை பொறுக்கு கமிட்டியால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தாலும் கூட பொறுக்கு கமிட்டியில் தங்கள் கருத்துக்களை வலியுறுத்தி சொல்லிச் சொல்லி கடையில் ஒரு முடிவுக்கு வந்தார்கள் என்று சொல்லப்பட்டாலும் பொறுக்கு கமிட்டியில் இது முடிவு செய்யப்பட்டு விட்டது என்று இருந்தாலும்கூட இங்கே ஏற்றுக்கொள்ளக்கூடாது என்று அர்த்தமல்ல. எதிர்கட்சித் தலைவர் ராமசாமி முதலியார் அவர்கள் சொல்லியதை போல் எங்களுடைய கருத்துக்களை சொல்லி வலியுறுத்தி பார்த்தோம், அது ஏற்றுக்கொள்ளப்படாத நிலையில் ஒருமித்த ஒரு சமரச கருத்துக்கு வந்தோம் என்று தான் அதை பொருள் கொள்ள முடியும். பொறுக்கு கமிட்டியில் பேசி முடிவு செய்யப்பட்டு விட்டது என்றாலும்கூட, அதே கருத்துக்கள் இந்த மாமன்றத்தில் பேசப்படுமானால் அமைச்சரவையிலுள்ளவர்கள் கொஞ்சம் மனமிரங்கி, கொஞ்சம் தர்ம நியாயத்திற்கு கட்டுப்பட்டு, கொஞ்சம் ஜனநாயகத்தில் நாட்டம் கொண்டு திருத்தத்தை ஏற்றுக்கொள்ளமாட்டார்களா என்ற நப்பாசையால் தான் சொல்லுகிறோமே தவிர நாங்கள் சொன்னால் நீங்கள் ஏற்றுக்கொள்வீர்கள் என்று அர்த்தமல்ல—அந்த முறையில் நீங்கள் நடந்துகொண்டதுமில்லை—அந்த முறையில் நடந்து கொள்ளவும் மாட்டீர்கள் என்பதை நாங்கள் நன்றாக உணர்ந்திருக்கிறோம். ஆனால் கிராம மக்களிடத்தில் நாங்கள் இதை எடுத்துச் சொல்லுகின்ற நேரத்தில் கிராமத்தாருக்கு எந்த அளவுக்கு பூரண அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கின்றது என்பதை எடுத்துச் சொல்ல வேண்டிய நிலை ஏற்படுகிறது. அதற்கு நமது நிதி அமைச்சர் அவர்கள் கம்யூனிட்டி பிராஜக்ட், நேஷனல் எக்ஸ்டென்ஷன் போன்ற இந்த திட்டங்களை நீங்களே ஏற்று நடத்தலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது, அதை கவனிக்க வேண்டுமே தவிர வார்த்தைகளை மட்டும் கவனிக்க வேண்டாம் என்ற முறையில் சொன்னார்கள். இந்த சட்ட மன்றத்தில் வாசகங்களையும் வார்த்தைகளையும் கவனிக்கவேண்டாம் என்று சொல்கிற, பெரிய வழக்கறிஞராக பல காலம் பணியாற்றி இருக்கிற நமது நிதி அமைச்சர் அவர்கள், ஒரு சின்னஞ்சிறு வாசகம் தான் ஒருவனை பிழைக்கவும் வைக்கும், தூக்கில் ஏற்றவும் வைக்கும் என்பதை உணருவார்கள். ஆகவே வாசகங்களை கவனியாமல் நடைமுறையில் எப்படி வருகிறது பாருங்கள் என்று எங்களுக்கு ஆசை காட்டுவதைவிட சாதாரண மக்களாகிய நாங்கள் உணர்ந்து பார்க்கத்தக்க அளவுக்கு பயங்கரம் இல்லாத தெளிவான, திட்டவட்டமான வாசகங்களை போடவேண்டுமென்று பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

" The Government may entrust to the panchayat union council, with its consent and on such terms as may be agreed upon, the execution in the panchayat development block of the National Extension Service Schemes." என்று இருக்கிறது. 'May' implies 'may not' also என்பது சாதாரணமாக சொல்லப்படுகின்ற இலக்கணம். May entrust என்றால் கேட்கலாம், எப்போது கேட்கலாம். எஜமான் சிரிக்கிற வேளையில் கேட்கலாம். சிரிக்காத வேளையில் கேட்காமலும் இருக்கலாம். கேட்கிற முறைப்படி கேட்டால் கேட்கலாம், இல்லையென்றால் தள்ளிவிடலாம், இவ்வளவுக்கும் இடம் அளிக்கிறது. இத்தனையும் நீங்கள் சொல்லுவீர்கள் என்று அர்த்தமல்ல. May என்பதற்குப் பதிலாக " The Government shall entrust on representation by the panchayat union " என்று மாற்றினால் நாங்கள் கிராம மக்களிடத்தில் போய் உங்களுடைய ஆட்சியைப்பற்றி, உங்களுடைய ஆட்சியின் அருமை, பெருமைகளைப்பற்றி எடுத்துச் சொல்வதற்கு வாய்ப்பு இருக்கும். May என்பதற்கும் shall என்பதற்கும் வித்தியாசம் தெரியாத அளவுக்கு

24th September 1958] [Sri C. N. Annadurai]

இந்த சபையில் யாரும் இருக்கமாட்டார்கள். ஆகவே இதில் இருக்கக்கூடிய வார்த்தைகளே, கொலே வழக்குகளே நடத்தி வெற்றி பெற்றிருக்கும் நமது நிதி அமைச்சர் அவர்கள் உன்னிப்பாக கவனித்துத்தான் அந்த வார்த்தையை போட்டிருப்பார்கள். May என்றிருப்பதை shall என்று மாற்றினால் மக்களுக்கு மிகுந்த ஆறுதல் அளிக்கும் என்பதை கூறிக்கொள்கிறேன். மற்றொன்று கிராமத்திற்கு அதிகமாக பணம் தரப்போகிறோம், வீட்டுவரியை எந்த அளவுக்கு வசூலிக்கிறீர்களோ அந்த அளவுக்கு "மாச்சிங் கிராண்ட்" தருகிறோம் என்று சொல்லுகிறார்கள். ஒரு அன்புள்ள தாய் தன்னுடைய குழந்தைகளுக்கு கசப்பான மருந்தோடு தேனும் கலந்து நாக்கை நீட்ட சொல்லி தடவுவது போல் நமது நிதி அமைச்சர் அவர்கள் இதை நமக்கு தருகிறார்கள். அவர்களின் தாய் அன்பை பாராட்டுகின்றேன். ஆனால் நீங்கள் கொடுக்கின்ற மருந்தில் கசப்பான மருந்து தான் அதிகமாக இருக்கிறது, தேன் குறைவாகத்தான் இருக்கிறதோ என்ற ஐயப்பாடு இருக்கின்றது. ஏனென்றால் இன்றையதினம் வசூல் செய்யப்படுகிற வீட்டுவரி தலேக்கு 12 நயா பைசா என்று இருக்கிறது. இது 30 நயா பைசாவாக கிடைக்கும் என்று நீங்கள் எதிர்பார்க்கின்றீர்கள் இருப்பதை விட ஒன்றுக்கு ஒன்றரை மடங்கு அதிகமாக வரி போடவேண்டுமென்று எண்ணுகின்றீர்கள். இங்கே 150 பேருக்கு மேலாக எண்ணிக்கை பலம் இருக்கக்கூடிய ஆளும் கட்சி, நியாயமாகப் போடுவதானாலும், தேவைக்காகப் போடுவதானாலும் வரி போட்டால் மக்களுடைய அதிருப்தி எங்கே தங்களுக்கு வந்து விடப்போகின்றதோ என்று அச்சப்பட்டு கொண்டுதான் போட்டு வருகிறார்கள். இவ்விதம் வீட்டுவரியை ஒரு ரூபாய் என்பதை இரண்டரை ரூபாய் என்று எந்த பஞ்சாயத் தலேவர்களாவது அதிகப்படுத்துவார்கள் என்று அமைச்சர்கள் எதிர்பார்க்கின்றார்களா ?.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே வரி அதிகப்படுத்த வேண்டுமென்று வகுக்கவில்லே. இப்போது போட்டிருக்கக் கூடிய வரியையே வசூலிப்பதில்லே. அதைத் தான் வசூலிக்கவேண்டுமென்று போட்டிருக்கிறோம். இப்போது வரி இருக்கிறதேயொழிய வசூலிப்பதில்லே.

12 noon.

SRI C. N. ANNADURAI : சர்க்காரினுலே நியமிக்கப்பட்ட டேக்ஸேஷன் என்க்கொயரி கமிஷன், பஞ்சாயத்துக்களில் வரி வசூலிக்க கிராமத்தார்கள், கிராமத் தலேவர்கள், விரும்பவில்லே என்பதை "The Taxation Enpuiry Commission, however was of the view that when a panchayat is established, it should not start levying taxes immediately. Such a measure was bound to incur the resentment of the village people and if the panchayat were to refrain from such activity, they would earn contempt by inactivity." பணம் வசூலிக்காவிட்டால் காரியம் நடக்காது, வரி வசூலித்தால் கெட்ட பெயர் வந்து விடும், ஆகயினுலே வரி வசூலிப்பதிலே குந்தகம் இருக்கிறது என்று டேக்ஸேஷன் கமிஷன் தன்னுடைய அறிக்கையிலே குறிப்பிட்டிருக்கின்றது. அதே நிலேமை தான் இப்போது கிராமப்புறத்தில் நீடித்திருக்கின்றது. ஆக, நீங்கள் எவ்வளவு வரி வசூலிக்கிறீர்களோ அந்த அளவு நாங்கள் பணத்தைத் தருகிறோம் என்று சொல்வதற்கு பதிலாக, பஞ்சாயத்துக்களானுலும் சரி, பஞ்சாயத்து யூனியன்களானுலும் சரி, வருவாய் வரக்கூடிய தொழில்களே நடத்த முன் வந்தால், சர்க்கார் மிகத் தாராளமான முறையில் மான்யங்களேக் கொடுத்தும், கடன்களேக் கொடுத்தும், உற்சாகப்படுத்தியும் ஊக்கமுட்டியும், திட்டங்களேப் போட்டுத் தந்தால், அந்தத் திட்டங்களின் பேரில் ஆட்சியாளர்கள் கவனத்தைச் செலுத்தி புறம்போக்கு நிலங்களேப் பயிர் செய்து பணம் சம்பாதிக்கிறோம் என்று சொன்னுலும், கலப்பு உரங்களேத் தயார் செய்து பணம் சம்பாதித்துக் கொள்கிறோம், அதற்குப் பணம் தேவை, ஆகவே அதை கடனுகக் கொடுங்கள் என்று கேட்டாலும் இவைகளுக்கெல்லாம் பணம் தருவதிலே தாராள மனப்பான்மையைக் காட்ட வேண்டுமென்று நான் ஆட்சியாளர்களேக் கேட்டுக்கொள்கிறேன்.

[Sri C. N. Annadurai] [24th September 1958

" வீட்டு வரி எந்த அளவுக்கு வசூலிக்கிறீர்களோ அந்த அளவுக்குத் தருகிறேம் " என்று சொல்வது, ஏட்டிலே பார்த்தால் மிக அழகாக இருக்கும். ஏட்டிலே பார்த்தால், 1,000 பேர்களைக் கொண்ட கிராமப் பஞ்சாயத்துக்கு ரூ. 1,250 வரும் என்று குறிப்பிட்டிருக்கிருர்கள். கிராமத் திலே எத்தனை வீடுகள் என்று கணக்கிட்டுச் சொல்லும்போது, கிராமத்திற் குள்ளே போய்ப் பார்த்தோமானுல், இரண்டு புதிய வீடுகள் கட்டப்படுகிற நேரத்திலே 20 பழைய வீடுகள் இடிந்து விட்டிருக்கின்ற அந்தக் காட்சி களைத் தான் பார்க்கலாம். இடிந்து போன பழைய வீடுகளைக் கட்டு வதற்கே பணமில்லாமல் இருக்கின்றது. இங்கே நகரத்தில் பணம் சம் பாதித்தவர்கள் பணம் சம்பாதித்து வந்திருப்பதை கிராமத்தார்களுக்குக் காட்டவேண்டுமென்பதற்காக வேண்டுமானுல் இரண்டு புதிய வீடுகளைக் கட்டுகிருர்கள். ஆகையினுலே வீட்டு வரி மூலமாக கிராமத்தில் போதிய பணம் வசூலாகும் என்று எதிர்ப்பார்த்தால் நிச்சயமாக நாம் ஏமாற்றம் தான் அடைவோம் என்பதனை நான் இங்கே பணிவன்போடு எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

அதோடு மட்டுமல்லாமல், கம்யூனிடி டெவலப்மெண்ட் ஸ்கீம் இவர் களிடத்திலே ஒப்படைக்கப்படுகின்ற காரணத்திஞல் பல நன்மைகள் வரும் என்று கூறுவதினுலே, இந்த மசோதாவோடு தொடர்பு கொண் டிருக்கின்ற கம்யூனிடி பிராஜெக்டைப் பற்றிக் கொஞ்சம் ஆராய வேண்டி யிருக்கிறது. இது வரையில் கம்யூனிடி பிராஜெக்ட் என்பது ஆளும் கட்சியினுடைய விளம்பரச் சாவடியாக இருந்து வந்திருக்கின்றது என்ற கருத்து மேலெழுந்தவாரியாகப் பரவியிருக்கிறது. ஆனுல் நிதியமைச்சர் அவர்கள் புள்ளி விவரங்களால் இதை மறுக்கவோ, அல்லது என்னு டைய பூர்வோத்திரத்தை எடுத்துக் காட்டி கோபமூட்டவோ செய்யலாம். இவைகளிலே எந்த முறையைக் கையாண்டாலும், நாட்டிலே மக்கள் கம்யூனிடி பிராஜெக்ட் என்பது ஆளும் கட்சியினருடைய விளம்பரச் சாவடி யாக இருக்கிறது என்று மேலெழுந்தவாரியாகக் கருதுகிருர்கள். அதைக் கொண்டு போய் கிராமத்திலே ஒப்படைப்பதால் மட்டும் நாட்டுக்கு நல்ல காரியங்கள் நடந்து விடாது என்று உணர்ந்து நிதி அமைச்சர் அவர்கள் துவக்கத்தில் சொன்னது போல கிராம ஆட்சிக்கும், கிராம வசதிக்கும் உள்ள தொடர்பை சற்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். கிராம ஆட்சிக்கு நல்ல திட்டங்களை அமைத்து விட்டால் வசதிகள் ஏற்பட்டுவிடாது, வசதிகளே இல்லாத இடத்திலே ஆட்சியும் நடக்காது. ஆகவே, கிராமத்திற்கு ஆட்சி முறை வேண்டுமானுல் தயாரித்துத் தரலாமே தவிர, வசதிகளை உண் டாக்கவேண்டிய பொறுப்பு இந்த மசோதாவிற்கு அப்பாற்பட்டு இருக்கின்றது. அப்பாற்பட்டு இருக்கின்றது மாத்திரமல்லாமல், கிராமத்தில் வறுமை இந்த மாமன்றத்திலுள்ள எந்தக் கட்சிக்காரர்களும் புறக்கணிக்க முடியாத அளவு ஓங்கி வளர்ந்திருக்கின்றது. கிராம மக்களுடைய வசதிகளை அதிகரிப்பதற்கான வழி வகைகள் என்ன என்பதனை இந்த நேரத்தில் எண்ணிப் பார்த்தால், இவ்வளவு வசதி அதிகரித்தால் இவ்வளவு வரி வசூலிக்கலாம், இவ்வளவு வரி வசூலித்தால் இவ்வளவு மாச்சிங் கிராண்ட் கிடைக்கலாம், இவ்வளவு மாச்சிங் கிராண்ட் கிடைத்தால் மொத்தத்தில் இவ்வளவு வரி சேரும், இவ்வளவு வரி சேர்ந்தால், அதன் மூலமாக அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயரும் என்று கணக்கிட முடியும். கிராமப்புறங்களிலே வசதிகளை அதிகரிக்க வழி வகை இருக்கின்றதா என்பதைப் பார்த்து உங்களுடைய வசதிகளை நீங்களே பெருக்கிக் கொள்ளுங்கள் என்று அவர்களுக்குப் பொறுப்புக் கொடுக்கப்பட்டிருக்கின்றது. பொறுப்புக்களை பங்கிட்டுக் கொள் வது தான் ஜனநாயகம் என்று நிதியமைச்சருடைய பார்வை என்னை கேட்கின்றது. தாங்கிக்கொள்ளக்கூடிய திட்டத்தைத் தரவேண்டிய பொறுப்பு ஆளுகின்றவர்களைச் சார்ந்ததாகும். உள்ளத்தால், உடலால் மெலிந்திருக்கின்றவர்கள் என்றுலும், பொறுப்பைக் கொடுத்து, வசதி களைக் கொடுத்தால், பொறுப்புக்களை நிறைவேற்றத் தக்க அளவுக்கு அவர் களுக்குத் திறமையிருக்கிறது. ஆகையினுலே இவைகளைச் செய்ய கிராமத்தி லுள்ள மக்களுக்கு வசதிகளைக் கொடுக்காமல் அவர்களுடைய திறமை யிலே குறை இருப்பதாகக் கருதாதீர்கள். ஒப்புக்கொண்ட எந்தப் பொறுப் பையும் அவர்கள் நிறைவேற்றுவார்கள். இவர்களிலே பலர் எதிர்கால

24th September 1958] [Sri C. N. Annadurai]

நிதியமைச்சர்களாக இருக்கக் கூடும், பலர் எதிர்கால முதலமைச்சர் களாக இருக்கக் கூடும். நிதியமைச்சர் சொன்னதைப் போல, படிக்காத வர்கள் என்ற காரணத்திற்காக யாரையும் மந்திரியாக ஆக்காமல் இருக்க மாட்டோம்—ஜனநாயகம் அதை அனுமதிக்காது. கிராம மக்களுக்கு சாதா ரணப் படிப்பிலே தேருவிட்டாலும், வானத்தைப் பார்த்து மழை எப் போது பெய்யும் என்று சொல்லத் தெரியும், பயிரைப் பார்த்து எப்போது அறுவடை செய்யலாம் என்று சொல்லத் தெரியும், உரத்தைப் பார்த்து எத்தனை கலம் விளையும் என்று சொல்லத் தெரியும். அவர்களுக்கு ஏற் பட்டிருக்கிற பயிற்சியை பகுத்தறிவால் கிடைத்த பயிற்சியை—இப்படிப்பட்ட மன்றங்களிலும் பயன்படுத்திக் கொள்ளலாம். இந்த மன்றத்திலே கூட இப்படிப்பட்ட கிராம மக்கள் வந்திருக்கிறார்கள். வேண்டுமானால் அவர்கள் பேசுவது நாம் பேசுகிற சட்ட நுணுக்கத்தைப் போல இல்லை என்று சொல்லலாமே தவிர அவர்களை மட்டமாக யாரும் கருத முடியாது. கிராமத்திலுள்ள நல்லறிவை கிராமத்திற்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்று வலியுறுத்திச் சொல்லுகிறேன், அதற்கு இந்த மசோதா விலே இடமிருந்தால் சேர்த்துக் கொள்ளுங்கள். நிதியமைச்சர் அவர்கள் "நீங்கள் மாற்றிக்கொள்ளத் தக்க திருத்தங்களை மட்டும் சொன்னால் நான் ஏற்றுக் கொள்கிறேன்" என்று சொன்னார்கள். அப்படி அவர்கள் சொல்வதற்குக் காரணம் நான் நினைக்கிறேன் "இவர்கள் எங்கே மாற்றிக் கொள்ளத் தக்க அளவுக்கு திருத்தங்களைச் சொல்லப் போகிறார் கள், ஏதாவது மேலெழுந்தவாரியாகச் சொல்வார்கள், அதற்கு ஏதாவது சாமர்த்தியமாக மூன்று நான்கு வாதங்களைச் சொன்னால் சரியாகப் போய் விடும்" என்று அவர்கள் சாமர்த்தியத்திலே நம்பிக்கை வைக்கிறார்களே தவிர, இதயத்தில் நம்பிக்கை வைக்கவில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM: உங்களுடைய சாமர்த் தியத்திலே எனக்கு நம்பிக்கை இருக்கிறது. உங்களுக்கு சாமர்த்தியக் குறைவு இருப்பதாக நான் நம்பவில்லை. (சிரிப்பு).

SRI C. N. ANNADURAI: நாம் இருவரும் ஒரே ரகத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம் (சிரிப்பு). இதயத்திலே அதிகமான அள வுக்கு அக்கரை காட்டி, கிராம மக்களை வாழ வைக்க இந்தச் சட்டத்திலே நன்மைகளைப் புகுத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, ஆட்சியாளரின் நோக்கத்தைப் பாராட்டுகிறேன், கிராம மக்களிடத்தில் இந்த அளவுக்கு அன்பும் அக்கரையும் செலுத்துவதை நான் பாராட்டுகிறேன். ஒரு சமயம் அவர்களும் ஓட்டர்கள் என்ற காரணத்தினால் இந்த அக்கரை ஏற்பட்டதோ என்ற ஐயத்தை இந்த நேரத்தில் தெரிவித்துக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஸ்தலஸ்தாபன சீரமைப்புத் திட்டமானது சென்ற இரண்டு மூன்று வருடகாலமாகவே இந்த சபை முன்பு ஒரு வெள்ளை அறிக்கையின் மூலம் சமர்ப்பிக்கப்பட்டு, அது இங்கே விவாதிக்கப்பட்டு, சட்டசபை அங்கத்தினர்களைக்கொண்ட ஒரு குழுவும் அதைப் பரிசீலிப்ப தற்காக ஏற்படுத்தப்பட்டது. நானும் அந்தக் குழுவிலே ஒரு அங்கத்தின ராக இருந்து பணியாற்றியுள்ளேன். அதிலுள்ள எல்லா விஷயங்களையும் எல்லோரும் சேர்ந்து பரிசீலனை செய்து, இப்பொழுது இந்த சபை முன்பு இந்த மசோதா சமர்ப்பிக்கப் பட்டிருக்கிறது. சட்டசபை அங்கத்தினர்கள் கொண்ட குழுவானது எவ்வாறு முக்கியமான கொள்கைகளை பரிசீலனை செய்து, விவாதித்து முடிவுகள் எடுக்கப்பட்டன, அதிலே எல்லா எதிர்க் கட்சியினரும் இருந்தார்கள் என்பதையெல்லாம் கனம் நிதி அமைச்சர் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். ஆனால், எதிர்க் கட்சியிலுள்ளவர்கள், அவர்களுடைய கொள்கைகளில் சில மாறுபட்ட கருத்துக்கள் இருந்த போதிலும், அவற்றை அநேக இடங்களில் வெளியிட்டிருக்கிறார்கள். இதிலே முக்கியமாக கவனிக்கவேண்டியது என்னவென்றால், இந்த மசோதாவானது கொள்கை அடிப்படையில் வருகிறதா அல்லது நடை முறையில் இருக்கக்கூடிய மற்ற மசோதாக்களைப் போல் வருகிறதா

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [24th September 1958

என்பதைப் பற்றி யோசிக்கவேண்டும். என்னைப் பொறுத்தவரையில் இந்த மசோதாவானது, சர்க்காருடைய கொள்கை அடிப்படையின் கீழ் தான் வருகிறது என்று நினைக்கவேண்டியிருக்கிறது. நானும் ஒரு ஜில்லா போர்டு அங்கத்தினராக அநேக ஆண்டுகள் இருந்திருக்கிறேன். பின்னால் ஜில்லா போர்டு தலைவராகவும் பணி ஆற்றியுள்ளேன். ஜில்லா போர்டுகளை ரத்து செய்யவேண்டுமா அல்லது அவைகள் இருக்கவேண்டுமா என்ற பிரச்னை எழுந்தது. ஜில்லா போர்டுகள் சரிவர பணியாற்றி வந்தனவா, எந்த முறையில் பணியாற்றின, ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் ஏற்பட்டுள்ள ஸ்தல அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் சில வேலைகள் ஜில்லா போர்டுகள் மூலமாக நடத்தப்பட்டபொழுது, அவைகள் நன்றாக பணியாற்றி வந்தனவா என்பதைப் பற்றியெல்லாம் நாம் நன்றாக யோசிக்க வேண்டும். என்னைப்பொறுத்தமட்டில், இந்த ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் நிறைய பொருள் உதவி சர்க்காரால் ஜில்லா போர்டுகள் மூலம் கொடுக்கப்பட்டு இந்த ஸ்தல அபிவிருத்தி திட்டங்களெல்லாம் நல்ல முறையில் நடந்து வந்தன என்பதுபற்றி நாம் மறுக்கவே முடியாது. 1920-ம் வருஷத்திலே அமுலுக்கு வந்த ஜில்லா போர்டு சட்டத்தை ரத்து செய்து, பின்னால் 1950-ம் வருஷத்தில் ஏற்படுத்தப்பட்ட பஞ்சாயத்து சட்டத்தையும் ரத்து செய்து, இப்பொழுது ஒரு புதிய மசோதாவை நாம் சட்டசபை முன்பு கொண்டு வந்திருக்கிறோம். என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம் என்னவென்றால், ஜில்லா போர்டுகள் அரசியல் காரணங்களுக்காகத் தான் எடுக்கப்பட்டன என்பது தான். ஆனால் ஜில்லா போர்டுகள் " அவுட் மோடட் ", சுமார் 40 வருஷங்களாக இருந்து வருகின்றன, இப்பொழுது ஒவ்வொரு கிராமத்திலும் பஞ்சாயத்து ராஜ்யம் அமைக்கவேண்டும் என்று நம்முடைய தேசீய பிதாவும் மற்றவர்களும் சொன்ன அடிப்படையின்கீழ் ஜில்லா போர்டுகளை ரத்து செய்து, பஞ்சாயத்துக்களை அமைக்கவேண்டும் என்ற கொள்கையில் இப்பொழுது இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது என்பதுபற்றி அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இன்னும் அநேகம் பேர்களும் சொல்லியிருக்கிறார்கள். ஆனால், ஐந்தாண்டுத் திட்டம் இம்மாதிரி செய்வதினால் நல்ல முறையில் நடக்குமா, பஞ்சாயத்துகளுக்கும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கும் பொருளாதார வசதி இருக்கிறதா, இவைகளெல்லாம் எந்த வகையில் நடக்கும் என்பதுபற்றி நன்றாக யோசித்துப் பார்க்கவேண்டும். இப்பொழுது பஞ்சாயத்துகளுக்கும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கும் கொடுக்கும் அதிகாரம் பூரணமாக இருக்கிறதா என்பது பற்றியும் நாம் யோசிக்கவேண்டும். இதுபற்றி தேசீய பிதாவான காந்தி அவர்கள் சொல்லியதை படித்துக் காட்ட விரும்புகிறேன் :

12-10 p.m.

" **My idea of village life is that the village should be a complete repuplic independent of its neighbours for its own vital wants. Thus, every village's first concern will be to grow its own food crops and cotton for its cloth. The village must be a self-sufficient unit and must be a self-governing body.** " என்றெல்லாம் சொல்லியிருக்கிறார்கள். இப்பொழுது ஜில்லா போர்டுகளை அரசியல் காரணங்களுக்காக எடுத்துவிட்டு, பஞ்சாயத்துகளை ஏற்படுத்தி, அதற்கு மேல் மேற்பார்வை செய்வதற்காக ஒவ்வொரு பிளாக் டெவலப்மெண்டு ஏரியாவுக்கும் ஒரு யூனியன் கவுன்சில் ஏற்படுத்தி அவர்கள் மூலமாக நிர்வாகத்தை நடத்தவேண்டுமென்றெல்லாம் இப்பொழுது இந்த மசோதாவில் கூறப்பட்டிருக்கிறது. நன்றாக ஜில்லா போர்டுகள் பணியாற்றிவந்தாலும், ஸ்தல அபிவிருத்தித் திட்டங்கள் நன்றாக நடந்துகொண்டிருக்கும் சமயத்தில், ஐந்தாண்டுத் திட்டம் ஒரு விதமாக நடந்துவரும் சமயத்தில் இவைகளை மாற்றுவதற்குக் காரணம் என்ன என்று பலபேர்கள் என்னிடம் கேட்டார்கள். முக்கியமாக, இம்மாதிரிச் சீர்திருத்தம் செய்வதில் ஐந்தாண்டுத் திட்டம் நல்ல முறையில் நடக்குமா என்பதுபற்றி நாம் சற்று யோசனை செய்யவேண்டும். அரசியல் அமைப்பு சட்டத்தின் 40-வது பிரிவு பின்வருமாறு கூறுகிறது.

24th September 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

**" The State shall take steps to organize village panchayats and endow them with such powers and authority as may be necessary to enable them to function as units of self-government "** இப்பொழுது கொண்டுவரப்பட்டிருக்கும் இந்த மசோதாவில் பிளாக்கு டெவலப்மெண்டு ஏரியாவில் இருக்கும் ஆபீஸர்கள் கமிஷனராக வரப் போகிறார்கள், பஞ்சாயத்துகளுக்குப் போதுமான சுதந்திரம் கொடுக்கவில்லை, கொடுக்காததன் காரணமாக அவர்கள் நல்லபடி பணியாற்ற முடியுமா என்பதுபற்றி ஒரு அபிப்பிராயம். முக்கியமாக என்னைப்பொறுத்த வரையில், நான் ஜில்லா போர்டு தலைவராக இருந்த சமயத்தில் இந்த ஆபீஸர் ஜில்லா போர்டு செகரிடரியாக இருந்து நன்றாக பணியாற்றி வந்தார். கமிஷனர்களுக்கு அவ்வளவு தூரம் பவர் கொடுக்க வேண்டுமா என்று பார்க்கும்பொழுது, அந்த அதிகாரம் பூராவும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளாக இருக்கும் பஞ்சாயத்துத் தலைவர்களுக்கும், யூனியன் தலைவர்களுக்கும் கொடுக்கவேண்டுமென்பது தான் என்னுடைய அபிப்பிராயம். அப்படிக் கொடுத்தால் தான் பஞ்சாயத்துகள் நல்ல முறையில் நடைபெறும். எக்ஸிகியூடிவ் ஆபீஸர், கமிஷனர் இவர்களுக்கு அதிக அதிகாரம் கொடுப்பதன் காரணமாக அநேக காரியங்களில் ஊழல்கள் ஏற்பட்டு நிர்வாகம் நல்ல முறையில் நடக்காது என்பது என்னுடைய அபிப்பிராயம். அதுபற்றி ஒரு பெரிய படித்தவர் எழுதியிருப்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன் :

One experienced civilian say is as follows : " One is inclined to look upon the village panchayat as the ancient nursery of self-government and communal unity. But it is forgotten that the old village panchayat was the expression of the self-contained village community, and that it did not look to any external sanctions for the exercise of its authority. The panchayat of the present day is not a village organisation, it is a limb of the State, midwifed, fed and protected by the Government, officially controlled by rules and regulations, and it is related to the old village panchayat in the same way in which the nudism of a nudist colony is related to the nudism of the savage . . . The good of the village is decided by the Planning Commission at Delhi. Disputes relating to the village panchayat are adjudicated upon in the High Court. The village of the present day is nothing more than a collection of houses inhabited by men who no longer belong to a ' community '." ஆகையால், இந்த ஐந்தாண்டுத் திட்டமானது எப்படி டில்லியிலிருந்து நிறுவப்படுகிறதோ, அதேமாதிரி பஞ்சாயத்து திட்டங்களெல்லாம் நம்முடைய சர்க்காரால் நிறுவப்படப்போகிறது. அப்படி நிருவப்படுமானால், எப்படி ஐந்தாண்டுத் திட்டங்களை நல்ல முறையில் நாம் நிறைவேற்ற முடியும் என்பதுபற்றி நாம் சற்று யோசிக்கவேண்டும். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுடைய ஒத்துழைப்பு வேண்டும். தலைவர்களெல்லாம் ஒன்று சேர்ந்து இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு ஒரு ஒற்றுமை ஏற்படவேண்டுமென்று நிதி அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். மந்திரிகள் கொள்கைகளை வகுத்தாலும், பயிற்சிபெற்ற உத்தியோகஸ்தர்கள்தான் அந்தக் கொள்கைகளை நிறைவேற்றுகிறார்கள், அதன் காரணமாகத்தான் கமிஷனராக இருப்பவருக்கோ அல்லது எக்ஸிகியூடிவ் ஆபீஸருக்கோ பூரண அதிகாரத்தைக் கொடுத்தால்தான் எல்லாம் நல்ல முறையில் நடக்கும் என்பதுபற்றியெல்லாம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அநேக இடங்களில் சில நான்-அபிஷியல்ஸ் இருந்த போது சில ஊழல்கள் நடந்திருப்பது வாஸ்தவம்தான். ஆனால் நமக்கு சுதந்திரம் கிடைத்த பிறகு ஒவ்வொருவருக்கும் நன்றாக அரசியலில் ஈடுபட்டுப் பணியாற்றவேண்டும் என்று ஒரு ஆர்வம் ஏற்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கிராமமும் நன்றாக முன்னேறவேண்டும், ஒவ்வொரு கிராமத்திலும் நல்ல முறையில் . அபிவிருத்தித் திட்டங்கள் நிறைவேற்றப்படவேண்டும் என்று

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [24th September 1958

எல்லோருக்கும் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டிருப்பதின் காரணமாக, மக்களின் பிரதிநிதிகளுக்குப் பூரண அதிகாரத்தை கொடுத்து இந்தத் திட்டங்களை நிறைவேற்றுவது தான் நல்லது. அப்பொழுது தான் இந்தத் திட்டங் களும் வெற்றிகரமாக நிறைவேறும் என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதில், விரைவில் நம் தமிழ் நாட்டில் 500-க்கு மேற் பட்ட ஜனத்தொகையுள்ள கிராமங்கள்தோறும், பிளாக் ஏரியா தோறும், பஞ்சாயத்துகளும், பஞ்சாயத்து யூனியன்களும் ஏற்படுத்தப்பட்டால் மொத் தத்தில், 358 யூனியன்கள் ஏற்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அம்மாதிரி ஏற்பட்டால், செலவு அதிகமாகும். உத்தியோகஸ்தர்களும் அதிகமாகும், கட்டம் வரும். ஆகவே வரி போடுவதில், சுமார் 45 நயா பைசா வரை பஞ்சாயத்துகளுக்குக் கொடுப்பதாக 116-வது செக்ஷனில் சொல்லப்பட்டிருக்கிறது. மேற் கொண்டு போடுவதற்கு அவர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்படுகிறது. அதிகாரம் கொடுப்பது உசிதமில்லை என் பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அவர்கள் போட வேண்டிய வரிகளை நாமே நிர்ணயிக்க வேண்டுமென்று நினைக்கிறேன். நிதி சம்மந்தமான உப குழுத் தலைவனாக இருந்தேன். அதைப் பரி சீலனை செய்தோம். அதில் ரூபாய்க்கு 45 நயா பைசா வீதம் கிராமத்தில் வசூல் மேலும், அதற்கு மேற்கொண்டு வரிபோட அவர்களுக்கு பர்மிஷன் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன் காரணமாக சில சச்சரவுகள் ஏற்படும். எவ்வளவு என்று நாம் இவ்விடத்திலேயே நிர்ணயிக்க வேண்டும் என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். சட்ட பூர்வமாக அவர்களுக் குக் கொடுத்து விடுவது சரியானது அல்ல.

12-20 p.m.

தேர்தலைப் பற்றிப் பல அங்கத்தினர்கள் பேசினார்கள். மாறுபட்ட கருத்துக்களைத் தெரிவித்தார்கள். மக்களால் தான் தலைவர் தேர்ந்தெடுக் கப்படவேண்டும் என்று சொன்னார்கள். என் அனுபவத்தில் பார்த்திருக் கிறேன். அப்படி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்கள், பின்னால், தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களாக இருப்பதில்லை, மக்கள் பிரதிநிதியாக இருப்பதில்லை. அங்கே பல சண்டைகளும், பூசல்களும் ஏற்படுகின்றன. வார்டு மெம்பர்கள் எது சொன்னாலும் அவர்கள் ஏற்றுக்கொள்ளுவ தில்லை. ஆகவே, நாங்கள் அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலை வர்தான் இருக்கவேண்டும் என்று போட்டோம். அது வரவேற்கத் தக்கது. இதில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரவும் இடம் இருக்கிறது.

86-வது செக்ஷனில், எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்ட்படியுள்ள புறம்போக்கு நிலங்களெல்லாம் பஞ்சாயத்துக்கு வரவேண்டுமென்று கண்டிருக்கிறது. எஸ்டேட்ஸ் லாண்ட் ஆக்ட் போய்விட்டது. ரயத்துவாரி சட்டத்தின் கீழ், புறம்போக்குகள், இன்னும் மற்ற பொது நிலங்கள் பஞ்சாயத்துக்கு வரும்.

A Directive principle of State Policy embodied in the Constitution என்ற முறையில் கல்விக்காக நாம் மத்திய சர்க்காரிட மிருந்து நிதி பெறவேண்டும். கல்வியானது முக்கியமாக ஒரு ஸெண்ட்ரல் ஸப்ஜெக்ட். வயதுவந்தவர்கள் எல்லோருக்கும் free and compulsory education கொடுப்பது மத்திய சர்க்காரின் கடமையாகும். அப்படி யிருக்க, நம் வரிகள் அவர்களுக்குப் போய், நாம் கல்விக்காக ரூ. 12 கோடி செலவு செய்கிறோம் என்பது அவ்வளவு சரியல்ல. கல்வி பற்றி, மத்திய சர்க்காரே முழுப் பொறுப்பும் ஏற்றுக்கொள்ள வேண்டும். அரசியல் சட்டத்தின் கீழ் ஏற்பட்ட நிபந்தனைப்படி, அவர்களே அதை நடத்தவேண் டும். இதைப் பற்றியும், நிதிப் பரிசீலனைக் குழு ஒரு பாராவைப் போட் டிருக்கிறோம். ஆனால், மத்திய சர்க்கார் சில கிராண்டுகள் கொடுக்கிறார் கள் என்று சொல்லக்கூடும். ஆனால் அந்தப் பொறுப்பு பூரா மத்திய சர்க்காருடையது, அரசியல் சட்டத்தின் கீழ், நம்முடையது அல்ல. அவர் கள் நம் மூலமாக நடத்த வேண்டும் அவ்வளவுதான். தொகைகள் பூராவும் மத்திய சர்க்காரேதான் கொடுக்க வேண்டும். அவர்கள் கல்விப் பொறுப்பை ஏற்றுக் கொண்டால், நமக்கு இவ்வளவு செலவு ஏற்படாது. அதைப் பற்றியும் நம் சர்க்கார், மத்திய சர்க்காரிடம் வலியுறுத்த வேண் டும்என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

24th September 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

பெண்களுக்கு ஸீட் ரிசர்வேஷன் செய்ய வேண்டுமென்று சொல்லப் பட்டது. அதைப் பின்னால் ஆலோசனை செய்து கொள்ளலாம் என்று செய்திருந்தோம். ஆனால், அவர்களுக்கும் இடம் கொடுப்பது பற்றி விதி வரப்போகிறது. அதை நான் வரவேற்கிறேன். ஆனால், இம்மாதிரியெல்லாம் ஏற்படும்போது, முன் இருந்த ஜில்லா போர்டுகளைவிட, இந்தப் பஞ்சாயத்துக்கள் நல்ல முறையிலே வேலை செய்ய கிராமங்களிலே, முடியுமா என்று யோசிக்க வேண்டும். அவை நல்ல முறையிலே நடக்க வேண்டுமானால், திட்டங்கள் நல்ல முறையிலே நிறைவேற வேண்டுமானால், பஞ்சாயத்துத் தலைவருக்கும், யூனியன் ப்ரெஸிடெண்டுக்கும் பூர்ண பொறுப்பைக் கொடுத்து, நல்ல முறையிலே நடத்தினால்தான் சட்டம் நடைபெறும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

(Deputy Speaker in the Chair.)

இதில் மற்ற விஷயங்களைப் பற்றி, கிளாஸ்கள் டிஸ்கஷன் வரும்போது சொல்லலாம் என்று நினைக்கிறேன். முக்கியமாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். கணக்குகள் எல்லாம், ஆடிட்டர்களால் பரிசீலனை செய்யப்பட வேண்டும், அவர்கள் எல்லோரும், எக்ஸாமினர் ஆப் லோகல் பண்ட் அக்கௌண்ட்ஸ் கீழ் வேலை செய்ய வேண்டும். அவைகளையெல்லாம் செய்து இந்தப் பஞ்சாயத்துக்களும், யூனியன்களும் நல்ல முறயிலே வேலை செய்ய வேண்டும் என்று சொல்லிக்கொண்டு, என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

12-30 p.m.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்தப் பஞ்சாயத்து மசோதாவை சபையின் முன்கொண்டு வந்ததற்குப் பல அங்கத்தினர்கள் தங்களுடைய அபிப்பிராயங்களையும் திருத்தங்களையும் எடுத்துக் கூறி இருக்கிறார்கள். இன்று கனம் நிதி அமைச்சர் அவர்கள் கூறிய விளக்கத்திற்கு மேல் அதிகமாகப் பேசுவதற்கு இல்லை என்று நான் நினைக்கிறேன். இருந்தாலும் கனம் அங்கத்தினர்கள் இங்கே பேசியதற்காக எனது கடமையை உணர்ந்து ஒரு சில வார்த்தைகளைப் பேச முன் வந்திருக்கிறேன். அநேகமாக அங்கத்தினர்கள் எல்லோரும் இந்த மசோதாவை ஆதரித்துத்தான் பேசினார்கள். அதிலும் இது முக்கியமானது, அத்தியாவசியமானது என்று எல்லோருமே, ஒருவரைத் தவிர—ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். கனம் கோவிந்தசாமி அவர்கள் இந்த மசோதா அவசர அவசரமாகக் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்றும் சொன்னார். மற்றும் பஞ்சாயத்துக்களை அமைக்கும் கொள்கையில் சர்க்கார் ஆமை வேகத்தில் போகிறதாகவும் கூறியிருக்கிறார்கள். இந்த மசோதா அவசர அவசரமாகக் கொண்டு வரப்படவில்லை என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். இது சம்பந்தமாக சுமார் ஒரு வருஷத்திற்கு முன்பு ஒரு வெள்ளை அறிக்கை வெளியிடப்பட்டது. அதைப்பற்றி சட்டசபையில் விவாதிக்கப்பட்டு இந்தச் சபையும் மேல்சபையும் கொண்ட ஒரு பொறுக்குக் குழு அமைக்கப்பட்டு அந்தக் குழுவும் இந்த மசோதாவில் அமைக்கப்பட வேண்டிய ஷரத்துக்களைப்பற்றி விரிவாகப் பரிசீலனை செய்தது. அந்தக் குழு பல நாட்கள் கூடி, நன்றாக ஆராய்ந்து, இதைப்பற்றிப் பரிசீலனை நடத்தினார்கள். அந்தக் குழுவில் எல்லா கட்சிகளின் அங்கத்தினர்களும் அங்கம் வகித்தார்கள். அப்படி அவர்கள் பரிசீலனை செய்தபோது நிதி நிலைமை சரியாக இல்லை என்று அபிப்பிராயமும் தெரிவித்தார்கள். அதனால் சிலவற்றை அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. அந்தக் கொள்கையைப்பற்றிப் புனராலோசனை செய்ய வேண்டுமென்று அவர்கள் கருதியதால் ஒரு சப்-கமிட்டி நியமிக்கப்பட்டது. அப்படி ஒரு சப்-கமிட்டி ஏற்படுத்தி அதற்கு நமது எதிர் கட்சித் தலைவர் அந்த கமிட்டியின் தலைவராகவும் நியமிக்கப்பட்டது. அந்த சப்-கமிட்டி நிதி நிலைமையைப்பற்றி நன்றாகப் பரிசீலனை செய்து ஆராய்ந்து அறிந்து ஒரு அறிக்கையையும் சமர்ப்பித்திருக்கிறது. ஆகவே எல்லா கட்சியும் ஒன்று சேர்ந்து ஏகோபித்த முடிவுக்கு வந்த பிறகுதான் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆகவே இதை அவசர அவசரமாகக் கொண்டு வரவில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது தேர்தல்கள் தீவிரமாக நடந்து கொண்டு வருகிறது. மற்றும் தேர்தல்களை வெகு சீக்கிரத்தில் முடிப்பதற்கான நடவடிக்கைகளும் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகின்றன. முன்னால் இருந்த பஞ்சாயத்துகளில் இப்பொழுது தேர்தல்கள் நடைபெற்றுக்கொண்டு வருகின்றன. குறிப்பாக 1961-ம் வருஷம் அக்டோபர் மாதம் இரண்டாம் தேதிக்குள் எல்லாப் பஞ்சாயத்து யூனியன்களையும் அமைத்து விட வேண்டும் என்று அரசாங்கம் தகுந்த நடவடிக்கை எடுத்துக்கொண்டுதான் வருகிறது. அப்படியே எடுத்துக் கொள்ளப்படும் என்பதையும் நான் உறுதியாகக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

கடந்த வருஷம் இச்சபையில் ஒரு வருட காலத்துக்குள்ளே வெள்ளை அறிக்கையைப் பரிசீலனை செய்து முடிவு பெற்று மசோதா நடப்புக்கு வருமா என்று கவலை தெரிவித்த அங்கத்தினர்களும் இருந்தார்கள். ஒற்றுமையாலும், ஒற்றுமையான ஆலோசனையாலும் அயரா உழைப்பாலும் இன்று தான் இதில் வெற்றி கண்டிருக்கிறோம். இதே போல் நாம் வெற்றி காண்போம் என்ற மன உறுதி நமக்கு இருக்க வேண்டும். கனம் கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் சொன்னபடி இம்மசோதா ஜில்லா போர்டை ஒழித்துக் கட்ட கொண்டு வந்துள்ள மசோதா அல்ல, ஜில்லா அளவில் பணியாற்றி வந்த ஜில்லா போர்டுகளுக்குப் பதிலாக ஒவ்வொரு பிளாக்குகளிலும் ஒரு பஞ்சாயத்து யூனியன் வீதத்தில், அதாவது ஒரு ஜில்லா போர்டுக்கு பதிலாக சுமார் முப்பது பஞ்சாயத்து யூனியன்கள் அமைந்து ஜில்லா போர்டுகள் செய்து வந்த காரியங்களை பஞ்சாயத்து யூனியன்கள் வழியாக செவ்வனே செய்ய இம்மசோதா மூலம் ஏற்பாடு செய்யப்படும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இம்மசோதாவில் இங்கும் அங்கும் சில சிறிய குறைகள் தென்படலாம். அவைகள் குறைகள் ஏற்பட வேண்டுமென்ற முறையில் வந்ததல்ல. சிறு தவறுகள் ஏற்பட்டாலும் இப்பொழுது வந்திருக்கும் திருத்தங்களை, அதாவது அவசியம் எனத்தென்படும் திருத்தங்களை இன்னும் ஏற்றுக்கொள்ள அரசாங்கம் தயாராக இருக்கிறது. அப்படி ஏற்றுக்கொண்டு அந்தத் திருத்தங்களையும் அமுலுக்குக் கொண்டு வர வேண்டும் என்பது தான் அரசாங்கத்தினுடைய கருத்து.

இம்மசோதா பஞ்சாயத்துகளுக்கு அதிகமாய்ப் புதிய பொறுப்புகளை வழங்கக் கொண்டுள்ள ஷரத்துக்கள் அடங்கிய மசோதாவாகும். இவ்வளவு ஷரத்துக்கள் அடங்கிய மசோதா நம் நாட்டில் முதல் முதலாகத் தயாரித்த மசோதா இது தான் என்றும் சொல்லலாம்.

இந்த மசோதா நேற்றையதினம் வந்தபொழுது ஆங்கிலத்தில் எடுத்துக் சொன்னதில் ஒரு சில அங்கத்தினர்கள் வருத்தம் தெரிவித்தார்கள். ஆகையால் தான் நேற்று கொண்டு வந்த மசோதாவின் முக்கிய ஆறு அம்சங்களையும் எடுத்துச் சுருக்கமாய்த் தமிழில் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

முதல் முதலாக தற்போதுள்ள 11 ஜில்லா போர்டுகளுக்குப் பதிலாக ஏறக்குறைய 358 பஞ்சாயத்து யூனியன்களை 1961-ம் வருஷம் அக்டோபர் மாதம் இரண்டாம் தேதிக்குள் நிறுவ தக்க ஏற்பாடுகள் செய்யப்படும். இரண்டாவதாக, மேற்குறிப்பிட்ட தேதிக்கு முன்னதாகவே நம் ராஜ்யத்திலுள்ள ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு பஞ்சாயத்து ஏற்படுத்தப்படும். மூன்றாவதாக, பஞ்சாயத்து யூனியன்கள் அமைப்பதில் ஒரு புதிய முறை கையாளப்படும். அதாவது ஒவ்வொரு ப்ளாக்கிலுமுள்ள பஞ்சாயத்துகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு சபையாக இந்த யூனியன்கள் இருக்கும். அதனால் பஞ்சாயத்து யூனியன்கள் பஞ்சாயத்துகளுடைய ஒரு கூட்டுறவு ஸ்தாபனமாக இயங்க வழிவகை செய்யப்படும். நான்காவதாக, பஞ்சாயத்து யூனியன்கள் பஞ்சாயத்து இவைகளுடைய அதிகாரங்களை நிர்ணயம் செய்யும்போது ஒன்றினுடைய அதிகாரம் மற்றொன்றினுடைய அதிகாரத்துடன் மோதாமல் இருக்கும்படி பார்த்துக்கொள்ளப்படும். ஆரம்பக் கல்வி, தேசிய விஸ்தரிப்புத் திட்டத்

24th September 1958] [Srimathi Lourdhammal Simon]

திற்குட்பட்ட பல்வேறு அபிவிருத்தித் திட்டங்கள் ஆகியவற்றைச் செயலாற்றும் முழுப் பொறுப்பு பஞ்சாயத்து யூனியனுக்கு ஒப்படைக்கப்படும். ஐந்தாவதாக, பஞ்சாயத்து யூனியன்களுக்கும் பஞ்சாயத்துகளுக்கும் அவைகளின் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்குத் தேவையான நிதி வசதி கொடுக்கப்படும். கடைசியாக தேசிய விஸ்தரிப்புத் திட்டத்தின் கீழ் இயங்கிவரும் சிப்பந்திகளின் சேவைகளைப் பஞ்சாயத்து யூனியன்களுக்குத் தர தகுந்த ஏற்பாடுகள் செய்யப்படும்.

இன்னும் பஞ்சாயத்து யூனியன்களுக்கு சர்க்கார் கொடுக்கும் அதிகாரங்களும் சர்க்கார் எடுக்கும் அதிகாரங்களைப் பற்றியும் ஒரு விதமாக விளக்க விரும்புகிறேன்.

நேற்று சபைக்கு முன் ஆங்கிலத்தில் வைத்திருந்த மசோதாவை இன்று தமிழில் மொழி பெயர்த்து வைத்திருப்பது எல்லா அங்கத்தினர்களுக்கும் உதவியாக இருக்கும் என்று நம்புகிறேன். சர்க்க ர் இப்பொழுது உயர் தரப்பாடசாலைகளின் பொறுப்பை ஏற்கின்றது. அதோடு மேஜர் டிஸ்ட்ரிக்ட் ரோடுகளையும், ஆஸ்பத்திரிகளையும் எடுத்து அவற்றின் பராமரிப்பையும் ஏற்றுக்கொள்ளுகின்றன. புதுத் திட்டத்தின்படி ஆரம்பப் பள்ளிகளின் நிர்வாகத்தைப் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் ஏற்று நடத்தும். இன்னும் தேசீய விஸ்தரிப்புத் திட்டத்தின் கீழ் சமுதாய அபிவிருத்தித் திட்டம் இவைகளை நிறைவேற்ற சர்க்காரின் பொறுப்பை பஞ்சாயத்து யூனியன்களுக்கு அளிக்க இம்மசோதா சர்க்காருக்கு சிபார்சு செய்கிறது. பள்ளிக்கூடங்களை, பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்று நடத்துவதில் சில விளக்கங்கள் சொல்லுவது அவசியம் என்று நினைக்கிறேன். பள்ளிக்கூடங்களை நடத்துவதில் சிலருக்கு சில சந்தேகங்கள் ஏற்பட்டன. பள்ளிக்கூடங்கள் இப்பொழுது நடக்கிற மாதிரியே இனிமேலும் நடக்கும். பள்ளிக்கூடங்களை நடத்தும்போது ப்ரைவேட் மானேஜ்மென்ட் நடத்தும் பள்ளிக்கூடங்களுக்கு அரசாங்கம் என்ன உதவி அளித்து வந்ததோ அதே உதவியை இந்த யூனியன்களும் அளித்து வரும். இப்பொழுது இருக்கும் முறையிலேயே அதை நடத்துமே தவிர வேறு விதத்தில் நடத்தாது. வேறு ஏதாவது பிரச்னைகள் எழுந்தால் அதற்கு எடுகேஷனல் டிபார்ட்மென்ட் எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்ளும். இந்த மசோதாவைப்பற்றி அநேகமாக ஐம்பது அங்கத்தினர்கள் பேசியிருக்கிறார்கள். அவர்களுடைய ஆலோசனைகளையும் கேட்டு அவர்களுடைய திருத்தங்களைப்பற்றியும் எடுத்துச் சொன்னார்கள். அந்தத் திருத்தங்கள் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதைப்பற்றி அவர்கள் எல்லோரும் கூறியிருக்கிறார்கள். "**Mountain was in labour and brought fourth a mouse.**" என்று கனம் பழநிசாமி அவர்கள் குறிப்பிட்டார். கனம் அங்கத்தினர் ஒரு தனிப்பட்ட ஷரத்துக்காகவோ அல்லது கம்யூனிஸ்ட் கட்சி இந்த சபை எவ்வாறு இருக்கிறது என்பதைப் பார்த்தோக் கூறினார்கள் என்பது தெரியவில்லை. ஏனென்றால் இப்பொழுதுள்ள மசோதாவில் ஷரத்துக்கள் எவ்வளவோ இருக்கிறது. அதிகப்படியாக திருத்தங்கள் செய்ய வேண்டிய ஷரத்துக்கள் அல்ல, ஆனால் அவர் ஒரு குறுகிய மனப்பான்மையில் அதைக் கவனிக்கிறார் என்று நினைக்கிறேன். அந்தக் காலத்தில் அணில்கள் அழகான பாலம் அமைத்ததுபோல், நாம் இந்தப் பஞ்சாயத்துக்களை அமைத்து, அவை ஜனநாயகத்துக்கு ஒரு சிறந்த பாலமாக நல்ல முறையிலே அமைய வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம்.

12-40 p.m.

பஞ்சாயத்துக்களுக்குப் பல அதிகாரங்கள் கொடுத்து, பஞ்சாயத்து யூனியன்களை அமைத்து, மேற்பார்வை செய்வதற்கு எக்ஸிக்யூடிவ ஆபீசர், பஞ்சாயத்து ஆபீசர், கமிஷனர் என்றெல்லாம் நியமித்து, அவர்கள் ஏதாவது தவறு செய்தால் அவற்றைத் திருத்தி நடத்தக்கூடிய முறையில் அவர்களுக்குமேல் லோகல் போர்டுகள் இன்ஸ்பெக்டரையும் நியமித்து, தகுந்த முறையில் இந்த ஸ்தாபனங்கள் கண்காணிப்புடன் நடக்கவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கமாக இருக்கிறது. ஆகையால், "லிங்க் பிட்வீன் ஈச் அதர்" என்று இல்லாமல், அரசாங்கம் வேறு, கிராமங்கள் வேறு என்று ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாத நிலைமையை ஏற்படுத்துவது சரியாகாது என்று நான் நினைக்கிறேன்.

[Srimathi Lourdhammal Simon] [24th September 1958

தேர்தல் முறைகளைப்பற்றி பலமாகச் சில அங்கத்தினர்கள் கூறினார்கள். நல்ல எண்ணத்துடன், நல்ல மதிப்புக் கொடுத்துத்தான் இந்தத் தேர்தல்களை நடத்துவதற்கு அரசாங்கம் திட்டம் போட்டிருக்கிறது. ஆனால், வருந்தத்தக்க விதத்தில் சில அங்கத்தினர்கள் தூக்கிச்செல்லப்பட்டிருப்பாராயின், அதைக் காரணமாகக் கொண்டு, அதற்காக ஷரத்துக்களைத் திருத்தியமைப்பது முடியாத காரியம். இவ்வாறு நடக்கப் போகின்றது என்று கூட அரசாங்கம் எதிர்பார்க்கக்கூடாது. தேர்தலில் அங்கத்தினர்கள் கடத்திச் செல்லப்படுவார்களானால், அவர்களுடைய வாக்குரிமையும் காப்பாற்றப்பட வேண்டும் என்றுதான் அனைவரும் நினைப்போம். இவ்விதமாக உரிமையைப்பறி கொடுக்கக்கூடிய அங்கத்தினர்கள் இருந்தால், அதைக் காரணமாகக் கொண்டு தேர்தல் முறையே தவறானது என்று நினைப்பது சரியல்ல.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ விஸ்வநாதன் அவர்கள் பேசியபோது, தேர்தல் நடந்ததில் சில அங்கத்தினர்களைத் தூக்கிச் சென்றுவிட்டதாகவும், அப்படித் தூக்கி சென்றதன் காரணமாக அவர்கள் திரும்பி வந்து எதிர்க் கட்சிக்கு வோட்டளித்து விட்டார்கள் என்றும் சொன்னார்கள். பொது மக்கள் தங்களுடைய தவறுகளை உணர்ந்து இனிமேல் இவ்விதமான தவறுதல்களில் ஈடுபடமாட்டார்கள் என்று நான் நினைக்கிறேன்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ எல்லப்பன் அவர்கள், தீண்டாமை இன்னும் ஒழிய வில்லை என்பதற்காக மிகவும் வருந்தினார்கள். மக்களுடைய மனம் நன்றாக இருந்தால் இவ்விதமான தீண்டாமையும் நம்மைவிட்டு அகலும் என்றுதான் நான் நினைக்கிறேன். அரசாங்கம் எவ்வளவோ பெரிய தொகையை, பல லட்சக் கணக்கான ரூபாயை இந்தத் தீண்டாமை ஒழிப்புக்காகச் செலவிடுகிறது என்றும் சொல்லப்பட்டது. இது நிச்சயமாக வரவேற்கத் தக்கதுதான். இவ்வளவு பெரிய தொகையைத் தீண்டாமையை ஒழிப்புதற்காக அரசாங்கம் செலவிடுவது ஒவ்வொருவருமே பெருமை கொள்ள வேண்டிய விஷயம். அவ்வளவு பெரிய தொகையை அரசாங்கம் நல்ல விதமாகச் செலவிட்டு தீண்டாமையைப் போக்க வேண்டுமென்று முன்வந்தாலும், அதைத் தகுந்த விதமாக ஏற்றுக்கொள்வதற்கில்லாமல் மக்கள் இருந்தால் அது அரசாங்கத்தின் தவறு அல்ல. பல ஆண்டுகளாகப் பின் தங்கிய நிலையில் இருந்த நம் மக்கள், அந்த நிலையிலிருந்து மாறுவதற்கு, அல்லது ஒரு மாறுதலை அடைவதற்கு, தாமதம் ஏற்படுகிறது. அந்த நல்ல மனப்பான்மை இல்லாததினாலே அரசாங்கம் அளிக்கின்ற உதவிகளெல்லாம் உடனடியான பலனை அளிக்காமல், ஒருவிதத்தில் தாமதமாகப் பயன் அளிக்கிறது. ஆனால், என்னவாக இருந்தாலும், அரசாங்கத்தின் பல திட்டங்களால் தீண்டாமை நம் நாட்டிலிருந்து எவ்வளவு தூரம் ஒழிந்திருக்கிறது, அதிலும் குறிப்பாக, பின் தங்கிய மக்கள், ஹரிஜன மக்கள் எவ்வளவு தூரம் இதில் விசேஷமாக முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள் என்பது இங்கிருக்கும் ஒவ்வொரு அங்கத்தினருக்கும் நன்றாகத் தெரிந்த விஷயமே. ஆகையால், தீண்டாமை உடனடியாக ஒழியவில்லை என்று சொன்னால், அது அரசாங்கத்தினுடைய தவறு அல்ல; அரசாங்கம் பணத்தைச் சரியாக உபயோகப்படுத்தவில்லை என்பதும் அல்ல ; விரைவில் தீண்டாமை நம்மை விட்டு அகலும் காலம் வரும் என்று தான் அரசாங்கம் எதிர்பார்க்கின்றது.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ மூக்கையா தேவர் அவர்கள் மட்டும் தான் இந்த மசோதாவைக் கைவிடவேண்டும், அறவே கைவிடவேண்டும் என்று கூறினார்கள். முன்னேற்றம் அதிகமாய்விட்டது என்ற கருத்து கொண்டு, இனி முன்னேற்றமே இருக்கக் கூடாது என்ற கருத்திலே பேசினாரோ என்பது எனக்கு விளங்கவில்லை. சமுதாய அபிவிருத்தியைச் சீராக்கும் திட்டத்தை நாம் அடியோடு கைவிட்டால், நாம் ஜனநாயக லட்சியத்தை எப்படி அடைய முடியும் ? ஆகையால், இந்தத் திட்டத்தைக் கைவிட்டால் நம் நாட்டுக்கு நன்மை செய்யக்கூடிய, ஒரு திட்டத்தை அமைக்க முடியாமல் போய்விடும் என்று நான் கூறிக்கொள்வேன்.

24th September 1958] [Srimathi Lourdhammal Simon]

கனம் அங்கத்தினர் ஸ்ரீ மாரிமுத்து அவர்கள் பேசும்போது, அதிகப்படியான் வரிகளைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். வரியை அதிகப்படுத்தவேண்டுமென்பதற்காக இந்த மசோதா உருவாக்கப்படவில்லை. ஆனால், செலவினங்கள் அதிகப்படுகின்றன. அந்தச் செலவினங்களை, வரியை உயர்த்தாமல் எவ்வாறு நாம் சமாளிக்க முடியும் என்பதற்கான வழிவகைகளைக் கொண்டுவருவதுதான் இந்த மசோதாவின் நோக்கம். இந்த மசோதாவின் திட்டமே வரியை அதிகப்படுத்துவது என்பது அல்ல.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆதிமூலம் அவர்கள், "அம்பர் சர்க்கா என்றும், சர்வோதயம் என்றும் சொல்லி வரி விதிக்கின்றார்கள்" என்று சொன்னார்கள். நல்ல திட்டங்கள் நம் கிராமத்திலே ஏற்படுகின்றன; அதற்காக உள்ள செலவினங்களைச் சமாளிப்பதற்காகத் தனிப்பட்ட வரி விதிக்கும் திட்டங்களைக் கொண்டுவந்து நிறைவேற்றுகிறோமே தவிர, அதனால் பொது மக்கள் பாதிக்கப்படவேண்டும் என்பது சர்க்காருடைய அபிப்பிராயம் அல்ல என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னும் இந்த மசோதாவுக்கு அனேக திருத்தங்கள் வந்திருக்கின்றன. அவைகளையெல்லாம் இன்னும் பரிசீலனை செய்து, அவற்றிலே அவசியமானதை ஏற்றுக்கொள்வதற்கும் அரசாங்கம் தயாரகத்தான் இருக்கிறது. கனம் நிதி அமைச்சர் அவர்கள் கூறினதுபோல், நல்ல ஒரு திட்டத்தை, நல்லதொரு அமைப்பை நன்கு பரிசிலனை செய்துதான் கொண்டுவரவேண்டும் என்பதுதான் எல்லோருடைய அபிப்பிராயமாக இருக்கிறது. அந்த வகையில்தான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிடிருக்கின்றது.

திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் கனம் ஸ்ரீ அண்ணாதுரை அவர்கள் பேசும்போது, ஆளும் கட்சி நிறைவேற்றி விடவேண்டும் என்று ஒரு மசோதாவைத் தயாரித்து, கொண்டுவந்திருக்கிறது என்று சொன்னார்கள். விவாதத்திற்குக் கொண்டுவரவேண்டாம் என்பது ஆளும் கட்சியினுடைய அபிப்பிராயமே அல்ல. அப்படி ஒரு கொள்கை இருக்குமானால், இதைப் பரிசீலனை செய்வதற்கு ஒரு குழுவை அமைத்து, அதைக் கொண்டு பரிசீலனை செய்திருக்கவே வேண்டாம். கனம் அங்கத்தினர்களும் இதிலுள்ள குறைகளை எடுத்துக்காட்டினார்கள். அவைகளையெல்லாம் கவனத்தில் கொண்டு, அந்தக் குறைகளைப் போக்குவதற்குத்தான் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொண்டு வருகிறோம். இதிலே, எதிர்க் கட்சிகளும் விவாதிக்க பூரண உரிமை இருக்கிறது. கிராமங்களிலே நாணயமானவர்களோ, தகுதி உடையவர்களோ இல்லை என்று அரசாங்கம் கருதவில்லை. நம் நாட்டார்கள் தகுதியுடையவர்கள் என்றாலும், தகுந்த முறையில், ஒழுங்கான முறையில் இந்தத் திட்டத்தைக் கொண்டு வந்தால்தான் பரஸ்பரம் அரசாங்கத்திற்கும் கிராமங்களுக்கும் ஒரு தொடர்பு இருக்கும்படி செய்ய முடியும். அப்படித் தொடர்பு இருந்தால்தான், கிராமங்களுடைய நலன்களையும் காப்பாற்றியவர்களாவோம். கிராமங்கள் நல்ல முறையில் பரிபாலனம் செய்யப்படவேண்டும், கிராமத்திலே நல்ல திட்டங்கள் நிறைவேற்றப்படவேண்டும் என்ற எண்ணத்திலேதான் இந்த மசோதா தயாரிக்கப் பட்டிருக்கிறது. கிராமத்திலே ஒற்றுமை ஏற்படுவதற்கான முறையிலேதான் அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கிறதே தவிர ஏதோ ஒரு தனிப்பட்டவருக்கு அதிகாரம் கொடுத்தால், அவர் சரியாக கிராமத்தைப் பரிபாலனம் செய்யமாட்டார் என்ற கருத்து அரசாங்கத்திற்கு இல்லவே இல்லை.

அது மட்டுமல்ல, கிராமங்கள் ஒழுங்காக நடப்பதற்கும், கிராமங்கள் செலவினங்களைத் தாங்குவதற்கும் அரசாங்க உதவி தேவையாக இருக்கிறது. காந்தி மகான் ஒவ்வொரு கிராமமும் அதனதன் தேவைகளை அதுவே பூர்த்தி செய்து கொள்ளும் விதத்தில் அமையவேண்டுமென்றார். அந்த நிலைமைக்கு நாம் இன்னும் வரவில்லை. அந்த நிலைமையைக் கொண்டுவருவதற்கு இவ்விதமான திட்டங்களைக் கொண்டுவந்து, அதற்கான முயற்சிகளை எடுத்துக்கொண்டுவருகிறோம்.

[Srimathi Lourdhammal Simon] [24th September 1958

அரசாங்கம், நல்ல தாய் கசப்பான மருந்தைத் தேனோடு கலந்து கொடுத்துவிடுவது போல, இதைக் கொண்டு வந்திருக்கிறது. இந்தத் திட்டம் நல்ல முறையிலே நிறைவேறுமானால், அதிலேதான் அரசாங்கம் மகிழ்ச்சி அடையும். நோயுற்றதுபோல் நம்முடைய நாடு பின்னுற்று இருக்கிறது. அந்த நோய் அகலுவதற்கு இந்த மசோதா நல்ல மருந்து போல் வந்திருக்கிறது. அது நல்ல பலனளிக்கும் என்றுதான் நான் நம்பு கிறேன்.

கனம் நிதி அமைச்சருடைய பார்வையிலிருந்தே அவர் என்ன நினைக் கிறார் என்று அறியும் சக்தியுடைய திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் அரசாங்கத்தின் நல்ல எண்ணத்தை அறியும் சக்தியையும் அடையவேண்டுமென்று நான் மிகவும் விரும்புகிறேன். (ஆரவாரம்.) கனம் எதிர்க்கட்சித் தலைவர் இந்தப் பரிசீலனையில் நன்கு கலந்து கொண்டு, அவர்களுடைய கடமையுணர்ச்சியை நன்றாய்ப் பிரயோஜனப் படுத்தி, இந்தப் பரிசீலனைக்குத் தகுந்த ஆதரவு அளித்து அதிகமான பிரச்னை கொண்டு வருவதற்கு இடம் கொடுக்கவில்லை என்றுதான் நான் நினைக்கிறேன். இந்தப் பரிசீலனையில் பங்கெடுத்துக்கொண்ட ஒவ்வொரு அங்கத்தினருமே, இது சரியான முறையில் பரிசீலனை நடந்தது, சரியான முறையில் ஒவ்வொருவருடைய அபிப்பிராயங்கள் கவனிக்கப்பட்டது என்பதை ஏற்றுக்கொள்வார்கள். ஆகையால், அவர்கள் இன்று பேசினதில் எதிர்க்கட்சியில் இருப்பதின் காரணமாக எதிர்த்து நிற்கவேண்டும், என்ற நிலைமையை அகற்றி, இதற்கு அவர்களுடைய சம்மதத்தைத் தெரிவித்ததற்காக நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

இந்தப் பஞ்சாயத்து மசோதாவை ஆதரித்து, தக்க ஆலோசனைகள் கூறியதற்காக கனம் அங்கத்தினர்கள் எல்லோருக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். ஸ்தல ஸ்தாபன சட்டசபை கமிட்டிக்குத் தலைமை வகித்து அவ்வப்போது ஏற்பட்ட பிரச்னைகளைப் பரிசீலனை செய்து, ஏகமனதாக நல்ல முடிவுக்கு வரும்படி ஊக்கத்துடன் உதவியை அளித்த கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். இந்த மசோதாவை வெற்றிகரமாகக் கொண்டு வருவதற்குப் பூரண ஒத்துழைப்பு அளித்து எதிர்க் கட்சித் தலைவர் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் அவர்களுக்கு நான் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அத்துடன் இக்கமிட்டி அங்கத்தினர்கள் எல்லோருக்குமே எனது நன்றி உரித்தாகுக. இந்தக் கமிட்டி நடவடிக்கை களுக்கு அவ்வப்போது வேண்டிய ரிப்போர்ட்டுகளும், மற்ற அறிக்கைகளும் கஷ்டம் பாராமல், திறமையாகக் கொடுத்துதவிய ஸ்தல ஸ்தாபன இலாகா காரியதரிசி ஸ்ரீ ஆர். ஏ. கோபாலசாமி அவர்களுக்கும், அந்த இலாகாவின் துணைக் காரியதரிசி ஸ்ரீ எஸ். கிருஷ்ணசாமி பிள்ளை அவர்களுக்கும், மற்றும் இதில் சம்பந்தப்பட்ட எல்லோருக்கும் என் மனமார்ந்த பாராட்டுதலையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY : இந்த மசோதாவைப் பொறுக் குக் கமிட்டிக்கு விட வேண்டுமென்று நான் முதலில் திருத்தம் கொடுத் திருந்தேன். என்னுடைய கருத்துக்கு மதிப்பு அளிக்கும் வகையில் பொது விவாதத்தையும் இரண்டு நாட்களில் இருந்து மூன்று நாட்களாக்கி, பின் பும் நான்கு நாட்கள் ஷரத்துவாரியாகப் பரிசீலனை செய்வதற்கும் ஒதுக்கி ஆக எட்டு நாட்கள் இந்த மசோதாவில் பரிசீலனைக்குக் கொடுத்திருப்பத னாலும், திருத்தங்கள் கொடுத்திருப்பவர்களை எல்லாம் கூட்டி வைத்துக் கொண்டு, உண்மையிலேயே இந்த மசோதாவில் காணப்படும் குறைகளை நீக்குவதற்குத் தக்க பரிசீலனையை சர்க்கார் நடத்துவதன் காரணமாகவும் நான் என் திருத்தத்தை வலியுறுத்தவில்லை.

The amendment of Sri A. Govindasamy was, by leave, with- drawn.

24th September 1958]

DEPUTY SPEAKER : The question is :

'That the Madras Panchayats Bill, 1958 (L.A. Bill No. 33 of 1958) be taken into consideration.'

The motion was put and carried.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 9 a.m. tomorrow.

The House then adjourned



## APPENDIX I.

[Vide answer to starred question No. 477 asked by Sri N. K. Palanisami at the meeting of the Legislative Assembly held on 24th September 1958 page 598 supra.]

**The following steps have been taken to control Filaria :—**

Filariasis is prevalent fairly extensively in Chingleput, Tanjore and South Arcot districts and in moderate degree in the districts of North Arcot, Tiruchirappalli and Kanyakumari. Under the National Filaria Control Programme, four Filaria Control Units have been sanctioned. The State Government meet the expenditure on staff, contingencies, cost of laboratory equipment, materials, etc., and the Government of India supply free of charge insecticides, larvicides, transportation and spraying equipments. Each unit is intended to cover a population of three lakhs.

2. The control operations under the National Filaria Control Programme are designed to destroy the mosquitoes by anti-adult and anti-larval measures on the one hand and by destruction of the parasites in the infected persons by the administration of the drug Hetrazan, on the other hand. Each control area will be intensively operated on to secure interruption of transmission of filariasis.

3. The four control units are functioning at Kumbakonam (Tanjore district), Chingleput (Chingleput district), Vellore (North Arcot district) and at Chidambaram (South Arcot district).

**The following statement shows the staffing of each unit :—**

| — | *Staff sanctioned for each unit.* | *Staff employed by the* Kumbakonam Control Unit. | Chingleput Control Unit. | Vellore Control Unit. | Chidambaram Control Unit. |
|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 1 Filaria Officer .. .. .. | 1 | 1 | 1 | 1 | 1 |
| 2 Research Officer .. .. | 1 | 1 | 1 | * | * |
| 3 Senior Entomologist .. .. | 1 | 1 | 1 | 1 | .. |
| 4 Health Inspectors .. .. | 2 | 2 | 2 | 2 | 2 |
| 5 Laboratory Assistant .. .. | 4 | 4 | 4 | 4 | 4 |
| 6 Upper Division Clerk .. .. | 1 | 1 | 1 | 1 | 1 |
| 7 Typist .. .. .. .. | 1 | 1 | 1 | 1 | 1 |
| 8 Drivers .. .. .. .. | 2 | 2 | 2 | 1 | 1 |
| 9 Peons .. .. .. .. | 5 | 5 | 5 | 4 | 3 |

* Due to dearth of qualified and trained Health Officers, these posts have not been filled up.

24th September 1958]

4. The Filaria Control Unit functioning at Kumbakonam has carried out control measures in the urban and rural areas of Kumbakonam, Tiruvarur and Nagapattinam. One round of spray operations was conducted in these areas. This unit has now covered a population of three lakhs. The Filaria Control Unit at Chingleput has carried out pre-control surveys, clinical enquiries, clinical survey, disease enquiry and collection of entomological data in 74 villages in Chingleput district. The Filaria Control Units functioning at Vellore and Chidambaram are conducting preliminary pre-control surveys. Control measures in these areas will be started in due course.

All affected areas in the State will be taken up by the **Filaria Control Units.**



[24th September 1958

APPENDIX II.

[Vide answer to starred question No. 489 asked by Sri N. K. Palanisami at the meeting of the Legislative Assembly held on 24th September 1958, page 607 supra.]

*Facilities provided for the Fishermen living near Nagapattinam sea coast.*

Nagapattinam sea coast may be roughly taken as comprising the following fishing villages: (1) Serudoor, (2) Velankanni, (3) Kallar, (4) Akkarapettai, (5) Keechankuppam, (6) Nambiarnagar, (7) Samandanpettai and (8) Nagore.

The following is a brief account of the facilities provided to the fishermen of this area:—

(1) *Marketing facilities.*—The fishermen of Akkarapettai, Keechankuppam and Kallar were finding it difficult to market their catches and to come to Nagapattinam for that purpose as they had to cross Kaduvayar river by means of a ferry boat. After the construction of the Kaduvayar bridge with lift span, this difficulty of crossing the river which they were doing for years was solved as they freely make use of the bridge now. They are able to come to Nagapattinam at any time they like and they are getting better prices for their fish from the merchants as much expenditure on transport of fish is curtailed.

(2) *Fish godown.*—For the proper curing and storage of fish, two fish godowns have been constructed, one at Akkarapettai and another at Serudoor at a cost of Rs. 4,000 each. The Government have given Rs. 2,000 as subsidy and Rs. 2,000 as loan to Fishermen Co-operative Society which has to repay in ten annual instalments.

(3) *Training of fishermen.*—For training the fishermen in the handling of mechanised fishing boats and using the latest methods of deep sea fishing equipment, the Government have opened one Training Centre at Nagapattinam for the east coast. Originally it was proposed that this centre should work at Nagapattinam for 6 months and at Madras for 6 months but now it is decided that the Centre should work at Nagapattinam permanently. After the establishment of this training centre, the fishermen who were reluctant to take Nylon yarn are now coming forward to take to Nylon and other synthetic yarn for their nets.

(4) *Supply of Pablo boat.*—One Pablo boat with Terylene gill nets was given to the Akkarapettai Society by the Tanjore District Fishermen's Co-operative Federation. The boat is working

24th September 1958]

well. The demand for these boats is increasing. The boat on an average lands every month about 2,000 lb. worth of fish, valued at Rs. 500.

(5) *Loans.*—Long-term loans for the purchase of Craft and Tackle were given to Akkarapettai Society and Nambiarnagar Society. The requests of other societies for such loans are also being considered. The Akkarapettai Society was given Rs. 10,725 and the Nambiarnagar Society Rs. 14,125. The amount is recoverable in 36 instalments at 5¼ per cent interest. The collection of the amount is postponed in the off-season.

(6) *Relief measures.*—Subsidised yarn and coir for the failure of the last Kola fishery was given to all the above villages to the tune of Rs. 9,500. Only half the cost of the yarn and coir was collected from the fishermen. Fourteen bales of 20s; 5½ bales of 10s and 5½ bales of 6s and 60 bundles of coir yarn were thus distributed.

(7) *Co-operative Societies.*—All the above villages have been brought under the fold of the Co-operative movement except Nagore. There are 171 members in Akkarapettai Society; 120 members in Nambiarnagar Society; 73 in Samanthanpettai Society; 96 members in Velankanni; and 27 members in Serudoor Society. Efforts are being made to enrol more members. The question of starting Fishermen Co-operative Societies at Nagore and Vettaikaranaruppu is under consideration.

(8) *Supply of milk powder.*—Five hundred and twenty lb. of milk powder received from the Rotary Club, Tanjore, was distributed to the children of fishermen during the time of Kola fishery failure. Fair price shops were also run at Akkarapettai, Nambiarnagar and Serudoor to tide over the crisis when the fishermen were in distress.

(9) *Weather warning signals.*—Weather warnings received from the Meteorological Office, Madras, about the forecast of squally weather were communicated to the fishermen for their safety. There are also proposals to put up signals at various fishing villages for alerting the fishermen about squally weather and storms.

(10) *Fishing Harbour, Ice-cum-Cold Storage plant and fish-meal plant.*—There is a proposal to construct a fishing harbour at Nagapattinam and also to put up a fish-meal factory in that area. Under the Plan programme the Government have recently approved the proposal of the Director of Fisheries to set up a three-ton ice plant and cold storage at Nagapattinam during the current financial year. The scheme is estimated to cost Rs. 1,30,000 non-recurring and Rs. 51,300 recurring.

(11) *School building.*—A school building started under Local Development works to meet the requirements of the fishermen of Akkarapettai is nearing completion.

[24th September 1958

## APPENDIX III.

[Vide answer to starred question No. 490 asked by Sri A. Vedarathnam at the meeting of the Legislative Assembly held on 24th September 1958, page 608 supra.]

### *Training courses—" Home Crafts", " Citizenship".*

Consequent on the reorganization of Secondary Education introduced in 1948, training courses for home craft and citizenship are organized for teachers during summer vacation of each year. The training course in home craft is given to L.T. and B.T. teachers for a period of four weeks in the Lady Willingdon Training College. Citizenship training courses are organized for B.T. students passing out of Government and aided Training Colleges and to pupil-teachers passing out of Training Schools both from Government and non-Government institutions. The period of the training course is normally 10 days.

2. Citizenship training courses are conducted in the Government Training Colleges at Madras, Pudukottai, Komarapalayam, Vellore, Coimbatore; in the aided Training Colleges at Madras, Karaikudi, Palayamkottai, Perianaickenpalayam, Tiruparovthurai, Tuticorin, Madurai; in the Government Training Schools at Madras, Aduthurai, Tiruchirappalli, Coimbatore, Paramakudi, Madurai, Vellore and in the aided Training Schools at Madras, Ambur, Tranquebar, Porayar, Dindigul Idayangudi, Ambasamudram, Tiruchirappalli, Salem, Karadibavi, Dharapuram, Madurai, Srivilliputhur, Palayamkottai, Nazereth and Ootacamund.

3. The idea is that teachers in secondary schools will not be able to impart instruction in high schools in accordance with the syllabus without the special training. Candidates are selected for training by the Director of Public Instruction. There are no specified districts from which candidates should be selected. The selection is made by the Director of Public Instruction from all the districts in the State according to needs. The discretion is vested in the Director. The entire expenditure connected with the training courses is met from the State Funds; the Government of India do not make any contribution. There is no intention to increase the training centres beyond the present requirements. Particulars of the expenditure incurred on the courses are given below for a period of three years :—

| *Year.* | *Name of the course.* | *Number of teachers trained or to be trained.* | *Expenditure.* |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| | | | RS. |
| 1956-57 | Home Craft .. .. .. | 25 | 4,000 |
| 1957-58 | Do. .. .. .. | 25 | 3,800 |
| 1958-59 | Do. .. .. .. | 25 | 3,800 |
| 1956-57 | Citizenship .. .. .. | 3,2[illegible]5 | 26,590 |
| 1957-58 | Do. .. .. .. | 2,900 | 22,440 |
| 1958-59 | Do. .. .. .. | 4,741 | 32,900 |

Home Science has been introduced as a subject under the scheme of Bifurcated Courses in 22 Secondary Schools in the State.

24th September 1958]

## APPENDIX IV.

[Vide answer to starred question No. 492 asked by Sri V. K. Kothandaraman at the meeting of the Legislative Assembly held on 24th September 1958, page 609 supra.]

*Statement showing the number of cases of caste repression launched in 1957–58 in the State (districtwise) under the Temple Entry Authorization Act, etc.*

| Serial number and name of the district. | Number of cases of caste repression launched in 1957–58 in the State. | | |
|---|---|---|---|
| | Temple Entry Authorization Act, 1948. | Untouchability (Offences) Act, 1955. | Civil Disabilities Act, 1951. |
| (1) | (2) | (3) | (4) |
| 1 Kanyakumari | .. | .. | .. |
| 2 Salem | .. | 6 | .. |
| 3 The Nilgiris | .. | 3 | .. |
| 4 Tanjore | .. | 13 | 1 |
| 5 South Arcot | .. | 5 | .. |
| 6 Ramanathapuram | .. | 7 | 3 |
| 7 Tirunelveli | .. | 1 | 2 |
| 8 Chingleput | .. | .. | .. |
| 9 Tiruchirappalli | .. | 12 | .. |
| 10 Madurai | .. | 23 | 1 |
| 11 North Arcot | .. | 7 | .. |
| 12 Coimbatore | .. | .. | 11 |
| 13 Madras City | .. | .. | [illegible] |

[24th September 1958

## APPENDIX V.

[Vide answer to starred question No. 501 asked by Sri P. Doraisami Reddiar at the meeting of the Legislative Assembly held on 24th September 1958 page 615 supra.]

*Loans granted to Harijans and to others.*

| *Nature and purpose of the loan.* | *Harijans.* | | *Others.* | |
|---|---|---|---|---|
| | *From 1st April 1957 to 31st March 1958.* | *From 1st April 1957 to 27th August 1958.* | *From 1st April 1957 to 31st March 1958.* | *From 1st April 1957 to 27th August 1958.* |
| (1) | (2) | (3) | (4) | (5) |
| | RS. | RS. | RS. | RS. |
| 1 Short-term credit (purchase of seeds, manures and bulls). | 8,945 | 5,620 | 50,770 | 43,640 |
| 2 Minor Irrigation (sinking of wells and purchase of pumpsets). | 2,800 | 2,000 | 26,900 | 8,650 |
| 3 Rural Housing Scheme.. .. | 210 | 4,200 | 4,120 | 800 |
| Total .. | 11,955 | 11,820 | 81,790 | 58,090 |